அனைத்திந்திய நூல் வரிசை

# பஞ்சாபியரின் பரம்பரைக் கதைகள்

தொகுப்பாசிரியர்

**ஹரிபஜன் சிங்**

தமிழாக்கம்

**வி. சுப்ரமணியன்**



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

Cover painting by Phoolan Rani

அச்சுக்கோப்பாளர் : விநியோகிப்பாளர்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிமிட்.
41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை-600 098

---

1993 (சக 1914)

ISBN 81-237-0371-6
ரூ. 42.00
Original Title : KISSA PUNJAB
Tamil Title : PUNJABIYARIN PARAMPARAI KATHAIGAL
வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
ஏ-5, கிரீன் பார்க், புது டில்லி - 110 016.

---

# பொருளடக்கம்

# முன்னுரை

பஞ்சாபி மொழியும் கலாசாரமும் தமது சொந்த மண்ணை ஒட்டி வாழ்வதில் ஆர்வம் கொண்டவையாக உள்ளன. நாகரீகத்தின் ஒவ்வொரு புதிய, சிக்கலான வளர்ச்சியையும் தம்முடையதாக்கிக் கொள்ளப் பஞ்சாபிகள் தயாராக உள்ள னர் என்பது உண்மைதான். அதே சமயம், தமது பண்டைய, எளிமையான வாழ்வு முறைகள் பேரிலும் அவர்கள் விசுவாசம் கொண்டுள்ளனர். இத்தகைய எளிமைக்குச் சான்றாக, பஞ்சாபிகளின் சமய வாழ்வும் கலைகளும் உள்ளன. அந்த மண்ணில் பிறந்த சமயக் கோட்பாடுகள், நாட்டியம், கவிதை, சிற்பம், முதலிய எதுவுமே சிக்கலானதாக இல்லை. புதுமைகளை வெகு வேகமாக ஏற்றுக் கொள்ளும் பஞ்சாப், ஏதோ ஒரு வகையான எளிமையின் பலம் கொண்டுதான், திடமாக நிலைத்து நிற்கிறது. பஞ்சாபின் கால்கள், அதன் பண்டைய, ஆழமான பரம்பரையில் வேரூன்றி நிற்கின்றன.

புதுமை, பரம்பரை மரபு ஆகிய இரண்டின் இயல்பான ஒன்று கலத்தலே, பஞ்சாபிக் கதைகளின் விசேஷ குணமாகும். மத்திய காலத்தில் தன் பிரதேசத்தின் மீது படையெடுத்தவர்களிடமிருந்து பஞ்சாப், பல விஷயங்களை ஏற்றுக் கொண்டது. ஆனால், தனது எளிமையான இயல்பி னால், தமக்கே உரித்தான அச்சில் அவற்றை வார்த்துக் கொண்டதால் அவற்றின் உண்மையான வடிவம் சொந்த நாட்டைச் சேர்ந்ததா, அல்லது வெளிநாட்டினுடையதா என்று கண்டு கொள்வது இயலாமல் இருக்கிறது. மொழி ரீதியில் பார்த்தால், அது வெளியேயிருந்து வந்ததாகத் தோன்றுகிறது.

கவிதையின் பஞ்சாபிப் பாணி, ஆக்கிரமிப்பாளர்களுடன் கூடவே பஞ்சாப்புக்குள் நுழைந்து அங்கு தங்கி விட்டதாகத் தோன்றுகிறது. ஆனால், பஞ்சாபின் கவிகள் தமது மண்ணி லிருந்தே ஹீர்–ரான்ஜா, மிர்ஜா–ஸாஹிபான், ஸோஹ்னி–மஹீவால், ஸஸ்ஸீ–புன்னு, பூரன் பகத், ராஜா ரஸாலு ஆகியோரின் காதல் கதைகளை தோன்றச் செய்தனர். இன்று, இக்கதைகளை ஒதுக்கிவிட்டுப் பஞ்சாபிக் காவிய பரம் பரையை, கற்பனை செய்வது கூட இயலாத காரியம்.

பஞ்சாபி மக்கள், முன்பின் அறியாதவர்களைக் கூட மிகுந்த ஆசையுடன், தமது குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகச் செய்து கொள்கின்றனர். ஸோஹ்னி–மஹீவால், ஸஸ்ஸி–புன்னு கதைகளின் நாயகர்களை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். குஜராத்திற்கு அருகில் உள்ள பிரதேசத்தைச் சேர்ந்த, குயவர் குடியைச் சேர்ந்த பெண்ணான ஸோஹ்னி யின் மீது காதல் கொண்ட, மாடு மேய்க்கும் அழகிய இளைஞனான மஹீவால், மத்திய ஆசியாவைச் சேர்ந்த ஒரு அரச குடும்பத்துடன் தொடர்பு கொண்டிருந்தான். இதே போன்று, சலவைத் தொழிலாளர் குடும்பத்தில் வளர்ந்து பெரியவளான ஸஸ்ஸியின் காதலனும் பலூசிஸ்தானத்தைச் சேர்ந்தவன்; கஷ்டமான பயணம் செய்து பாலைவனத்தைக் கடந்து வந்தவன். ஸைதியை விரும்பும் முராத்தும் பலூசிஸ் தானத்தைச் சேர்ந்தவன்தான். தமது இதயம் மிகவும் விரும்பும் கதைகளிலும், பஞ்சாபின் கவிகள் வெளிநாட்டினரை நாயகர் களாக அமைத்திருந்தனர். பஞ்சாபியரின் வாழ்க்கை மற்றும் அவர்களின் கலை ஆகியவற்றின் அபூர்வமான அம்சம் இதுதான். இரு நாடுகளிடையே மோதலைக் குறிக்கும் சம்பவங்கள் ஏதும் இந்தக் கதைகளில் வருவதில்லை, என்பதும் சந்தோஷப்பட வேண்டிய விஷயமாகும். வெளிநாட்டைச் சேர்ந்தவன், என்ற காரணத் திற்காக எந்த ஒரு நாயகனும் நிராகரிக்கப்படுவதில்லை. ஸஸ்ஸியின் தந்தை, தனது மகளை புன்னுவுக்கு மிக மகிழ்ச்சியுடன் மணம் செய்து கொடுத்திருந்தார். பஞ்சாபியல்லாதவனுக்கு தனது சுபாவத் துக்கு ஏற்ப உருவம் கொடுத்து, அவனைத் தனது குடும்பத்தில் ஒருவனாக ஆக்குவது என்பது, பஞ்சாபிக் கவிதைகளில்

மட்டுமல்ல, பஞ்சாபியரின் வாழ்க்கை முழுவதும் காணப்படும் விசேஷத் தன்மையுமாகும். பஞ்சாபி மொழி, அதன் கட்டிடக்கலை மற்றும் இசையிலும் இத்தகைய தன்மையைக் காண்கிறோம். பஞ்சாபின் பரந்த மனப்பான்மை, மற்றும் வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட நோக்கு ஆகிய அபூர்வமான குணங்களை இவை நமக்குக் காட்டுகின்றன.

பஞ்சாபிக் கதைகள் வெளிநாட்டினரைப் பஞ்சாபியினராக ஆக்குவதோடு நின்றுவிடாமல், பஞ்சாபி இளைஞர்களையும் வெளிநாட்டில் உள்ளவர்களின் காதலர்களாக உருவாக்கிக் காட்டுகின்றன. அக்கதைகள் தோற்றம் பெற்ற மத்திய காலத்தில் சாலைகள், ரயில்கள் போன்ற போக்குவரத்துச் சாதனங்கள் ஏற்பட்டிருக்கவில்லை. நூறு-இருநூறு மைல் தொலைவில் உள்ள ஊர்கள், மற்றும் தொள்ளாயிரம் மைல் தூரத்திலிருந்து பிள்ளை வீட்டார் வருவது, இவை இரண்டிலும் அச்சமயம் வித்தியாசம் ஏதும் இல்லை. நதிகள் மீது பாலங்கள் கிடையாது. ஆடி மாதத்தில் நதியையும், ஆவணி மாதத்தில் பாலைவனத்தையும் கடப்பது, ஒரே அளவு கடினமான காரியமாக இருந்தது. ராவி நதியைக் கடந்து போன பெண்ணை யாரும் சென்று சந்திப்பதோ, அங்கிருந்து யாரும் நதியைக் கடந்து வருவதோ இயலாத காரியம் என்ற பொருள் கொண்ட பழமொழி, நூற்றுக்கணக்கான ஆண்டுகள், மக்கள் மத்தியில் புழக்கத்தில் இருந்திருக்கிறது. ஆற்றைக் கடந்து விட்டால் வேற்று நாடு என்பது பொதுஜன வாழ்வில் சத்தியமான மொழியாக இருந்தது. இத்தகைய சூழ்நிலையில்தான் ஹீர்-ரான்ஜா கதை உருவாகியது.

பஞ்சாபிக் கதைகளின் எல்லா நாயகர்களும் பயணம் செய்து கொண்டிருப்பவர்களாக இருக்கின்றனர். யாத்திரைக்கும், பஞ்சாபிகளின் காதலுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது. தனது வீடு-வாசலைத் துறந்த ரான்ஜா, கையில் தடி ஏந்தி, அளவற்ற கோபத்துடன் நிற்கும் நிலையில் ஹீரைக் காணும்போது கூறுவதாக அமைந்துள்ள பாடல் மூலம் கவி வாரிஸ்ஷாவும், பிரேமை-பயணம் செய்தல் ஆகிய இரண்டின் இடையே உள்ள அசைக்க முடியாத உறவின் ஆழத்தை நமக்குச் சுட்டிக் காட்டுகிறார். பஞ்சாபிக் காதல்

கதைகளின் நாயகர்கள் மட்டுமல்ல; மக்கள் தலைவர்களும் கூட, தமது இல்லங்களிலிருந்து வெளியேறிய நிலையில்தான் பஞ்சாபியரின் பிரியத்துக்குத் தகுதி பெற்றுள்ளனர். சேவை புரிவதையே தனது வாழ்க்கையாகக் கொண்டிருந்த குரு நானக்கின் வாழ்வில் பெரும் பகுதி, நான்கு திசைகளிலும் யாத்திரை செய்வதிலேயே கழிந்தது என்பது நம் கண்ணமுன்னே உள்ள உதாரணமாகும். குரு கோவிந்த் சிங்கும், அவரது பிறப்பிலிருந்து மறைவு வரையிலும் தனது சொந்த நாட்டின் வெளியேதான் வாழ்ந்திருந்தார். இன்று கூட பஞ்சாபியரின் மிகப் பெரிய அபிலாஷை நெடுந்தூரப் பயணம் செய்வதை எதிர்பார்ப்பதாகத்தான் உள்ளது. அவர்களின் சிறப்பும், திறனும் தத்தம் பிரதேசங்களிலிருந்து விலகிய நிலையில்தான் வெளிப்பட இயலுமோ என்று தோன்றுகிறது. காதல் கதைகளின் நாயகர்களான ரான்ஜா போன்றோர், தமது பிரதேசங்களிலிருந்து தொலைவான இடங்களில்தான் தமது சாமர்த்தியத்தை வெளிப்படுத்துகின்றனர். ராஜா ரஸாலு, துல்லா பட்டி போன்ற பக்திமான்களும் வீர புருஷர்களும் இந்த நியதிக்கு ஏற்ப நடப்பவர்களாகவே காணப்படுகின்றனர். பூரன் தனது மாற்றாந்தாயின் கொடுமைகளின் காரணமாகத் தனது வீட்டை விட்டு வெளியேறினான். ஆனால் ராஜா ரஸாலு தன்னிச்சையாகவே வீட்டை விட்டு வெளியேறினான். இவ்விருவருக்கும் சந்நியாசிகள் போல வாழ்வதற்கு ஆசை இருந்தாலும், காதல் நேர்ந்து விட்டிருந்தது. பூரனைத் தன்வசமாக்கிக் கொள்ள, ராணி சுந்தரா முயற்சி செய்தாள். ஸ்திரிகளின் ஆட்சி நடந்து வந்த பிரதேசத்தின் ராணியாக சுந்தரா இருந்தாள். பஞ்சாபுக்கு வெளியே இருந்த ஒரு பிரதேசத்தை இது குறிக்கக் கூடும். சிரிகோட்டின் ராஜாவான ஸிர்கப்பிற்கு அப்போதுதான் பிறந்திருந்த மகள் கோகலாவைத் தனது வாழ்க்கைத் துணைவியாக, ராஜா ரஸாலு ஏற்றுக் கொண்டிருந்தான். ஸிர்கப்பின் ராஜ்யமும் பஞ்சாபுக்கு வெளியே இருந்ததாக அனுமானிக்கப்படுகிறது. துல்லா, பஞ்சாபில் பிறந்து வளர்ந்து தனது முழு வாழ்க்கையையும் அங்கேயே நடத்தினாலும், அவன் ஏற்றுக்

கொண்டிருந்த வேலை காரணமாக அவன் தன் வீட்டில் நிலைத்து இருக்க இயலவில்லை.

பஞ்சாபிக் கதைகளின் நாயகர்கள் வீடற்றவர்களாக மட்டுமல்ல, சிநேகிதர்கள் அற்றவர்களாகவும் உள்ளனர். வாழ்க்கைப் பயணத்தைப் பொறுத்தவரை நாம் எல்லோரும் தனியாகவே அதை நிர்ணயம் செய்து கொள்ள வேண்டியவர்களாக இருக்கிறோம்.... துணை என்று யாரும் கிடையாது. வீடற்ற, நண்பர்களற்ற இத்தகைய பயணத்தில் வெளியாரின் நல்லெண்ணம் மட்டுமே நமக்குத் துணையாக நின்று, சங்கடம் நேரும் போது ஆண்டவனைப் போன்று, நம்மிடம் வருகிறது. இந்த் நல்லெண்ணத்தினால்தான் தனது நாடு-வெளிநாடு என்ற பேதமும், அவற்றினிடையே உள்ள தூரமும் மறைகின்றன. அதன் பிறகுதான், பஞ்சாபின் அறிவுத் திறன் தனது உண்மையான ஒளியைப் பெறுகிறது.

இத்தகைய நாயகர்களின் கதைகளுக்கு நமது திறமை மிக்க கவிகள் எழுத்து உருவம் கொடுத்தனர் என்பது உண்மைதான்; ஆனால் அவர்கள் அவ்வாறு செய்வதற்கு வெகு காலத்திற்கு முன்பே, இக்கதைகள் பஞ்சாபி மக்கள் சமூகத்தில் ஆழமாக வேரூன்றி விட்டிருந்தன. பஞ்சாபின் கவிகள், நாயகர்களை மட்டுமல்லாமல், சில காதல் கதைகளையும், வெளியேயிருந்து பெற்றனர். லைலா-மஜ்னூ, ஷீரீ-ஃபர்ஹாத், ஸைஃப்-உல்முலூக் போன்ற கதைகளையும், நமது கவிகள் விரும்பினர். இவைகளைத் தமதாக்கிக் கொண்ட பஞ்சாபிக் கவிகள் அழகான காதல் கதைகளைப் பற்றிப் பாடினர். சில பஞ்சாபிக் கதைகள், பாரதத்தின் பண்டைய கால வாழ்வு முறையுடனும் சம்பந்தப்பட்டிருந்தன.

ஆனால் பஞ்சாபி சமூகம், தனது சொந்த மண்ணிலிருந்து பிறந்த கதைகளுக்கு எந்த அளவுக்கு அங்கீகாரம் அளித்ததோ, அந்த அளவுக்கு வெளியிலிருந்து வந்தவற்றுக்கு அளிக்கவில்லை. பஞ்சாபைச் சேர்ந்த நான்கு சிரஞ்சீவித் தன்மை வாய்ந்த கதைகள், நான்கு பஞ்சாபிக் கவிகளின் பெயர்களை, உலகம் உள்ளளவும் பிரகாசிக்கும்படிச் செய்து விட்டன. கவிகளின் பெயர்களும், கதைகளின் பெயர்களும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க இயலாதனவாக உள்ளன.

ஹீர்–வாரிஸ், ஸஸ்ஸி–ஹாஷிம். ஸோஹ்னி–ஃபஜல்ஷா ஆகிய பெயர்கள் மக்கள் மத்தியில் சரளமாகப் பரவியுள்ளன. இதேபோல், பீலுவின் மிர்ஜாவும், காதர்யாரின் பூரன் பகத்தும் இவற்றுடன் சேர்ந்து நினைவு கொள்ளக் கூடியனவாக உள்ளன. கவி மற்றும் நாயகர்களைப் பிரிக்கும் எல்லைக் கோட்டை வரைவது இயலாத காரியம். காவியக் கதைகளாக உருப்பெறுவதற்கு முன்பாக, இந்தக் கதைகள் மக்கள் மனத்தில் இடம்பெற்று நிலைத்துவிட்டன; ஆகவே இவ்வாறு பிரிக்க இயலாது. வாரிஸ், ஹாஷம், பீலு முதலான கவிகளின் கவிதைகள் மக்களால் விரும்பப் பெற்ற உடனேயே, மக்கள் சமூகத்தில் நிலைத்து நின்று விட்டன. ஒவ்வொரு கதையுடனும் சம்பந்தப்பட்ட மக்கள்–காவியத்தின் ஏதாவது ஒரு பாகத்தை இன்று கூட நாம் தேடிக் கண்டுபிடிக்க முடியும். இவ்வாறு, அனேக காவிய பாகங்களை மக்கள் தாமாகவே இயற்றுகின்றனர். உதாரணமாக

சலோ, ஸயியோ சல் வெருண் சலீயே
ரான்ஜே$_4$ தா$_3$ சுபா$_3$ரா நீ
ஹீர் நிமாணி இட்டாந் டோ$_4$வே,
ரான்ஜா$_4$ டோ$_4$வே கா$_3$ரா நீ

(இதன் அர்த்தம்: "தோழிகளே, விழாப் பார்க்கப் போகலாம், வாருங்கள். ஹீர், பாவம், செங்கல் சுமந்து கொண்டிருக்கிறாள்; ரான்ஜா, பாவம், பிசைந்த மண்ணைச் சுமந்து கொண்டிருக்கிறான்!)

இன்னொன்று:

ஸோஹனி ஹிஜர் தே$_3$ தீ3வே பா$_3$ல$_3$
கோயீ க$_2$பர் லயாவே மஹீவால் தீ$_3$

(அர்த்தம் : ஸோஹனி விரகமெனும் விளக்கை எரித்துக் கொண்டிருக்கிறாள். யாரேனும் சென்று மஹீவால் பற்றிய சமாசாரம் கொண்டு வர வேண்டுமே.)

மேலும் :

நா ஜாவீ ரான்ஜா$_4$ வே,
ஸானூ ப$_3$ஹரே க$_3$மா வி ரோட்$_3$ கே

(அர்த்தம் : ரான்ஜா, எங்களை அலட்சியம் செய்து, துக்கத்தில் மிதக்கச் செய்து விட்டுச் சென்று விடாதே!)

அதே போல்:
கோயீ ஜாவோ ஸயியோ நீ,
ரான்ஜண் நூ ல்யாவோ மோட்$_3$ கே
(அதாவது: தோழிகளே, உங்களில் ஒருத்தி சென்று, ரான்ஜாவைத் திருப்பி அழைத்துக் கொண்டு வாருங்கள்.)
சல் நியா கராயியே வே,
ரான்ஜு$_4$ணா தூ காலா மை கோ$_3$ரீ
(வா, நாம் போய் நியாயம் கேட்கலாம்; ரான்ஜா, நீ கறுப்பன். என் நிறம் வெள்ளை.)

இவ்விதமாக அனேக சிறு சிறு பாடல்களை மக்கள் தாங்களாகவே புனைந்து வருகின்றனர். மேலே குறிப்பிடப் பட்ட பாடல்கள் சில காலம் வரை மக்களால் உபயோகப் படுத்தப்பட்ட பின், வழக்கிழந்தன. ஆனால், துல்லா பட்டி மற்றும் சுந்தரி சம்பந்தப்பட்ட ஒரு காவிய பாகம் மட்டும் அமரத்துவம் பெற்று விட்டது. இன்று வரை லோஹ்டித் திருநாளன்று இளைஞர்கள், கீழ்வரும் பாடலைப் பாடித்தான் அன்பளிப்பைக் கோருகிறார்கள். கதையை என்னவோ மக்கள் மறந்துவிட்டனர். ஆனால் கீழ்வரும் பாடல் பகுதிகளை எந்த முகூர்த்தத்தில் அந்தக் கவி இயற்றினாரோ தெரியாது; அவை மக்களிடையே நன்றாக நிலைத்து விட்டன. இவற்றை மறப்பது இயலாத காரியம்.

சுந்தர் முந்த$_3$ரியே, ஹோ
தேரா கோன் விசாரா, ஹோ
து$_3$ல்லா ப$_4$ட்டி வாலா, ஹோ
து$_3$ல்லே தீ$_4$ ப்$_3$ யாஹீ, ஹோ
ஸேர் ஷக்கர் ஆயீ, ஹோ
கு டீ$_3$ தே$_3$ போ$_3$ஜே$_4$ பாயீ, ஹோ
குடீ$_3$ தா$_3$ லால் படாகா, ஹோ
குடீ$_3$ தா$_3$ ஸாலூ பாடா, ஹோ
ஸாலூ கோன் ஸமேடே, ஹோ
சாசா கா$_3$லீ தே$_3$ஸே, ஹோ
சாசே சூரீ குட்டீ, ஹோ
ஜிமீந்தா$_3$ரா லுட்டீ, ஹோ

*ஜிமீந்தா₃ர் ஸதா₃யே, ஹோ*
*கி₃ன்-கி₃ன் போலே லாயே, ஹோ*

இந்தப் பாட்டு ஆதாரமுள்ள ஒரு நாட்டுப் பாடல்; இந்தப் பாடலில் கதையின் இழைகள் முன்னுக்குப் பின்னாக மாறி இடம் பெற்றுள்ளன. இவ்வாறு நிகழ்வது நாட்டுப் பாடலின் இயல்பே. கதை என்னவோ மக்களுக்குத் தெரிந்துதான் இருக்கிறது; ஆனால் நாட்டுப் பாடலாசிரியன் அதற்குத் தான் விரும்பிய உருவத்தைக் கொடுக்கிறான். சுந்தரி தாயற்றவள்; தந்தையின் நிழல் கூட அவளுக்கு நினைவில்லை. அவளுடைய சித்தப்பா ஜமீன்தாராக இருந்தான். அவள் வசித்த பகுதி வழியாக அக்பர் பாதுஷா போவதாக இருந்தார்; அவர் முன் சுந்தரியை நிறுத்துவது என்று, ஜமீன்தார்கள் நிச்சயம் செய்தனர். கிராமத்தின் மிகச் சிறந்த அழகி (லால் படாகா)யும் எல்லோரையும் விட ஏழை (கிழிந்த சிவப்புப் புடவை அணிந்தவள்)யுமான பெண்ணைக் காப்பாற்றுபவன் யார்? விஷயம். துல்லா பட்டி வரை போயிற்று. துல்லா, ஏழை—எளியவர்களின் நன்மையை வேண்டுபவன்; அவன் உடனே, அவளைத் தன் மகளாகப் பாவித்து அவளது திருமணத்துக்கு ஏற்பாடு செய்தான். திருமணத்துக்கான கோலாகலமான ஏற்பாடுகளை, அந்த அவசரத்தில் செய்ய இயலவில்லை. ஒரு சேர் வெல்லச் சக்கரையை வைத்துத்தான் சிக்கனமாகவே திருமணத்திற்கான நாள் குறிக்கப்பட்டது. ஆனால், அவன் கொடுமைகள் புரிந்து வந்த ஜமீன்தார்களை நன்றாகக் கஷ்டப்பட வைத்தான்.

இவ்வாறான நாட்டுப் பாடல்களின் மூலம்தான் பஞ்சாபி நாயகர்கள், காதற்கதை உலகில் தமது இடத்தை ஏற்படுத்திக் கொண்டனர். காவிய நாயகர்களாவதற்கு முன்னர், அவர்கள் நாட்டுப் பாடல்களின் நாயகர்களாகிவிட்டிருந்தனர். பஞ்சாபின் சிக்கலற்ற, சாதாரணமான வாழ்க்கை முறையைத்தான், இந்த நாயகர்கள் நமக்குச் சுட்டிக் காட்டுகின்றனர். பஞ்சாபியரின் வாழ்க்கை முறைகள் பற்றிய கிட்டத்தட்ட எல்லா விவரங்களும் "சுந்தர் முந்தரியே" பாடலிலும், மற்ற பஞ்சாபிக் கதைகளிலும் காணப்படுகின்றன. மிகச் சிறந்த அழகை (லால் படாகா)யும் கிழிந்த உடையை அணியச்

செய்யும் ஏழ்மையையும், ஏதோ ஒரு விதமாக, ஒரே இடத்தில் இணையச் செய்துள்ளது பஞ்சாப். குயவர் குடியைச் சேர்ந்த ஸோஹ்னி, சலவைத் தொழிலாளி ஸஸ்ஸி, எருமை மாடுமேய்க்கும் அஜீம்பேக் மற்றும் ரான்ஜா ஆகியோர் பஞ்சாபின் எழில் மிக்க ஆனால் அத்துடன் ஏழ்மையும் கொண்ட வாலிபத்திற்குத்தான், யுவர்களுக்கும் யுவதி களுக்கும் தான் குறியீடாக உள்ளனர். ராஜகுமாரனான பூரன் மற்றும் ரஸாலுவின் கதை, மக்களால் விரும்பப்பட்டதாக ஆயிற்று. அதன் காரணம், அவன் அரசகுமாரனாக இருந்த போதிலும், அரச வாழ்வைத் தூக்கி எறிந்து விட்டு, ஏழ்மையான நிலையில் சுற்றிக் கொண்டிருந்ததுதான். பஞ்சாபி மக்களின் மேதாவிலாசம், வறுமையுடன் கூடிக் காணப்படும் சௌந்தரியத்தை ஏற்றுக் கொண்டுள்ளது.

மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கான மற்றொரு உரைகல், நல்லொழுக்கமாகும். மேலே கூறப்பட்ட பாடலில் துல்லா, சுந்தரியைத் தனது மகளாக ஏற்றுக் கொண்டான். ஹீர்-ரான்ஜாவின் காதலை, ஐந்து 'பீர்'கள் (இஸ்லாமிய ஞானிகள்) ஆதரித்தனர். பூரனுக்கு, குரு கோரக்நாத்தின் வரம் கிட்டியிருந்தது. இவ்வாறு, சிறிதும் பெரிதுமான பல விவரங்கள் ஒவ்வொரு கதையிலும் கிடைக்கின்றன. பிரேமையோ, ஏழ்மையோ, அதேபோல திருட்டுத்தனமோ, நற்குணமோ எதுவாக இருந்தாலும், ஒவ்வொரு இடத்திலும் நல்லொழுக்கமானது, வாழ்வு முறையில் காணப்படும் ஓர் உண்மையாக, இடம் பெற்றுள்ளது. நல்லொழுக்கம், ஏழ் மையை யும், தன் இயல்புக்கேற்றபடி, சீர்பெற்றதாகச் செய் துள்ளது.

நமது காதல் கதைகளின் மூன்றாவது முக்கியமான குணம், தனிமனிதனின் சுதந்திர மனோபாவமாகும். குடும்பமானது, இத்தகைய சுதந்திர மனோபாவத்திற்கு எதிராகப் பல முறை முட்டுக் கட்டை போடுகிறது; ஆனால் தனிமனிதன் குடும்பக் கட்டுப்பாடுகளைக் கடந்து செல்ல விரும்புகிறான். தனி மனிதன், குடும்பம் ஆகியவற்றிடையே ஏற்படும் மோதல் காணப்படாத பஞ்சாபிக் கதைகளை கற்பனை செய்து பார்ப்பது இயலாத காரியம். அந்த அளவுக்கு, இந்த மோதல்,

பஞ்சாபிக் கதைகளின் விசேஷத் தன்மையாக உள்ளது.

பஞ்சாபிக் காதலர்கள், கலாச்சாரக் கட்டுக்கோப்புக்குள் வாழ விரும்பினாலும் குடும்பம் தரும் கட்டுப்பாடுகளை அவர்கள் அங்கீகரிப்பதில்லை. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கலாச்சாரத்தின் கீழ் வாழ்வதை ஒவ்வொரு பஞ்சாபியும் ஏற்றுக் கொள்கிறான். ஆனால் அதற்குட்பட்டு வாழும்போது, தன் வாழ்க்கையைப் பற்றிய முடிவைத் தானே செய்து கொள்ள அவன் விரும்புகிறான். எங்கே, ஒரு தனிமனிதனின் நன்மை-தீமைகளை குடும்பம் தீர்மானிக்க விழைகிறதோ, அங்கே மோதல் ஆஜராகிறது. சுந்தரியின் சித்தப்பா, அவளுடைய விருப்பத்துக்கு விரோதமாக அவளைப் பாதுஷாவின் கேளிக்கைப் பொருளாக ஆக்க விரும்புகிறான். அதன் பிறகு, மக்களின் தர்ம உணர்வு அந்த எண்ணத்தை எதிர்க்கிறது. ஹீர், ஸோஹ்னி மற்றும் ஸாஹிபாவும் தத்தம் திருமணத்தைத் தாமே நிச்சயித்துக் கொள்ள விரும்பி தமது குடும்பத்துடன் மோதுகின்றனர். ஸஸ்ஸிக்கு அவளது குடும்பத்தின் அனுமதி கிடைத்து விடுகிறது. ஆனால் அவளது கணவனின் குடும்பம் முட்டுக்கட்டை போடுகிறது. பூரனின் துக்கங்களுக்கெல்லாம் மூலகாரணம் அவனது மாற்றாந்தாயும், அரசனான தந்தையும் அவர்களது இஷ்டப் பிரகாரம் எடுத்த முடிவுகளே ஆகும். தாய்-தந்தையர், தமது மகனை, தமது விருப்பத்துக்கு ஏற்றவாறு உருவாக்க முனைகின்றனர். ஆனால், மகன், தனது சுதந்திரமான போக்கில் எந்த விதமான சமரசமும் செய்து கொள்ளத் தயாராக இல்லை. ரஸாலுவின் கதையும், வணங்க வைக்க இயலாத அதி தீவிரமான சுதந்திரப் போக்கின் கதைதான்.

பாரதத்தின் மத்திய க்காலத்துக் கதைகள் அனைத்திலும், பஞ்சாபி நாயக-நாயகிகளின் இயல்புகள்தாம் தனித் தன்மை வாய்ந்தவை என்று கூற வேண்டும். குடும்பத்தின் கட்டுப்பாடுகளுக்கு எதிரான, இத்தகைய கடுமையான எதிர்ப்பு, வேறு எங்கும் காணப்படவில்லை. சமூகம் என்பது, ஒரு பலம் மிகுந்த, ஆனால் உருவமற்ற யதார்த்தமாகும். ஒரு தெளிவற்ற உருவில் சமூக எதிர்ப்பு நமது கதைகளில் காணப்படவில்லை.

கதைகள், மக்களின் வாழ்வுக்கு வெகு அருகில் உள்ளன; கவிகள், சமூக வாழ்வின் மிக அருகில் சென்று, தெளிவான விஷயங்கள் தருவதில்தான் கவனம் செலுத்தியுள்ளனர். சமூகத்தின் பாகங்களில் மிகச் சக்தி வாய்ந்ததும் தெளிவானதுமான அங்கம் குடும்பமாகும். மத்திய காலத்துப் பஞ்சாபிப் படைப்புகளில் இது பற்றிய புதுமையான வர்ணனை, ஒரு சவாலின் உருவத்தில் அமைந்துள்ளது. இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், கதா பாத்திரங்கள் தமது கடைசி மூச்சு உள்ள வரை தமது சுதந்திரத்தைக் குறித்து உணர்வும் பொறுப்பும் உள்ளவர் களாகவே இருக்கின்றனர்; ஆனால் எந்த ஒரு சமயத்திலும் அவர்கள் கட்டுப்பாட்டின் எல்லையை மீறுவதில்லை. ஹீர், தனது கடுமையான போராட்டத்தின் மூலமாக ரான்ஜாவை அடைகிறாள். ஆனால் அதன் பிறகு அவள் தனது பெற்றோர்களின் ஒப்புதலை நாடுகிறாள்; அவர்களை அண்டி இருந்தே, தனது புதிய :வாழ்க்கையை ஆரம்பிக்க அவள் விரும்புகிறாள். புன்னு சென்றுவிட்ட பிறகு, ஸஸ்ஸி அவன் பின்னால் ஓடுகிறாள். ஸோஹ்னி, தனது முதல் காதலுக்கு உண்மையாக இருந்ததனால் தனது காதலனைச் சந்திக்கிறாள். ஆனால் சமூகத்தின் நடைமுறைகளுக்கு ஏற்ப நடந்த தனது திருமணத்தை முறித்துவிட அவளால் இயலவில்லை. யோகியான பின்னரும், பூரனின் மனத்தில் அவனது தாய்-தந்தை மீது மரியாதை இருக்கிறது. மேலும் தனது மாற்றாந்தாய்க்கும் வரமளிப்பதற்காக அவன் தனது நகருக்குத் திரும்புகிறான். இந்தக் கதைகளிலிருந்து கிடைக்கும் இத்தகைய பல விவரங்களிலிருந்து, பஞ்சாபியினரின் நடைமுறை வாழ்வில் அவர்கள் தமது சுதந்திரப் போக்கை, சமூகத்தின் கட்டுக்கோப்புக்குள்ளடங்கியதாக வைத்துக் கொள்ள விரும்பு கின்றனர், என்பது தெரிகிறது. ஆனால் சமூகக் கட்டுக் கோப்பானது ஒரு தளையாக மாறி, சுதந்திரத் தன்மையின் கழுத்தை நெறிக்க ஆரம்பித்தால், அவர்கள் அத்தகைய கட்டுக்கோப்பை எதிர்த்துத் திடமாக நிற்கின்றனர். தான் தோன்றித்தனமாக நடந்து கொள்ள, சுதந்திர உணர்வுக்கு அனுமதி கிடையாது; ஆனால் கட்டுக்கோப்புக்கும், விலங்காக

மாற உரிமையில்லை.

பஞ்சாபி சமூகத்தின் உள்ளம் கதைகளை விரும்பிய அளவுக்கு வேறு எந்த ஒரு காவிய ரூபத்தையும் விரும்பியதில்லை. மத்திய காலத்திய பஞ்சாபி சாகித்தியத்தில் காணப்படும் சில திடமான சமுதாயக் கோட்பாடுகள் வாழ்வு நெறிகளாக ஆகிவிட்டன. அவை நமது மனத்தில் மிக ஆழமாக இறங்கிவிட்டன. ஆனால் அவை பஞ்சாபியினரிடையே ஒருமித்த ஒப்புதலைப் பெறவில்லை.

பஞ்சாபிக் கதைகளின் சரீரமும் ஆத்மாவும் அவர்களுடைய வாழ்க்கை நெறியுடன் தொடர்பு கொண்டவை. நிறுவனங்களின் இறுக்கத்திலிருந்து விடுதலை பெற்ற, ஒரு வகையான மக்கள்-தருமமாகும் இது. உண்மையில் பஞ்சாபிகளின் வாழ்வு முறைகளில், மக்கள்தருமமே நிலவுகிறது. இந்த தர்மத்தின் நேரிடையான அர்த்தம், பஞ்சாபிகள் எந்த இடத்தில் பிறந்து வளர்ந்தாலும் அந்தந்த இடங்களின் வாழ்க்கை முறைகளைத் தமதாக்கிக் கொண்டு விடுகின்றனர் என்பதுதான். தமது இதயத்தினுள் உணரும் உண்மையைத் தயக்கமின்றி அவர்கள் வெளியிடுவர். அந்த உண்மையைக் கட்டுக்கடங்காது போகாமல் பார்த்துக் கொள்கின்றனர்; அதேசமயம், வெளியே நிலவும் பிரத்தியட்ச உண்மை தமது சுதந்திரப் போக்குக்கு மூக்கணாங் கயிறு போடுவதையும் அவர்கள் அனுமதிப்பதில்லை. நல்லொழுக்கத்தின் நடு வழிதான் பஞ்சாபிகளின் வாழ்வு முறை மற்றும் பஞ்சாபிக் கதைகள் அனுசரிக்கும் வழியாக உள்ளது. இதே வழியில் செல்வது, தினசரி வாழ்க்கையில் காரிய சாத்தியமானதுதான்.

சுருக்கமாகச் சொல்லுமிடத்து, எளிமை, நல்லொழுக்கம், சுதந்திர மனப்பான்மை மற்றும் கட்டுப்பாடு ஆகியவற்றின் ஓர் அபூர்வக் கலவையே, பஞ்சாபிக் கதைகளின் உலகமாகும்.

**—ஹரிபஜன் சிங்**

# ஹீர் ரான்ஜா

**மோகன் சிங்**

ஹீரின் கதை, முகலாயர்கள் பாரதத்துக்கு வருவதற்குச் சில காலத்துக்கு முன்பு நிகழ்ந்த ஒன்றாகும். அப்போதுதான், ராஜபுத்திரர்கள் புதிதாக முஸல்மான்களாக மாறியிருந்தனர். தாரா நகரத்தைச் சேர்ந்த ராஜபுத்திரனான ஸியால், சகர்கஞ்சைச் சேர்ந்த பாபா ஃபரீத் மூலமாக, இஸ்லாமிய மதத்தைத் தழுவினார். (இந்த ராஜா ஸியாலின் தகப்பனார் பெயர் ராய் சங்கர்) இத்தகையோர், முஸல்மான்களாக மாறிய பின்பும் தமது இந்து சமய ரீதியிலான பழக்கவழக்கங்களைத் தொடர்ந்து அனுசரித்து வந்தனர். தமது ஸ்திரீகளை பர்தாவுக்குள் மறைக்கவில்லை. துருக்கியர்களது வழக்கமான நீல நிற ஆடை அணிவதையும், பித்தளைப் பாத்திரங்களை உபயோகிப்பதையும் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. முதன் முதலில் இந்தப் பிரதேசத்துக்கு வந்த போது, ஸியாலின் மூதாதையான மல்கான் என்பவர் 1162-ல் ஜங் என்னும் இடத்தில் தமது வாசஸ்தலத்தை ஏற்படுத்திக் கொண்டார். ஸியாலின் தளபதி சூசக் என்பவன். மெஹர் சூசக்கின் பெண்தான் ஹீர்; தளபதியின் பெண்ணானதால் மிகவும் செல்லமாக வளர்க்கப்பட்டாள். தோழிகளுடன் சேர்ந்து ஊஞ்சல் ஆடுவது, சினாப் நதியில் குளிப்பது, மிக அழகாக சிங்காரம் செய்யப்பட்ட பிரம்புக் கூடையில் உட்கார்ந்து, சினாப் நதியின் கரைக்கு வந்து அடர்ந்த தோட்டத்தின் அழகிய காட்சிகளைக் காண்பது, அல்லது நதியில் விளையாடிக் கொண்டே சூரியோதயக் காட்சியையும், அதன் அஸ்தமன காலத்தில் நிகழும் பல்வேறு வண்ண நிழல்களையும் கண்டு ஆனந்திப்பது,

ஆகியவைதான் ஹீரின் வேலைகளாக இருந்தன. வாலிபம், ஆரோக்கியம், விஷமம் செய்யும் இயல்பு மற்றும் பயமற்ற தன்மை ஆகியவற்றுடன், மிகுந்த அழகும் கொண்டவளாக இருந்தாள் அவள். சௌந்தரியமும், இளமையும் சேர்ந்து தோற்றுவித்த ஓர் மாயாஜாலமாக அவள் திகழ்ந்தாள்.

நவாபின் யானையைப் போன்ற மிடுக்கான நடையையும், உயர எழும்பிப் பறக்கும் பருந்தின் கம்பீரமான பாவனையையும் அவள் கொண்டிருந்தாள். இந்திய மரபுப்படி வர்ணிப்பதானால் மோகினி, இந்திராணி போன்று அவள் இருந்தாளென்றும், ஈரானின் மரபுப்படி கூறினால், சீன தேசத்துப் பொம்மை போன்றும், ரோமாபுரி ஓவியம் போன்றும் ஹீர் இருந்ததன் காரணமாக ஆயிரக்கணக்கானவர்கள் அடங்கிய கூட்டத்திலும் ஒளித்துவிட இயலாத அளவுக்குப் பேரழகு பெற்றவளாக இருந்தாளென்றும் கூற வேண்டும்.

ஜங் பிரதேசத்தின் மெஹர் ஆக இருந்ததைத் தவிர, சீனாப் நதியின் கரைகளில் மக்களின் வசதிகளைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பையும் சூசக் பெற்றிருந்தான். அந்தக் கரைகளில் பிரயாணிகளை ஏற்றிச் செல்வதற்காக அனேக படகுகள் நின்று கொண்டிருந்தன. நாள் முழுவதும் பிரயாணிகளும் வியாபாரிகளும் நதியைக் கடந்த வண்ணம் இருந்தனர். ஒவ்வொரு வழிப்போக்கனின் முதல் கவனமும், படகோட்டி லுட்டன் நேர்த்தியாகச் சிங்காரித்து வைத்திருந்த ஹீரின் படகின் மீது விழுந்தது. காலியாக இருந்த அந்தப் படகைப் பார்த்த மாத்திரத்தில் வழிப் போக்கர்களின் மனத்தில் பல விதமான கற்பனைகள், கனவுகள் தோன்ற ஆரம்பித்தன; எவருக்கு ஹீரின் தரிசனம் கிடைத்து விட்டதோ, அவர்கள் போதையில் மூழ்கியவர்களாகவே ஆகிவிட்டனர். இவ்வாறு, வழிப்போக்கர்கள் மற்றும் வியாபாரிகளின் மூலம், ஹீரின் சௌந்தரியம், வாலிபம் பற்றிய தகவல்கள் வெகு தூரம் வரை பரவி விட்டிருந்தன.

தஃக்த் ஹஜாரா, என்ற இடம் ஜங்கிலிருந்து எண்பது மைல் தூரத்தில் இருந்தது. அதன் வாலிபர்களும் பெண்களும் ஹீரைப் பற்றி அறிந்து வைத்திருந்தனர். அந்தக் கிராமத்

தலைவனின் பெயர் மௌஜீ. அவன் ரான்ஜா ஜாட் ஜாதியைச் சேர்ந்தவன். அவனுக்கு எட்டு பிள்ளைகள் இருந்தனர்; எல்லோரிலும் இளையவனான தீதோ, மிகுந்த அழகு வாய்ந்தவனாகவும், மென்மையான இயல்பு கொண்டவனாகவும் இருந்தான். தகப்பனாரின் மறைவிற்குப் பிறகு, சகோதரர்கள் நிலங்களை அளந்து தமக்குள் வினியோகம் செய்து கொண்டனர். மற்றவர் எல்லோரும் நல்ல நிலங்களையே எடுத்துக் கொண்டு, தீதோவுக்கு மணல் பாங்கான, விளைச்சலுக்கு லாயக்கற்ற நிலத்தை அளித்தனர். தந்தையின் செல்லப் பிள்ளையாக இருந்த காரணத்தினால், தீதோ ரான்ஜா, பயிர் வேலையில் ஒருபோதும் ஈடுபட்டதில்லை. அதில் அக்கறையும் காட்டவில்லை. டம்பாச்சாரித்தனமாக, ஊரின் சந்து-பொந்துக்களில் சுற்றித் திரிந்து வந்தான். ரான்ஜாவின் அண்ணிமார்கள் அவன் மீது உயிரையே வைத்திருந்தனர். சில காலம் வரை அவர்களுக்கு மிகவும் செல்லமாக இருந்தான். ஆனால் வெறுமனே தலையில் எண்ணெய் தடவிக் கொள்வதற்கும், புல்லாங்குழல் வாசிப்பதற்கும் மட்டுமே அவன் லாயக்கு என்பதை அவர்கள் கண்டு கொண்ட பின், அவர்கள் அவனைக் கேலி செய்ய முற்பட்டனர். தனது அண்ணிமார்களின் பிரியத்துக்குப் பதிலாக, சிறிதாவது ரான்ஜா பிரதி உபகாரம் செய்து வந்திருந்தால் ஒருவேளை அந்த அண்ணிமார்கள் அவனைப் பரிகாசம் செய்யாமல் இருந்திருக்கக் கூடும். ஆனால் ரான்ஜாவின் சுபாவம், எதற்கும் அலட்டிக் கொள்ளாத இயல்பினதாக இருந்தது. அவனது இளமை முழுதும் அலட்சிய பாவத்துடனும், யாருக்கும் பணியாத நிலையிலும் கழிந்தது. ஆகவே ஒருநாள் அவனுடைய அண்ணிமார்கள் எல்லோரிலும் சிறியவள் அவனிடம் சொன்னாள்: "எங்களைப் பற்றி அக்கறை இல்லையானால், நீ போய், ஸியால் குடும்பத்திலிருந்து ஹீரை மணம் செய்து கொண்டு வா."

அண்ணியின் குத்தலான பேச்சு, ரான்ஜாவின் இதயத்தில் தைத்து விட்டது. கவி வாரிஸ்ஷா கூறுகிறார்: "கையில் குழலேந்தி, செருப்புகளை அக்குளில் இடுக்கிக் கொண்டு

வீட்டிலிருந்து புறப்பட்டான் ரான்ஜா, வாரிஸ்ஷாவைப் போல." வழியில் இருந்த ஒரு மசூதியில் முதல் நாள் இரவு தங்கினான்; அதன் மௌல்வியுடன் சச்சரவும் ஏற்பட்டது. மறுநாள் எழுந்து தன் வழியே தொடர்ந்து சென்றான். கடைசியில் சினாப் நதிக் கரைக்கு வந்தபோது அங்கு படகோட்டி லுட்டன், தனது படகைத் தள்ளிச் செல்லத் தயாராக நின்றிருந்ததைக் கண்டான். ஆண்டவனுக்கு நன்றி செலுத்தியவாறே, ரான்ஜா அக்கரைக்குத் தன்னை இட்டுச் செல்லும்படி லுட்டனைக் கேட்டுக் கொண்டான். ஆனால், பலசாலியான லுட்டன், ரான்ஜாவைப் பிடித்து எட்டித் தள்ளிவிட்டு, படகை நதிக்குள் இழுத்துச் சென்றுவிட்டான். ரான்ஜாவின் அழகைக் கண்ட லுட்டனின் ஸ்திரீகள், அவனைச் சுற்றிக் கூட்டமாக உட்கார்ந்து, அவன் உடம்பை அமுக்கிவிடத் தொடங்கினர். களைப்புத் தீர்ந்த ரான்ஜா, குழலூதத் தொடங்கினான். சிறிது நேரத்தில், நதிக் கரையிலிருந்த ஆண், பெண் அனைவரும் அவனைச் சுற்றிக் கொண்டனர். ரான்ஜாவின் மீது அளவு கடந்த மோகம் கொண்ட லுட்டனின் ஸ்திரீகள் அவனை, ஹீரின் படகிற்கு அழைத்துச் சென்றனர். அங்கு பட்டுத் திரைக்குப் பின்னே, ஹீர் அமரும் மெத்தை இருந்தது. வெகு தூரம் நடந்து வந்த களைப்பினால், ரான்ஜா அதில் படுத்த உடனே உறங்கிவிட்டான். தனது மெத்தையில், வேறு யாரோ ஒரு அன்னியனை லுட்டன் உறங்கச் செய்துவிட்டான் என்று கேள்விப்பட்ட ஹீர், அனல் கக்கும் விழிகளுடன், தனது தோழிகளுடன் அங்கு விரைந்து சென்று, லுட்டனைக் கம்பினால் விளாசி, ரத்தம் பீறிடச் செய்தாள். தொடர்ந்து படகின் உள்ளே சென்று, தனது மெத்தையில் ஒரு அன்னியன் படுப்பதா, என்ற ஆத்திரத்தினால் ரான்ஜாவை கம்பினால் ஒரு அடி அடித்தாள். ஆனால், "ரான்ஜா விழித்தெழுந்து, சபாஷ்; என் அன்பே! என்றான்; ஹீர், புன்னகை புரிந்தவளாக, அவனுக்கு அந்த நிமிடமே அடிமையாகி விட்டாள்," என்கிறார் கவி.

ஹீரின் கண்களில் ஒரு புதிய ஒளி வீசத் தொடங்கியது. அவள் படகின் திரையை இழுத்து மறைத்து, மெத்தையில்

ரான்ஜாவுக்கு அருகில் அமர்ந்து கொண்டாள். எவ்வளவு நேரம், எவ்வளவு ரகசியமான விஷயங்கள் பற்றிப் பேசிக் கொண்டார்களோ, தெரியாது. ஹீர் தனது காதலை வெளியிட்ட உடன் ரான்ஜா அவளிடம், "சர்க்கா சுற்றும் கூட்டத்திலும், ஊஞ்சலாடுவதிலும் ஈடுபட்டு என்னை மறப்பதாக இருந்தால், இப்போதே சொல்லி விடு" என்று கூறினான், என்கிறார் கவி. பதிலுக்கு ஹீரும், மிகுந்த கம்பீரத்துடனேயே பதில் சொல்கிறாள்: கவியின் பாடலும் அவ்வாறே உள்ளது. "என் அப்பா மீது ஆணை, ரான்ஜா; உன்னை நான் அலட்சியம் செய்தால், என் அம்மா சாகட்டும். உன்னைத் தவிர வேறு யாரையும் நான் பதியாக அடைய விரும்பினால், என் கண்கள் அவியட்டும்; எனக்குச் சாவு வரட்டும். உன்னை அல்லாவே எனக்கு அளித்திருக்கிறார். தூய்மையான காதலுக்கு விரோதமாக நான் ஏதும் செய்தால், நான் பன்றியாகத்தான் போவேன்."

இரு தரப்பிலும் நிச்சயமான வாக்குறுதிகளைப் பரிமாறிக் கொண்டபின், தனது தாய்–தந்தையினரிடம் மிகச் சாமர்த்தியமாகப் பேசி ரான்ஜாவைத் தங்களது எருமைகளை மேய்க்கும் வேலையில் அமர்த்துவதற்கு ஹீர் அவர்களைச் சம்மதிக்கச் செய்தாள். தூசக் பலமுறை அவளிடம் சொல்லிப் பார்த்தான். "இந்தப் பையன் மிகவும் அழகாகவும், நளினமான இயல்புகள் கொண்டவனாகவும் இருக்கிறான்; எருமைகளை மேய்ப்பதற்கு இவன் சரியான ஆள் இல்லை; இவன் நமது எருமைகளை மற்றவர்களுடைய எருமைகளோடு கலந்து விடுவான்; காட்டு மிருகங்கள் சுதந்திரமாகத் திரியும் வனத்தில் எருமைகளை மேய்ப்பதில் உள்ள கஷ்டங்களைத் தாங்கிக் கொள்ள இவனால் முடியாது," என்று பல விதமாகக் கூறிய தனது தந்தையை, இவ்வாறு பதில் கூறி சம்மதிக்க வைக்கிறாள் ஹீர். ஹீர் கூறுவதாக உள்ள கவியின் பாடலின் அர்த்தம் இதுதான்: "இந்த இளைஞன் மிகவும் புத்திசாலி; எச்சரிக்கையாக இருப்பான்; மிகவும் சாமர்த்தியமாக, ஜாக்கிரதையாக எருமைகளை மேய்க்கிறான்; அன்புடன் தடவிக் கொடுக்கிறான்; அவற்றின் கொம்புகளின் மீது கம்பினால் ஒருபோதும் அடிப்பதில்லை."

ஸியால் குடும்பத்தினரின் எருமைகளை, ரான்ஜா பன்னிரண்டு வருடங்கள் மேய்த்தான். தினமும், நதியின் அருகில் உள்ள காட்டிற்கு எருமைகளை அழைத்துப் போவான்; மாலையில் அவனது குழலோசையைக் கேட்ட வண்ணம் அவை வீடு திரும்பும். தினந்தோறும் ஹீர், பெரிய கிண்ணம் நிறைய அவலை எடுத்துக் கொண்டு காட்டை அடைவாள்; அங்கு அவளும் ரான்ஜாவும் சேர்ந்து, காதலின் மிக உயர்ந்த நிலைகளை அனுபவிப்பதுடன், அந்தக் கிண்ணத்தையும் காலி செய்வார்கள்; நதியின் கரையில் உள்ள காட்டின் இருளில் சிற்சில இடங்களில் காணப்படுவார்கள். நதியின் அலைகளில் சூரிய கிரணங்கள் ஏற்படுத்தும் வண்ண ஜாலங்களைக் கண்டு ஆனந்தம் கொள்வர். ஆனால் காதலையும் வாசனையையும் எதுவரை ஒளித்து வைக்க முடியும்? விரைவிலேயே ஹீர்-ரான்ஜாவின் பிரேமை பற்றிய பேச்சுக்கள் ஜங் முழுவதும் அடிபட ஆரம்பித்தன. பலவிதமான மக்கள்; விதம் விதமான பேச்சுக்கள். ஆனால் ஹீர்-ரான்ஜா ஜோடி மிகவும் பொருத்தமானதாக இருந்ததால், எவரும் அதைத் தவறெனக் கூறவில்லை; மாறாக, அதற்குத் திரை போட்டு மறைக்கவே முயன்றனர்.

ஆனால், இந்தக் காதல் நாடகத்துக்கு எதிராக ஒருவன் கிளம்பினான். அவன்தான் ஹீரின் சித்தப்பாவான நொண்டி, கைதோ. அவனுடைய தோற்றமே வேடிக்கையானது— தலையில் சொரசொரப்பான பட்டுத் தொப்பி, கழுத்தில் சணலினால் செய்த மாலை ஆகியவற்றுடன் கையில் மண் கிண்ணம் ஏந்தியவாறு காட்சியளித்த அவனுக்கு, போதைப் பொருள்களில் மிகவும் நாட்டம் இருந்தது; கிராமத்துக்கு வெளியே குடிசையில் வாழ்ந்து வந்தான். கிளிகள், கோழிகள், சேவல்கள் முதலியவற்றை வளர்ப்பதிலும் அவனுக்கு ஆர்வம் இருந்தது. அவன் பாதி 'ஜாட்' ஆகவும் பாதி முஸ்லீம் சாதுவாகவும் இருந்தான். போதைப் பொருள்கள் கிடைக்குமிடங்களில் உட்கார்ந்து "பங்கி" அடித்தவாறே தனது வாழ்நாள் முழுவதையும் கழித்தவன் அவன். சாதாரணமான பக்கிரிகளைப் போல அவனும் ஒரு தனிக் கட்டைதான். காதல்

மலர்வதைக் கண்டு எரிச்சல் அடைவது, அவனுக்கு இயல்பானதாக இருந்தது. ஹீரும் அவளுடைய தோழிகளும், ரான்ஜாவுடன் சேர்ந்து அமர்ந்து அவல் சாப்பிடுவதையும், அதன் பின்னர், காட்டில் எல்லோரும் சேர்ந்து விளையாடுவதையும் அவனால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? ஆகவே, ஒருநாள் கைதோ, ஹீரைப் பின் தொடர்ந்து காட்டிற்குச் சென்றான். அச்சமயம் ஹீர் நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வரச் சென்றிருந்தாள். ரான்ஜா, தனியாக உட்கார்ந்து கொண்டு அவல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கைதோ, அவனிடம் மிகுந்த நட்புரிமை யுடன் கொஞ்சம் அவல் தரும்படி கேட்டான். ரான்ஜா, கிண்ணத்தை அவனிடம் நீட்டி, "கை நிறைய எடுத்துக் கொள்" என்றான். கைதோ கை நிறைய எடுத்துக் கொண்டு, கிராமத்தை நோக்கி நொண்டிக் கொண்டே ஓடினான். தண்ணீர் எடுத்துக் கொண்டு திரும்பி வந்த ஹீர், ரான்ஜாவின் திறந்த மனம் கொண்ட சுபாவம் பற்றி மிகவும் அலுத்துக் கொண்டாள். கைதோ, தனது குணத்திற்கு ஏற்றபடி, கிராமத்திற்குச் சென்று, ரகளை செய்வான் என்பதை அவள் அறிந்திருந்தாள். ஆகவே ஹீர், கைதோ கிராமத்தை அடைவதற்கு முன்னால் அவனைப் பிடித்து, அவனது தொப்பி, மாலை மற்றும் சணல் கயிறு ஆகியவற்றைப் பிடித்திழுத்து அவனை அவமானம் செய்தாள்; கைதோவின் கையிலிருந்த அவல் முழுதும் கீழே விழுந்து சிதறியது. ஆனால் ஹீர் திரும்பிச் சென்றவுடனேயே, கைதோ எழுந்திருந்து, கீழே சிதறிக் கிடந்த அவலின் ஒவ்வொரு சிறுதுகளையும் மண்ணிலிருந்து பொறுக்கி எடுத்துக் கொண்டு கிராமத்துக்குள் வந்து ரகளை செய்தான். சூசக்கிற்கும் மல்கிக்கும் மிகவும் தலைகுனிவு ஏற்பட்டது. ஹீரின் சகோதரன் சுல்தான் வாளை உருவிக் கொண்டே, "அந்த வேலைக்காரப் பயலைத் துண்டு துண்டாக்குகிறேன்" என்று கர்ஜித்தான். அவர்கள் எல்லோரும் சேர்ந்து, ரான்ஜாவை ஏசி விரட்டினர். ஆனால் அதுசமயம் ஹீர், தனது தோல்வியை ஒப்புக் கொள்ளவில்லை; மாறாக, எந்த அளவு தைரியத்துடன் தனது சகோதரன் சுல்தானிடம் என்ன

கூறினாள், என்பதைக் கவி கூறுகிறார்:

கண்கள் ஒரு முறை சந்தித்த பிறகு, மறுபடி திருப்பிக் கொள்வதில்லை.; நான் என்னையே பலி கொடுக்கத் தயார்; ஓடிவரும் நதி– ஒருபோதும் நிற்பதில்லை; என் சகோதரனான நீ, அணை கட்டி வேண்டுமானால் முயற்சி செய்து பாரேன்! கூர்மையான கத்தி குத்தினால் நிச்சயமாக ரத்தம் பீறிடத்தான் செய்யும்; ஒரே இடத்தில் நிற்காது."

பன்னிரண்டு வருட உழைப்பின் பயன் வீணாகிப் போனதைக் கண்ட ரான்ஜா, ஒரு இஸ்லாமிய பக்கிரியின் இல்லத்துக்குச் சென்று உறங்கினான். ஆனால் மறுநாள் காலை எருமைகளைக் காட்டிற்கு அழைத்துச் செல்ல முயற்சித்த பொழுது, அவை ரான்ஜா இல்லாமல் நகர மறுத்தன. தொட்டியருகில் கட்டினாலும் அவை ஆகாரத்தின் பக்கம் முகத்தைக் கூடத் திருப்ப மறுத்தன. தோல்வி அடைந்த கூசக்கும், மல்கியும் தந்திரமாக வேலை செய்ய எண்ணி ரான்ஜாவை மறுபடி அழைத்து எருமைகளை அவனுடன் அனுப்பினர். இவ்வளவு தூரம் அவமானப்பட்ட பிறகு காட்டுக்கு ஹீர் போவது உசிதமல்ல என்று, அவளிடம் நயமாகக் கூறினர். ஆனால் தமக்குள்ளே, ஹீருக்கு விரைவில் திருமணம் முடித்துவிட்டால் வேலைக்காரப் பயலின் தொல்லை தானாகவே தீர்ந்து விடும், என்று தீர்மானித்துக் கொண்டனர். ஆனால் கிராமம் முழுவதினுடைய அனுதாபம் ஹீர், ரான்ஜாவின் பக்கம்தான் இருந்தது. மேலும், ஹீரிடமும் ஆச்சரியப்படத்தக்க சாமர்த்தியம் இருந்தது. அவள் விரைவிலேயே நாவிதனின் மனைவி மிட்டியின் வீட்டை சந்திக்கும் இடமாகச் செய்து கொண்டாள். எருமைகளைக் காட்டில் விட்டு விட்டு ரான்ஜா, அந்த வீட்டுக்கு வந்து, ஹீருடன் ஆசை தீரப் பேசி இருப்பான். அவ்வப்போது ஹீர் நதியில் ரான்ஜாவுடனும் தனது தோழிகளுடனும் குளிக்கச் செல்வது வழக்கம். குளிக்கும் போது ரான்ஜாவின் மேனியில் சூரிய கிரணங்கள் வண்ணஜாலம் புரிந்தன, என்கிறார் கவி.

விஷயம் அதிக அளவுக்குப் பரவிய உடன், கேடேயுடன் ஹீரின் திருமணம் நிச்சயிக்கப்பட்டு விட்டது. சில

தினங்களுக்குள்ளாகவே, மேளதாளத்துடன் கேடே ரங்க்பூரி லிருந்து ஜங் வந்து சேர்ந்தான். பலவிதமான தின்பண்டங்கள் செய்யப்பட்டன; வாண வேடிக்கைகள் நிகழ்ந்தன. கிராமம் முழுதும் ஒரே பரபரப்பு. இந்தக் கோலாகலத்தைக் கண்ட ரான்ஜா மனமொடிந்து போனான். பார்ப்பதற்கு மிகவும் கவலையுள்ளவனாகவும், சக்தியெல்லாவற்றையும் இழந்தவ னாகவும் காணப்பட்டான். நதிக் கரையில் உட்கார்ந்து போதைப் பொருள்களை உண்டான். சில சமயம் எருமைகளை அணைத்துக் கொண்டு அழவும் செய்தான். ஹீரின் தோழி எவளேனும் அவனை அழைத்தால், ஒவ்வொரு வார்த்தை பேசும்போதும் அவன் அழுது கண்ணீர் பெருக்க ஆரம்பித்தான்.

அதுசமயம் திருமணத்துக்கு முன்னர், வழக்கத்தை அனுசரித்து, ஹீர், ஒரு மூலையில் அலங்கரித்து உட்கார வைக்கப்பட்டிருந்தாள். ரான்ஜா மனமொடிந்து இருந்தது அவளுக்குத் தெரிந்திருந்தது. தான் போவதற்கு முன், ரான்ஜாவுடன் சிறிது பேச விரும்பு'வதாகவும், ஆகவே அவனைப் பெண் வேடத்தில் தன்னிடம் அழைத்து வரும்படியும் ஹீர் தனது தோழிகளிடம் கூறினாள். இரவில் வெகு நேரத்திற்குப் பிறகு, அவ்ளுடைய உறவினர் ஸ்திரீகளெல்லாம் அவளை விட்டு அகன்று, தோழிகள் சிலர் மட்டுமே ஹீரின் அருகில் இருந்த போது, ரான்ஜா பெண் வேடத்தில் அங்கு வந்தான். பெண் வேடம் தாங்கியதாலும், நம்பிக்கையற்ற நிலையினாலும் அவனது தோற்றம் மிகவும் மாறுபட்டிருந்தது. ஹீர், ரான்ஜாவிடம் அப்போதே தன்னை அழைத்துக் கொண்டு ஓடிவிடும்படி வற்புறுத்தினாள். மறுநாள் அவளது பெற்றோர்கள் அவள்ள "டோலி"யில் உட்கார வைத்து கேடேவுடன் அனுப்பிய பிறகு, யாரும் ஏதும் செய்ய முடியாது என்பதை அவனிடம் தெளிவாக்கினாள். ஆனால், ரான்ஜாவின் லட்சியம், அவளை முறையாக மணம் செய்து கொண்டு அழைத்துச் செல்வதாக இருந்தது. "மறைந்து மறைந்து, ஓடிப் போவதின் மூலம் காதலின் ருசி போய்விடுகிறது" என்று ரான்ஜா, ஹீரிடம் கூறியதாக, கவி கூறுகிறார்.

ஹீர் பல முறை வற்புறுத்தியும், ரான்ஜா தன் பிடிவாதத்தை விடவில்லை; மறுநாள் கேடே, ஹீரை "டோலி"யில் அமர்த்தி, ரங்க்பூருக்கு அழைத்துச் செல்லக் கிளம்பினான். ஹீரின் தந்தை, தனது மகளுக்கு நகை, துணிமணிகள், பசு, எருமைகள் என பலவற்றை அளித்தான். ஆனால், ரான்ஜா இல்லாமல் எருமைகள் நகர மறுத்தன. வேறு வழியின்றி ரான்ஜாவையும் கூடவே அனுப்ப வேண்டியதாயிற்று. ஜங்-கிலிருந்து ரங்க்பூர் சுமார் எழுபது மைல் தொலைவில் இருந்தது. போகும் வழியில் ஆங்காங்கே தங்கியும், வேட்டையாடிக் கொண்டும் சென்றான், கேடே. "டோலி"யிலிருந்து சிறிது தூரத்தில் ஹீரின் பெட்டியைச் சுமந்தவாறு சென்று கொண்டிருந்தான் ரான்ஜா; தனது கழுத்திலிருந்த மாலையை அறுத்து, அதன் முத்துக்களை டோலிக்கு வெளியே எறிந்த ஹீர், முத்துக்களைப் பொறுக்கித் தரும்படி, ரான்ஜாவிடம் கூறினாள். ரான்ஜா அவ்வாறே செய்து, கை நிறைந்த முத்துக்களைக் கொடுக்கும் போது, ரான்ஜாவின் கண்களில் முத்துக் குவியல் போன்று கண்ணீர் தளும்பி நிற்பதை ஹீர் கண்டாள். ஹீர் கூறுவதாகக் கவி சொல்கிறார். "ரான்ஜா, என்னுடைய பலம் முழுவதையும் உபயோகித்து, நான் அலுத்து விட்டேன். விஷயம், இப்போது என்னை மீறிவிட்டது. என் பெற்றோர்களும், மதக் குருமார்களும், கட்டாயப்படுத்தி, என்னை இவ்வாறு கிளம்பச் செய்து விட்டனர். எனக்கு மிகப் பெரிய அநியாயம் இழைக் கப்பட்டுள்ளது. என் அன்பே! உயிரோடிருந்தால், பிறகு சந்திப்போம். தற்போதைக்கு நமது சிநேகம் முடிந்து விட்டது."

ஆனால் நம்பிக்கையற்ற நிலையும், கவலையும் சிறிது குறைந்த உடன் ஹீர் சொன்னாள்: "பயப்பட வேண்டிய அவசியம் இல்லை, ரான்ஜா-நான் கேடேயை என்றுமே ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. நீ உடனே, யோகி வேடமணிந்து, ரங்க்பூர் வந்துசேர். முன்பே, நான் சொன்னபடிச் செய்யாததால் இவ்வளவு ஆபத்தும் வந்திருக்கிறது. இப்போதும் தாமதம் செய்து, காலத்தை விரயம் செய்யாதே."

டோலி ரங்க்பூர் சென்றடைந்தது. ஸைதேயின் தந்தை

அஜ்ஜூ பெரிய அளவில் கொண்டாட்டத்திற்கு ஏற்பாடு செய்தான். ஹீரின் அழகு பற்றிய விவரம் முன்பே எல்லோருக்கும் தெரிந்திருந்தது; கிராமம் முழுவதுமே அவளைக் காணத் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால் ஹீரின் அழகை அதிகப் படுத்திக் காட்டியது, அவளது மகிழ்ச்சியான நிலை அல்ல; உள்ளூர்ந்து ஓடிய துயரின் இழைதான் என்பதை, மிகக் குறைவான கண்கள்தான் புரிந்து கொண்டிருக்க முடியும். இந்த இழையை முதன் முதலில் பார்த்தவள் ஸைதி—தான். ஸைதி, பார்ப்பதற்குக் குறும்புக்காரியாகவும், துருதுருப்பு உடையவளாகவும் காணப் பட்டாலும், உள்ளுக்குள்ளே வேதனையால் வெந்து கொண்டிருந்தாள். அவளையும் பலூசிஸ்தானியனான முராத், காதல் நோய்க்கு உள்ளாக்கி இருந்தான். காதலின் மூலம் ஏற்பட்ட ஒரே விதமான அனுபவத்தின் காரணமாக அவள், ஹீரின் துக்கத்தைப் பகிர்ந்து கொண்டாள். ஸைதே கேடே, ஹீர் தன்னுடன் பேச வேண்டும் என்பதற்காக, ரொம்பவும் முயற்சி செய்தான். ஆனால் ஹீரின் மனது, ஆரம்ப முதலே, ரான்ஜாவிடம் சென்றுவிட்டிருந்தது. ஹீர் "பீர்"களின் (கடவுளின் தூதர்கள்) பாதுகாப்பைப் பெற்றிருந்ததாகவும், ஸைதே அவளை நெருங்க முயன்ற போதெல்லாம் இவர்களால் தூக்கியெறியப்பட்டதாகவும் சில சமயம் கதை சொல்லுபவர்கள் கூறுகிறார்கள். இதனால் அவன் மிகவும் பயந்து போய், ஹீரைத் திரும்பிப் பார்ப்பதையே விட்டு விட்டான்.

வெகு நாட்கள் வரை ஹீருக்கு ரான்ஜாவிடமிருந்து தகவல் ஏதும் வரவில்லை. எனவே அவளது கவலை தினம் தினம் அதிகரித்துக் கொண்டே வந்தது. நாள் முழுதும் அவள் கட்டிலில் படுத்தவாறு இருந்தாள். ஹீரை ஏதோ ஒருவகைப் பேய் பிடித்துள்ளதாக, கிராமம் முழுவதும் பேச்சு இருந்தது. நீண்ட நாட்கள் ரான்ஜாவிடமிருந்து தகவல் ஏதும் வராமல் போகவே, ஜங்கில் வாழ்க்கைப்பட்டு அவ்வழியே தன் தாய் வீடு சென்று கொண்டிருந்த ஒரு பெண்ணின் மூலம், ஹீர், தனது காதலைப் பொய்யாக்காமல், சீக்கிரமே யோகி வேடத்தில் ரங்க்பூர் வந்து சேருமாறு ரான்ஜாவுக்குச் செய்தி

அனுப்பினாள். ஹீரின் தோழிகளும் ரான்ஜாவுக்குத் தைரியம் ஊட்டவே, அவன் தீட்சை பெறுவதற்காக குரு பாலநாத் வசிக்கும் குன்றை நோக்கிக் கிளம்பினான்.

தன்னிடம் வந்த ரான்ஜாவின் இளமையையும், சௌந்தர்யத்தையும் கண்ட குரு பாலநாத் மிகவும் வியப்படைந்தார். அவரிடம் யோக-தீட்சை பெறும் நோக்கத்தோடு, பல்லாண்டு களாக அவருக்கு சேவை செய்து வரும் இளைஞர்கள் பலர் இருந்தனர். ரான்ஜா வந்த உடனே அவனுக்கு தீட்சை அளிக்க ஒப்புக் கொண்ட குரு, தனது சீடர்களிடம் ரான்ஜாவுக்கான குண்டலங்களை தயார் செய்ய உத்தரவிட்டதைக் கண்ட பழைய சீடர்கள் பொறாமையால் வெந்தனர். எல்லாம் அறிந்த குருவின் மனத்திற்கு, ரான்ஜாவின் திட நம்பிக்கை நன்றாகப் புரிந்திருந்தது. உண்மையான காதல் உணர்வு, ரான்ஜாவை, பல நாட்களுக்கு முன்பே, யோகிகளின் உன்னதமான லட்சியம் வரை அழைத்துச் சென்று விட்டிருந்தது, என்பதை அவர் அறிந்திருந் தார். அவன் முன்பே யோகியாகவே ஆகியிருந்தான். தீட்சை அளிப்பது ஒன்றுதான் பாக்கியிருந்தது. இருந்தாலும், தீட்சை அளிக்கும் சமயம், குரு பாலநாத், யோகிகள் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றி விசேஷமாக எடுத்துக் கூறி, யோகியானவன் தன்னை விட வயதில் பெரிய ஸ்திரீயைத் தாயாகவும், வயதில் குறைந்த வளைச் சகோதரியாகவும் கருத வேண்டும், என்றும் அவனுக்குக் கூறினார். ஆனால் ரான்ஜா, குரு பாலநாத்திடம் தெளிவாகக் கூறிவிட்டான். அதாவது, தான் ஹீருக்காக யோக தீட்சையைப் பெற்றுக் கொள்வதால், குரு குறிப்பிட்டுச் சொன்ன நிபந்தனையை ஏற்றுக் கொள்ள இயலாது என்று. இதைக் கேட்ட குருவின் இதயம் உருகிவிட்டது. அவர் அவனுக்கு சணலினால் செய்த மாலை, தொப்பி, மோதிரம், மண்டை ஓடு மற்றும் குழல் ஆகியவற்றை அளித்து, தனது ஆசிரமத்திலிருந்து விடை கொடுத்து அனுப்பினார். ரான்ஜா அவர் பார்வையிலிருந்து மறைந்த பின் அவனுக்குத்தான் தீட்சை கொடுக்கும் சமயம் அவனை அமரச் செய்திருந்த பாறைக்கு நமஸ்காரம் செய்தார். யோகிகளின் குன்றில் இன்றும் அந்தப் பாறை உள்ளது. அங்கு

வரும் யாத்ரீகர்கள் அனைவரும் அந்தப் பாறைக்கு நமஸ்காரம் செய்கின்றனர்.

யோகியின் வேடத்தில் குன்றிலிருந்து இறங்கிய ரான்ஜாவின் அழகு அதிகமாக ஜ்வலித்தது. அவனது தேஜஸினால் அவனது கண்கள் பளபளவென்று மின்னின. அங்கு ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த ஒரு இடையன் அவனை அடையாளம் கண்டு கொண்டான். முதலில், ரான்ஜா தன்னை வெளிப்படுத்திக் கொள்ளவில்லை. ஆனால் இடையனின் மூலம் தனது காதல் கதையை முழுவதும் கேட்ட அவன், ஆச்சரியமடைந்தான். தனது காதல் கதை எவ்வாறு அந்தப் பிரதேசம் முழுதும் பரவி விட்டது, என்று அவன் சிந்திக்க ஆரம்பித்தான். பிறகு, இடையனிடமிருந்து ரங்க்பூர் பற்றிய போதுமான விவரங்கள் சேகரித்துக் கொண்டு, அந்த ஊர் வந்து சேர்ந்தான். தண்ணீர் அருந்துவதற்காக, கிராமத்துக் கிணற்றுக்கருகில் அவன் வந்தபோது, அவனுடைய மயக்கும் உருவத்தைக் கண்ட மணமான பெண்களும், கன்னிப் பெண்களும் அனைவருமே ஆச்சரியத்தினால் வாய்பிளந்தவாறே, அவனைச் சுற்றி கூட்டமாக நின்று கொண்டனர். அந்தக் கூட்டத்தில் ஹீரின் நாத்தனார் ஸைதியும் இருந்தாள்: அவள் வீட்டுக்குத் திரும்பி வந்து தனது அண்ணியிடம் "காதில் குண்டலங்களும், கழுத்தில் பொருத்தமான மாலையும் அணிந்த புதியவரான யோகி ஒருவர் வந்திருக்கிறார். விலையுயர்ந்த வைரத்தைத் தொலைத்து விட்டவர், இங்குமங்கும் தேடி அலைவதுபோல, அவர் கிராமத்தில் சுற்றிக் கொண்டிருக்கிறார், " என்று கூறியதாகக் கவி கூறுகிறார்.

ஸைதி கூறியதைக் கேட்ட ஹீரின் இதயம் படபடவென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. ரான்ஜா, யோகி வேடம் அணிந்து வந்திருக்கலாம், என்று எண்ணினாள். அவள் உடலின் ஒவ்வொரு அணுவும், ரான்ஜாவுக்காகத் துடிக்க ஆரம்பித்தது. ஹீரின் இத்தகைய நிலையைக் கவி வாரிஸ்ஷா, மிகவும் நளினமான, அதே சமயம் துயரம் தோய்ந்த வார்த்தைகளில் வர்ணித்திருக்கிறார்:

"சகோதரி, மூடி மறைத்துப் பேசாதே. விஷயத்தைக்

கேட்டவுடனேயே, நான் நாசமாகப் போய்விட்டேன். நீ கூறியதைக் கேட்டதனால் ஏற்பட்ட துக்கம், என் நெஞ்சை அடைக்கிறது. யோகிகள் ஏன் ஊமத்தையால் செய்த பாங் போன்ற போதைப் பொருள்களை அருந்தி, மரணத்தை விலைக்கு வாங்கிக் கொள்கிறார்களோ தெரியவில்லை. தனது மகன் பக்கிரியாகப் போகுமாறு செய்த ஆண்டவனின் செயலை ஒரு தாயார் எவ்வாறு தாங்கிக் கொள்வாள்? எவளுடைய காதலனது காது அடைத்து விடுகிறதோ, அந்தப் பெண்ணின் வாழ்க்கையும் நாசம்தான்.''

ஆனால் இவையாவும் ஹீரின் கற்பனைதான். ''இது ரான்ஜாவாக இருந்து விட்டால் நான் தொலைந்தேன். எனக்கு எந்த வழியுமில்லாமல் இவன் செய்து விட்டான்'' என்றெல்லாம் எண்ணினாள். யோகியாக வந்திருப்பது ரான்ஜாதான் என்பது ஸைதிக்கும் பிறகு தெரிந்து விட்டது. மறுநாள், கேடேயின் வீட்டிற்கு ரான்ஜா குசலம் விசாரிக்க வந்தபோது அவனுக்கும் ஸைதிக்கும் பலத்த வாக்குவாதம் ஏற்பட்டது. அவர்களுக்கு முதுகைக் காட்டியவாறு இருந்த ஹீர் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள். ''நீ உண்மையான யோகியாக இருந்தால், எனது அண்ணியின் வியாதி என்ன என்று சொல்'' என்று ரான்ஜாவிடம் கூறினாள் ஸைதி. ரான்ஜா, கிரௌஞ்ச பட்சி (ஹீர், சாக் பறவைகள்)களின் கதையைக் கூற ஆரம்பித்தான்; கூடவே, ஸாதி–முராத், இருவரிடையே உள்ள காதல் பற்றியும் பிரஸ்தாபித்தான். இதைக் கேட்ட ஸைதியின் மனம் இளக ஆரம்பித்தது. ஆனால் அவள் பொய்யான அலட்சியத்துடன் வேலைக்காரியிடம் அவனுக்குப் பிச்சை போட்டு விரைவில் அனுப்பும்படி கூறினாள். வேலைக்கார ராய்பா கை நிறைய அரிசி கொண்டு வந்து அவனது பாத்திரத்தில் அதைப் போடும்போது, ரான்ஜா தனது பிச்சைப் பாத்திரத்தைக் கையிலிருந்து நழுவ விட்டான். அரிசி கீழே முற்றம் முழுதும் விழுந்து சிதறியது. ஹீருடன் பேசுவதற்கான சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காகவே ரான்ஜா அவ்வாறு செய்தான். ஹீர், ரான்ஜாவின் பக்கம் திரும்பி அவனைப்

பார்த்தவுடன், அவனது ஆழ்ந்த பிரேமைக்குத் தன்னை அர்ப்பணித்தாள். ஸைதியின் முன்னிலையில் தன் நிலை முழுவதையும் ஹீர் விவரமாகக் கூறிவிட்டாள். அண்ணியும் நாத்தனாரும் சேர்ந்து தத்தம் காதலை வெற்றி பெறச் செய்வதற்கான வழிகள் பற்றி யோசிக்கத் தொடங்கினர். ரான்ஜா "காலாபாக்"கில் தங்கியிருந்தான். சாதாரணமான யோகிகளைப் போலவே அவனும் சில சமயம் மிகுந்த மென்மையான போக்குடனும், வேறு சமயங்களில் மிகக் கடுமையாகவும் நடந்து கொண்டான். பலரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தது மட்டுமல்ல; பலரை தான் உட்காரும் பிரம்பு ஆசனத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ஓட ஓட விரட்டினான். அனேக ஸ்திரீகள் தமது மனோ வேதனைகளை அவனிடம் கூறி, அவற்றுக்கான நிவாரணம் வேண்டினர். கடைசியில், தனது வியாதிக்கு மருந்து கேட்கும் சாக்கில், ஹீரும் ரான்ஜாவைச் சந்திக்கச் சென்றாள். தன் உடல் முழுதும் விபூதி பூசிக் கொண்டு, சாம்பிராணிப் புகையின் முன்பு அமர்ந்திருந்த ரான்ஜா, ஹீரைக் கண்டு எழுந்து நின்றான். ரான்ஜாவைக் கண்ட ஹீர் என்ன செய்தாள், என்பதை மிகுந்த நயத்துடன் கவி கூறுகிறார். "முதலில் ஹீர், மரியாதையுடன் அவன் காலைத் தொட்டாள். பிறகு, நெஞ்சாரத் தழுவிக் கொண்டாள். ஒரு அதிசயம் நிகழ்ந்தது: விட்டில் பூச்சியினால் நெருப்பு எரிந்தது. நெருப்பின் ஜ்வாலையினால் உலக முழுதும் செய்தி பரவி விட்டது. கொள்ளைக்காரர்களின் தலைவி, ஹீர், யோகியின் முன்பு, வந்த உடனே அவனை மயக்கி இழுத்துக் கொண்டு போய்விட்டதாகச் சொல்லப்பட்டது. ஏற்கனவே, யோகியின் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது; இப்போது, இந்த நெருப்பு, வீட்டையே எரித்து விட்டது," என்கிறார் அவர். வீட்டுக்குத் திரும்பிய ஹீர், ஸைதியிடம் சொன்னாள்: "நமது பருவம் பாழாகிக் கொண்டிருக்கிறது. உன்னுடைய காதலன் உனக்குக் கிடைக்கவும், எனக்கு ரான்ஜா கிட்டவும் ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும். தினசரி நான் காலாபாக் போய்வருவது நன்றாயிருக்காது. ஏதேனும் ஒரு உபாயத்தின் மூலம் நாம் வீட்டில் இருந்தவாறே காதலர்களின் தரிசனத்தைப்

பெற வழி காண வேண்டும்.''

ஹீர், ஸைதி இருவரின் எண்ணமும் உறுதிப்பட்டு விட்டது. ஹீரின் உடல் நிலை சீ ராவதற்கு, அவள் வெளியே 'காற்றாடப் போய்வருவது அவசியம் என்பதைத் தனது தாய் ஒப்புக் கொள்ளும்படி ஸைதி செய்து விட்டாள். அடுத்த நாள் காலையிலேயே ஹீர், ஸைதி இருவரும் தோழிகளுடன் குளக்கரையை அடைந்தனர். தனது காலில் பெரியதொரு முள்ளை ஹீர் வேண்டுமென்றே குத்திக் கொண்டாள்... உடனே ஸைதியும் அவளது தோழிகளும் ஹீரைப் பாம்பு கடித்து விட்டது, என்று கூச்சல் போட்டனர். பல்லைக் கடித்தவாறு தரையில் படுத்துவிட்டாள் ஹீர்; மூச்சையும் அடக்கிக் கொண்டாள். எல்லோரும் பார்த்துக் கொண்டிக்கும் போதே அவளது உடல் நீலமாக ஆரம்பித்தது. ஒரே வினாடியில் கிராமம் முழுதும் அங்கே கூடிவிட்டது. ஹீரைக் கட்டிலில் கிடத்தி வீட்டுக்கு அழைத்துச் சென்றனர். பல பெரியவர்களும், பாம்பாட்டிகளும் வரவழைக்கப்பட்டனர்; ஆயினும் பயன் ஏதும் இல்லை. ஸைதி, 'காலா–பாக்'கில் வந்திருக்கும் சித்த புருஷனின் சக்தியைப் பற்றிக் கூறினாள். பெண்கள், ஹீரின் கணவன் ஸைதேயை, யோகியிடம் அனுப்பினர்; ஆனால் யோகி, தனது பிரம்பு ஆசனத்தை எடுத்துக் கொண்டு, அவன் மேல் பாய்ந்து விரட்டவே, சைதே உடல் முழுதும் நடுங்கிக் கொண்டு வீடு திரும்பினான். கடைசியில் சைதேயின் தகப்பன் அப்பூ, தானே யோகியிடம் சென்றான். யோகியும் இதையே விரும்பியதால், வர ஒப்புக் கொண்டான். பிறகு என்ன நிகழ்ந்தது என்பதைக் கவி, அழகாக வர்ணிக்கிறார்: ''மந்திரம் ஒன்றுதான்; ஆனால் இரண்டு பொம்மைகள் நடனமாடின. ஆண்டவனின் லீலைதான் என்ன! யோகி இன்று வந்திருக்கிறான்; பெண்களைக் கடத்திச் செல்பவர்கள் கூடாரமே அடித்துள்ளார்கள்,'' என்கிறார் கவி வாரிஸ்ஷா.

மேலே செய்ய வேண்டிய ஏற்பாடுகளுக்குப் பொறுப்பு ஏற்றுக் கொண்ட ஸைதி, கிராமத்துக்கு வெளியே, கிராமச் சுத்தித் தொழிலாளி ஒருவனின் வீட்டில் யோகியைத் தங்கச் செய்தாள். யோகி, தனது அறையில் ஹீரும் மற்றும் ஒரு

கன்னிப் பெண்ணும் மட்டுமே இருக்க வேண்டும்; மற்ற அனைவரும் போய்விட வேண்டும் என்று கூறிவிட்டான். ஹீரை மிகவும் கொடிய விஷம் கொண்ட பாம்பு கடித்து விட்டது, என்றான் யோகி. தாமோதர் கவி, யோகி என்ன கூறினான், என்பதைக் கூறுகிறார்:

"இவளைக் கடித்துள்ள பாம்பு, ஃபனியரும் இல்லை;
திலியரும் இல்லை; கக்கட் வகைப் பாம்போ, சங்க
சூடனோ கூட இல்லை. சிறிய அளவு, ஆனால் கடும்
விஷம் கொண்ட பிஸியர் பாம்புதான் இவளைக்
கடித்திருக்கிறது; விஷத்தை வெளியேற்றுவது, எனக்கு
மிகவும் கடினமாக இருக்கிறது."

இதைக் கேட்ட எல்லோரும் பயம் கொண்டவர்களாக அங்கிருந்து சென்று விட்டனர். யோகி, ஸைதி, ஹீர் மூவர் மட்டுமே தனியாக இருந்தனர். நள்ளிரவுச் சமயத்தில் ரான்ஜா, இஸ்லாமிய ஞானிகளைப் பிரார்த்தனை செய்தான். ஞானி பஹா உலதீன் ஜகரியா, பெரியதொரு சப்தத்துடன் சுவரை விழச் செய்து, வழி செய்து கொடுத்தார். ஹீரும் ரான்ஜாவும் அந்த வீட்டிலிருந்து கிளம்பும் சமயம் ஸைதி, தானும் தனது காதலனை அடைய வழி செய்யுமாறு கூறினாள். ரான்ஜா மறுபடியும் ஐந்து ஞானிகளைப் பிரார்த்தித்தான். முராதும் தனது ஒட்டகம் "உஸ்; உஸ்" என்று சப்திக்க, வந்து சேர்ந்தான்.

பொழுது விடிந்தவுடன் ஹீரின் கணவன் சைதே, இரண்டு தனிக் குழுக்களை, ஹீரைப் பிடிக்கவும், ஸைதியைப் பிடிக்கவும் அனுப்பினான். முதல் குழு பலூசிகளிடம் பல் உடைபட்டுத் திரும்பி வந்தது. ஆனால் இரண்டாவது குழு, ரான்ஜாவைப் பிடித்து விட்டது. அது, ரான்ஜாவை அடித்து நொறுக்கி, குற்றுயிரும், குலையுயிருமாகச் செய்து விட்டு, ஹீரைத் தன்னுடன் அழைத்து வந்தது. ரான்ஜா, ராஜா அதலிடம் சென்று முறையிட்டான். ராஜா அதலி, தனது ஆட்களை அனுப்பி, ஹீரையும், கேடே (சைதே)யையும் கட்டியிழுத்து வரச் செய்தான். கேடே, ராஜாவிடம் சொன்னான்: "மஹராஜ்! இவன் ஒரு கொள்ளைக்காரன். இவனை மந்திரவாதி என்று நினைத்து எனது மனைவிக்கு சிகிச்சை அளிப்பதற்காக அழைத்து வந்தோம்; ஆனால்

இவன் அவளையே இழுத்துக் கொண்டு மறைந்து விட்டான்.'' அரசன், ஹீரை, கேடேயிடம் ஒப்படைத்தான். இந்த அநியாயத்தைக் கண்ட ரான்ஜா ஆத்திரத்தினால் சாபமிட்டான். அதைத் தொடர்ந்து நான்கு திசைகளிலிருந்தும் தீ நகரைச் சூழ்ந்து கொண்டது. ரான்ஜாவின் இச்செயலைக் கண்ட அரசனுக்கு, அவன் மீது நம்பிக்கை ஏற்பட்டது. பிறகு அவன் ஹீரை, ரான்ஜாவிடம் ஒப்புவித்தான். கேடே, வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு, ரங்க்பூர் திரும்பினான்.

ஹீரும் ரான்ஜாவும் மலைப் பிரதேசத்தில் சில காலம் சுற்றிக் கொண்டிருந்தனர். பிறகு ஜங் திரும்ப நிச்சயித்தனர். ஜங்கின் எல்லைக்கு அவர்கள் வந்து சேர்ந்தவுடன், இடையர்கள் நேரில் வந்து, ஹீரையும் ரான்ஜாவையும் தமது வீட்டுக்கு அழைத்துச் சென்றனர். அவர்கள் ரான்ஜாவின் காதிலிருந்து குண்டலங்களைக் கழற்றி, தலைமுடியை நேராக்கி, பாலன்னம் ஊட்டி, அவன் அமர்வதற்காக வண்ணக் கம்பளம் விரித்தனர். ஆனால் இந்த மரியாதையெல்லாம் வெறும் வெளி வேஷம்தான். மனத்துக்குள் அவர்கள் அவமானத்தினால் செத்துக் கொண்டிருந்தனர். கடைசியில் அவர்கள் ரான்ஜாவை ஏமாற்றும் எண்ணத்துடன் ''இவ்வாறு நடப்பது சரியில்லை. நீ தஃத் ஹஜாரா சென்று, உன் குடும்பத்தினருடன் வந்து, ஹீரை முறையாக திருமணம் செய்து அழைத்துப் போ'' என்றனர். உடனே ரான்ஜா தஃத் ஹஜாரா சென்று விட்டான். போகும் வழியில் அவன் நினைத்தான், தனது அண்ணிமார்களின் கேலிக்குச் சரியானபடி பதில் சொல்லிவிடப் போவதாக. ஆனால் நிகழவிருந்ததோ வேறொன்று.

ரான்ஜா சென்ற பிறகு, ஹீரின் தாய்-தந்தையர் அவளுக்கு விஷம் கொடுத்துக் கொன்று விட்டனர். ''எங்களது விருப்பம் ஒருவிதமாக இருந்தது; ஆனால் அல்லாவின் இச்சை வேறுவிதமாகி விட்டது,'' என்று அவர்கள் ரான்ஜாவுக்குச் செய்தி அனுப்பினர். ரான்ஜாவிடம் கடிதம் கொடுக்கும் சமயம், கடிதம் கொண்டு வந்த ஆள் பெரிதாக விக்கி, விக்கி அழுது கொண்டே, ஹீர் ஆண்டவனுக்குப் பிரியமானவளாகி

விட்டாள், என்று அவனிடம் கூறினான். அதைக் கேட்ட ரான்ஜா, துக்கம் தொண்டையை அடைக்க, பெருமூச்சு விட்டவாறே உயிர் நீத்தான்.

முதன் முதலில் ஹீரின் கதையை எழுதியவர் தாமோதர் கவியாகும். அவர் ஜங்கின் பட்வாரியாகப் பணிபுரிந்தவர். "ஹீரின் வாழ்வில் என்னென்ன நிகழ்ந்ததோ, அவைகளை நான் என் கண்களால் பார்த்தேன்," என்று அவர் பல இடங்களில் எழுதியிருக்கிறார். இந்து சம்பிரதாயத்திற்கு ஏற்ப, தாமோதர் கவி, கதையை துக்ககரமாக முடிக்கவில்லை; மாறாக, கதையின் முடிவில் ஹீரும் ரான்ஜாவும் மெக்காவுக்கு யாத்திரை செல்கின்றனர். மேலும், தாமோதரின் ரான்ஜா, வாரிஸ்ஷாவின் கதாநாயகனைப் போல, ஆரோக்கியம் பெற்ற பஞ்சாபியாக இல்லை. மாறாக, பகவான் கிருஷ்ணனைப் போன்று குழல் ஊதுபவனாகவும், நகைகளை அணியும் பால கோபாலனாகவுமே இருக்கிறான். மசூதியில் ரான்ஜாவைக் காணும் தீவரி, அவனது களங்கமற்ற சௌந்தரியத்தைப் பார்த்த உடனேயே தன்னையே தானம் செய்து விடத் தயாராகிறாள், ''அவளால் ஒரு அடி கூட மேலே எடுத்து வைக்க முடிவதில்லை; இயலுமானால், தானே அவனை மணம் செய்து கொள்ளத் தயார், என்கிறாள் அவள்'' என்பது தாமோதரின் வாக்கு.

தாமோதர் கவிக்கு மாறுபட்ட முறையில், வாரிஸ்ஷா கதையை துக்கமான முடிவுடையதாகச் செய்துள்ளார். ஷியா முஸல்மானாக அவர் இருந்ததன் காரணமாக, அவருடைய அனுபவத்தில் துக்கமான முடிவே, அதிகமான அளவு வாய்த்திருந்தது. ஆகவேதான், இக்கதைக்கு துக்ககரமான முடிவை அளித்து, அதை மிகுந்த வேகம் உடையதாகச் செய்துள்ளார் அவர்.

பலர், ஹீரின் கதையைக் கற்பனை என்று கருதுகின்றனர். ஆனால் ஹீரின் சமாதி, ஜங்கில் இன்றுவரை நிலைத்திருக்கிறது. "ஹீர் அன்னை" என்று மக்கள் அவளுக்கு மரியாதை செலுத்துகின்றனர். கதை உருவத்தில் நிச்சயமாக மாறுதலை அடைந்திருந்தாலும், ஹீரின் வாழ்க்கை உண்மையாக நிகழ்ந்த ஒன்று என்பதை, இந்த சமாதி

உறுதிப்படுத்துகிறது. மேலும், பஞ்சாபியர் மானுடக் காதலின் அடையாளமாக மட்டும் இந்தக் கதையைக் கருதுவதில்லை; ஆத்மா–பரமாத்மாவுக்கு இடையே உள்ள பிரேமையை அது குறிப்பதாகவும் நம்புகின்றனர். அந்த அளவுக்கு ஹீர்–ரான்ஜா வின் கதை அவர்களிடையே பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது.

# மிர்ஜா ஸாஹிபான்

### குர்பக்ஷ் சிங்

கைகால்களை ஆட்டிக் கொண்டே, வேகமாக நடந்து வந்த ஒரு சிறு பெண், ஒரு வீட்டின் கதவருகில் வந்து நின்று, குரல் கொடுக்கிறாள். அவளுடைய வயதே உள்ள ஒரு பையன் உள்ளேயிருந்து வெளியே வருகிறான். "வேண்டாம்; வேண்டாம்" என்று சொல்லும் பெண்ணின் வார்த்தையைச் சட்டை செய்யாமல், அவளுடைய பையை எடுத்துக் கொண்டு, தன் பையுடன் அவளுடையதையும் வைத்துக் கொள்கிறான்; இருவரும் நடக்கிறார்கள். "மிர்ஜா, என் பையை நானே தூக்க ஏன் விடமாட்டேன் என்கிறாய்?"

"உன் பையை எடுத்து வருவதனால்தான் எனக்குப் பள்ளிக் கூடம் போகவே மனசு வருது; உண்மையிலே எனக்குப் படிக்கிறதிலே இஷ்டமே இல்லே." வெகுளியாகப் பதில் சொன்னான் பையன்.

"நான் சொல்றேன், நீ படிக்கணும்னு. எனக்குப் படிக்கறதுன்னா, ரொம்பப் பிடிக்கிறது. இப்போ நான் வந்து, ரொம்ப சுவாரசியமான புஸ்தகம் ஒண்ணு படித்துக் கொண்டுள்ளேன்." சொல்லிக் கொண்டே சிறுமி தன்னுடன் இணைந்து வந்த சிறுவனின் இடுப்பைத் தனது கையால் சுற்றிக் கொண்டாள்.

"சரி, ஸாஹிபான்; நீ சொல்றதுனாலே படிக்கிறேன். ஆனா, வாத்தியார் சொல்றது ஒண்ணும் என் மண்டைலே ஏறமாட்டேங்கிது". தன்னுடைய இடுப்பைப் பிடித்திருந்த கையின் விரல்களை அவன் தனக்குள்ளாகவே எண்ணிக் கொண்டிருந்தான்.

பள்ளியில் ஆசிரியர் வந்தார்; தனது ஆசனத்தில் அமர்ந்து

கொண்டார். வகுப்பைச் சுற்றி நோட்டம் விட்ட அவரது கண்கள், ஸாஹிபானுக்கு வலது புறம் உட்கார்ந்து கொண்டு, மனதை எங்கோ அலையவிட்டிருந்த மிர்ஜாவின் மீது விழுந்தன.

"ஸாஹிபான், உன்னோடே சிநேகிதன் மனசிலே படிக்கற ஆசையை உண்டுபண்ணேன். எப்படி வாயை மூடிக்கிட்டு, கல்லு மாதிரி உட்கார்ந்திருக்கான் பாரு! பள்ளிக்கூடத்துக்கு வெளிலே மட்டும் ரொம்ப துருதுருன்னு இருக்கானே!"

"நான் இன்னிக்கு இவன்கிட்டே நிறையச் சொல்லி யிருக்கேன். இன்னிலேருந்து படிக்கிறேன்னு சொன்னான், மௌல்விஜீ!"

"ஏ, மிர்ஜா! நாளைலேருந்து நீ இப்படி கல்லு மாதிரி உட்கார்ந்துட்டிருக்கிறதைப் பார்த்தேன்னா, உடனே உங்கப்பாவுக்கு உங்க மகனை தானாபாத்துக்குத் திருப்பி அழைச்சிட்டுப் போயிருங்கன்னு சொல்லியனுப்பிச்சிடுவேன், இங்கே நீ ஒரு உபயோகமில்லாமெ, நம் ரெண்டு பேர் நேரத்தையும் வீணடிச்சுகிட்டு இருக்கே!"

"இன்னும் ஒரு வாரத்திலே பாருங்க, ஐயா; நான் என் பீபோ அத்தை வீட்டுக்குப் போய், இவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கறேன். இதுவரை இவனுக்குப் படிப்பிலே ருசி ஏற்படலே; ஆனால் இவன் நிஜம்மாவே புத்திசாலிதான் ஐயா!" என்றாள் ஸாஹிபான்.

பள்ளி விட்டவுடன், ஸாஹிபான், அத்தை வீட்டுக்கு மிர்ஜாவுடன் சென்று மௌல்வி கூறியதை அவளிடம் கூறினாள். பீபோ அத்தையும் இதற்கு முன் பலதடவை அவளிடம், மிர்ஜாவுடன் சேர்ந்து படிக்கும்படி சொல்லியிருக்கிறாள். ஆனால் அத்தை, மிர்ஜாவிடம் இன்று கூறிய வார்த்தைகள், பையனின் மனத்தில் ஆழமாக உறைத்தன.

"மிர்ஜா, மௌல்வி இந்த விஷயத்தை சௌதரி அண்ணாவுக்கு எழுதிட்டார்னா, அவர், நான் உன்னைக் கவனிக்கவே இல்லேன்னு நினைச்சிருவார். இரண்டே நாளிலே வந்து உன்னை அழைச்சுட்டுப் போயிருவார். ஆயிசு

முழுக்க தங்கைக்கும் அவருக்கும் முன்னாலே முகத்தைக் காட்ட முடியாமல் போயிரும் எனக்கு''

பீபோவிற்கு குழந்தை ஏதும் பிறக்காததால், அவள் தன் சகோதரியின் மகன் மிர்ஜாவை வளர்த்து வந்தாள். ஸியால் கிராமத்து மௌல்வி நன்றாகச் சொல்லிக் கொடுப்பவர் என்பது பிரசித்தம். மிர்ஜாவின் மாமா பெண்தான் ஸாஹிபான்.

''ஆமாம், அத்தே; அப்புறம் என் படிப்பும் 'டப்'-பாயிடும். ரொம்ப நாளாவே அம்மா சொல்லிட்டிருக்காங்க; நான் பெரியவளாயிட்டேனாம்; அதுனாலே பள்ளிக்கூடமெல்லாம் போகக் கூடாதுன்னு. என்னோடே தான் மிர்ஜா இருக்கானேன்னு, நான் சொல்றதுனாலே அம்மா 'சரி'ங்கறா. மிர்ஜா இல்லேன்னா, பள்ளிக்கூடத்துக்கு அனுப்பமாட்டா!'' ஸாஹிபான் தன் நிலையையும் விளக்கினாள்.

மிர்ஜா ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி விட்டான்.

மிர்ஜாவின் சித்தி பீபோ, அவனிடம் உணர்ச்சிவசப்பட்ட குரலில் சொன்னாள்; ''சொல்லுப்பா; நீ இருக்கிறதுனாலேதான் பாழடஞ்சு கிடக்கிற என் வீட்டிலே வெளிச்சம் ஏற்பட்டிருக்கு. எனக்காகவானும், மனசு வைச்சுப் படிடாப்பா! அம்மாகிட்டே எனக்குக் கெட்ட பேர் வராமே இருக்கணும்''.

அன்பானவர்கள் தந்த அதிர்ச்சி வைத்தியத்தினால் மிர்ஜா தூண்டப்பட்டு ஒரு வருஷத்துப் பாடத்தை ஒரே மாதத்திலேயே படித்துத் தீர்த்தான். மௌல்வியும் வகுப்பிலேயே பல தடவை அவனைத் தட்டிக் கொடுத்தார்.

முன்பெல்லாம் அவனுடைய உறக்கத்தில் வரும் கனவு இதுதான்! மிர்ஜா, ஸாஹிபானின் பையை எடுத்துக் கொண்டு ஸ்கூல் செல்கிறான்; தனது இடுப்பைச் சுற்றியுள்ள ஸாஹிபானின் கை விரல்களை எண்ணிக் கொண்டே; பள்ளி இன்னும் தொலைவில் இருக்கிறது. அவர்கள் சென்று கொண்டே இருக்கின்றனர். அவன் இதயம் முழுதும் ஒரு விசித்திரமான மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருக்கிறது. தனக்குள் அந்த மகிழ்ச்சியை அடக்கிக் கொள்ள அவனால் இயலாதபோது, அவன் உறக்கம் கலைந்து விடுகிறது.

ஆனால் இப்போதோ அவனது கனவு வேறுவிதமானது.

ஸாஹிபான் அவனுக்குக் கற்றுக் கொடுத்தவாறு இருக்கிறாள். புத்தகங்கள் முடிந்து கொண்டிருக்கின்றன. கடைசிப் புத்தகத்தைக் கீழே வைத்து விட்டு, ஸாஹிபான் பளபளக்கும் தனது கண்களால் அவனைப் பார்த்த வண்ணம் அவனிடம் கூறுகிறாள், மிர்ஜாவின் கையைப் பிடித்தவாறே: "இனிமேல் உனக்கு நான் என்ன கற்றுக் கொடுக்கப் போகிறேன்!" ஸாஹிபானின் விரல்களின் ஸ்பரிசம் அவனுக்குப் பல புதிய பாடங்களைக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தது. தொடர்ந்து அவனது உறக்கம் கலைகிறது. ஆனால் கனவுடன் ஒப்பிடும் போது, நனவுலகம் ருசியற்றதாக இருப்பதை உணர்ந்த மிர்ஜா, மறுபடி கண்களை மூடிக் கொள்கிறான். "இவ்வளவு படிச்சும் உன் மனசுக்குத் திருப்தி ஏற்படல்லியா, மிர்ஜா; மறுபடியும் வந்துட்டியே?" என்று சிரித்தவாறே கேட்கும் ஸாஹிபானின் முகத்தைக்காணும் அவன் கூறுகிறான்: "நான் படிக்க வரல்லே: கொஞ்ச நேரம் உன்னைப் பக்கத்திலே உட்கார்த்தி வச்சிட்டு ஆகாசத்திலே பறக்கணும்னு தோணுது. குதிரை கொண்டு வந்திருக்கேன். வா, ஸாஹிபான், என் பின்னாலே உட்கார்ந்துக்கோ." பிறகென்ன? அவர்களது குதிரை தரையில் ஓடுவதில்லை; அதன் மேல் அமர்ந்து அவர்கள் வான வெளியில் தான் பறக்கின்றனர்.

மிர்ஜா, ஸாஹிபான் இருவருடைய வாழ்விலும் அந்த ஆண்டு, மிக இனிமையானதாக இருந்தது. பகலின் அபிலாஷைகள் இரவில் நட்சத்திரங்களாக மாறி ஒளி தந்தன; பூமியும் வானும், வண்ணக்கோலம் கொண்டு விளங்கின. ஒருவரின் கை மற்றவரின் தோளிலும், மற்றவரின் கை, முன்னவரின் இடுப்பைச் சுற்றியும் இருந்தன. இந்த இரண்டு இளம் ஆத்மாக்களும் வாலிபத்தின் போதையில், வண்ணப் பூந்தோட்டத்தின் நுழை வாயிலில் இருந்தனர்.

தனது மகன் படிப்பில் நன்கு முன்னேறியுள்ளதைக் கேள்விப்பட்ட மிர்ஜாவின் தந்தை, அவனைக் காண வந்தார். கொழுகொழுவென்றிருந்த அவனது தேகக் கட்டைப் பார்த்த அவர் மனதில் வேறு ஒருவிதமான ஆசை எழுந்தது... இளைஞர்கள் ஈடுபடும் வீர விளையாட்டுகளில் அவனை நிபுணனாக்க வேண்டும் என்பதுதான் அது. அம்பு

எய்வதிலும், குதிரைச் சவாரி செய்வதிலும் அவனுக்கு ஈடு யாருமே இல்லாத அளவுக்கு அவன் ஆக வேண்டும்; எதிரிகள் அவனிடம் சிறிதும் வாலாட்ட இயலாத அளவுக்கு முன்னேற வேண்டும் என்று திட்டமிட்டார் அவர்.

தனது எண்ணத்தை மைத்துனியிடம் வெளியிட்டார் அவர். அவளோ, மிர்ஜா மேலும் ஒரு ஆண்டு படிக்க வேண்டும் என்றாள்.

"இல்லை, பீபோ"; தலையை ஆட்டிக் கொண்டே பின்ஜல் கரல் கூறினார்: "நிறையப் படித்து விட்டான்; நிலச் சுவான்தார்களுக்கு உள்ள எதிரிகள் அநேகம். என் பையனுக்கு மிக மிடுக்கான வாலிபப் பருவம் வந்திருக்கிறது. இவனை வாள் வித்தை, அம்பு எய்தல், குதிரைச் சவாரி எல்லாவற்றிலும் சிறந்தவனாகச் செய்யப் போகிறேன்."

மிர்ஜா தானாபாத் போவதென்று ஏற்பாடான பின், ஸாஹிபான் தனது அத்தையின் கணவரிடம், மிர்ஜாவை இரண்டு தினங்கள் தன் வீட்டுக்கு அழைத்துச் செல்ல அனுமதி பெற்றுக் கொண்டாள். அந்த இரு நாளும் அவர்கள் ஒருவரை ஒருவர் ஒரு வினாடி கூடப் பிரியவில்லை. இருவரும் சேர்ந்தே சாப்பிட்டனர்.

"ஸாஹிபான், உன் புஸ்தகத்திலிருந்து உனக்குப் பிடித்த ஒரு கதையை எனக்குப் படித்துச் சொல்லேன்!" ஸாஹிபானும் பக்கங்களைப் புரட்டித் தனக்குப் பிடித்த ஒன்றை அவனுக்குக் கூறினாள். காதல் வயப்பட்ட அரச குமாரி ஒருத்தியின் கதை அது.

சிலைபோல் அமர்ந்து கதை கேட்ட மிர்ஜா, முடிவில் சொன்னான், "நீ கதையைப் படித்த உருக்கம், உன்னுடைய சொந்தக் கதையை எனக்கு நீ சொல்லி வந்ததுபோல் என்னை எண்ணச் செய்துவிட்டது."

"நீ ரொம்ப இவன்தான், மிர்ஜா" என்று ஸாஹிபான் அவனுடைய தாடையில் லேசாக இடித்தவாறு கூறினாள். திடீரென்று ஒரு சிறுமி, பூப்பெய்தி காதலிலும் மூழ்கிவிட்ட பெண்ணாக மாறிவிட்டது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியது அந்தச் செயல்.

கதை சொல்வதில் ஸாஹிபானின் திறமையைப்

பொறாமையுடன் ரசித்த மிர்ஜா, மேலும் ஒரு கதை சொல்லும்படி அவளை வேண்டினான். அவளும் ஒன்றல்ல, இரண்டல்ல; நான்கு கதைகள் சொன்னாள். பிறகு அவளுக்கு என்ன தோன்றிற்றோ; மிர்ஜாவின் தோளில் கை வைத்தவாறே கேட்டாள்: "மிர்ஜா, இனிமேல் என்னை எப்போதாவது நினைத்துக் கொள்வாயா?"

மூடியிருந்த அறையின் ஜன்னலைத் திறந்தவுடன் பாயும் ஒளி வெள்ளத்தினால் கண்கள் கூசுவதுபோன்று, சிறுவனின் மனதுக்குள் வார்த்தைகள் திமிறிக் கொண்டிருந்த போதிலும் வாயிலிருந்து உடனே பதில் ஏதும் வரவில்லை.

"மிர்ஜா, அப்போ என்னை முழுக்க முழுக்க மறந்துடுவியா, இல்லையா?" தன் மனத்துக்குள் எல்லாவற்றையும் புரிந்து கொண்டிருந்த ஸாஹிபான், மேலுக்கு ஒன்றும் தெரியாதவள் போல் கேட்டாள்.

கடைசியில் மிர்ஜா பதில் கூறியே விட்டான்: "ஸாஹிபான், உன்னைப் பற்றிய எந்த விஷயத்தைத்தான் நான் மறந்து விட முடியும்?"

மிர்ஜாவின் உதடுகள் துடித்துக் கொண்டிருந்ததை ஸாஹிபான் கண்டாள். அவற்றுக்கு மேலே, அவன் கண்களோ, பனித்திருந்தன; திடீரென்று, எந்த நிமிடத்திலும் கண்ணீர் வெள்ளம் பீறிட்டு வரக் கூடும் என்ற நிலைமை. அவனைப் பேச்சில் ஈடுபடுத்துவதற்காகக் கேட்டாள் ஸாஹிபான்: "பின்னே சொல்லு; என்னைப் பற்றிய எந்த விஷயம் உனக்கு அதிகமா நினைவிலே இருக்கும்?" கேள்வியுடன் கூடவே, தனது இரு கைகளாலும் அவனது உள்ளங்கையைத் தடவினாள்.

"என் இடுப்பைச் சுத்தி உன் கையை நீ போடுறது— இல்லே, இல்லே; நீ எனக்குப் பாடம் சொல்லித் தர வர்றது— இல்லே; இதுவும் இல்லே; எல்லாத்தையும் விட அதிகமா, ராத்திரி நான் என்ன கனவு கண்டேன்னு நீ கேக்கறியே, அது; அப்பறம் அதை நான் சொல்றதெக் கேட்டு உன் முகம் மலருதே அது, என் கண் முன்னாலே எப்போதுமே இருந்திட்டிருக்கும். இல்லே, ஸாஹிபான், உண்மையைச் சொல்லட்டுமா? உன்னெப் பத்தின எந்த விஷயத்தை நான் நினைவிலே

வெச்சுக்குவேன்னு எனக்குத் தெரியாது; ஆனா, உன்னை நான் என்னிக்கும் மறக்க மாட்டேன்கிறது, எனக்குத் தெரியும்.''

மறுநாள் காலை, ''நாஸ்தா'' பண்ணிவிட்டு, பின்ஜல் கரல், குதிரை மீது ஏறிக் கொண்டு புறப்படத் தயார் ஆனார். தனது சித்தியிடம் விடைபெற்றுக் கொண்டு, தனது நினைவாக ஸாஹிபானுக்கு தனது சட்டைப் பையிலிருந்த ஒரு கத்தியைக் கொடுத்தான் மிர்ஜா. மிகுந்த பிரயாசையுடன் அவளைப் பிரிந்து, திரும்பித் திரும்பி அவளைப் பார்த்தவாறே, குதிரையின் மீது ஏறி, தனது தந்தையின் பின் பக்கம் அமர்ந்து கொண்டான்.

தானாபாத் சேர்ந்த உடனேயே, மிர்ஜாவின் தந்தை வாள் போர், அம்பு எய்தல் மற்றும் குதிரைச் சவாரி ஆகியவற்றைக் கற்றுக் கொடுப்பதில் பிரசித்தமான ஒரு ''உஸ்தாத்''திடம் அவனை ஒப்படைத்தார். தவிர, தனது குதிரைகளில் ஒன்றை அவன் சவாரி செய்வதற்கெனத் தேர்ந்தெடுத்தார். வேகமாகப் பறப்பது அக்குதிரையின் இயற்கைக் குணமாக இருந்தது. யார் வேண்டுமானாலும் அதன் மீது ஏறி சவாரி செய்து விட முடியாது. ஆனால், முதல் பார்வையிலேயே அது மிர்ஜாவை அங்கீகரித்து விட்டது.

வருடங்கள் கழிந்தன. தனது கனவுகளுக்கு ஏற்ற குதிரைச் சவாரி என்னவோ, மிர்ஜாவுக்குக் கிட்டிவிட்டது. ஆனால் தனது கனவு ராணி எப்போது அக்குதிரை மீது ஆரோகணிக்கப்போகிறாள் என்று மிர்ஜா யோசித்தான். அந்த அவனது ராணி, தனது நினைவாக அவனுக்கு ''அல்ஃபலைலா'' என்ற புத்தகத்தை அளித்திருந்தாள். ஸாஹிபான் மூலமாக அவன் கேட்டிருந்த கதைகளை அவன் புத்தகத்திலிருந்து படித்தான்; படித்த அன்று இரவு தானே அந்தக் கதையில் வரும் அரசகுமாரனாக மாறி, குதிரையின் மீதேறி, ஸாஹிபானைத் தேடும் முயற்சியில் இங்குமங்கும் பறந்தான்.....

ஸியால் கிராமத்துக்குப் போய்வர வேண்டும் என்ற எண்ணம் அவன் மனத்தில் பலமுறை எழுந்தது. ஸியாலில் அழகிகள் கூட்டம் பெருத்து விட்டது, என்று அவனுக்குத் தகவல்கள் வந்து கொண்டிருந்தன.

ஸாஹிபான் பருவமடைந்து விட்டாள். வாழ்க்கை, அலைகள் நிறைந்த கடலாகியது. அத்தை பீபோவின் வீட்டுக்குத் தினசரி போய்வந்தாள். அத்தை பல முறை தானாபாத் சென்று, மிர்ஜாவையும் பார்த்து விட்டுத் திரும்பும் போதெல்லாம், "எவ்வளவு அழகான ஆண் பிள்ளையாகி விட்டான் மிர்ஜா!" என்று கூறுவதைக் கேட்ட ஸாஹிபானுக்குப் போதை ஏறிற்று: "அத்தை, நீ அவனிடம் ஸியாலுக்கு வந்து, கொஞ்ச நேரம் தங்கிப் போகும்படி ஒரு தடவை கூடச் சொல்லவில்லையா?"

"அவனென்னமோ இங்கே வரத் துடிச்சிட்டுதான் இருக்கான். ஆனால் கான் இருக்கிறாரே அவருக்கு பைத்தியம் பிடிச்சிருக்கு. அதான், குதிரை ஓட்டறதுலே, கத்திச் சண்டையிலே, அம்பு எறியறதுலே அவனைப் போல இன்னோர்த்தன் இருக்கக் கூடாதுன்னு. மிர்ஜாவோட "உஸ்தாத்"தும் எப்போதும் அவனோட ஒடடிட்டே இருக்கார்."

ஸாஹிபான் கேட்கிறாள்: "அத்தே, நானும் ஒரு காலத்திலே அவனுக்கு "உஸ்தாத்"தாக இருந்தேன்கிறது மிர்ஜாவுக்கு ஞாபகம் இருக்கா?"

"ஞாபகம் வச்சிருக்கானான்னு கேக்கறே? நீ அவனுக்குக் கொடுத்த புஸதகத்தை என்கிட்டே காட்டினான். ஒரு நிமிஷமோ, அரை நிமிஷமோ அவகாசம் கிடைச்சாக்கூடப் போதும்; ஒண்ணோ, ரண்டோ, தினம் அதிலிருந்து கதை படிக்கிறேன்; இதை நீ ஸாஹிபான் கிட்ட அவசியம் சொல்லணும் அத்தேன்னு என்கிட்டே சொன்னானே!"

இரவில் வெகு நேரம் வரை ஸாஹிபானுக்கு உறக்கம் வருவதில்லை. விதம்விதமான எண்ணங்கள்: "மிர்ஜா இப்போது, பார்க்க எப்படி இருப்பான்? அவன் இப்போது ஸியால் வந்தால், முன்னைப் போல் அவனது இடுப்பைச் சுற்றித் தனது கையைப் போட்டுக் கொண்டு சுற்ற முடியுமா? தனது தோளில் மிர்ஜாவின் கை பட்டால் எப்படி இருக்கும்? எண்ணும் போதே அவளது மேனி சிலிர்த்தது. அதன் பிறகு உறக்கம்; கனவில் மிர்ஜா வருகிறான். அவளைக் குதிரையின் மீது தன்னுடன் அமர்த்திக் கொண்டு, மேகங்களுக்கும் மேலே

பறக்கிறான்.

ஸாஹிபானின் திருமணம் பற்றிய பேச்சு ஆரம்பித்தது. பல்வேறு வரன்களைப் பற்றி எண்ணினர். பீபோ அத்தை தனது தாயிடம் ஒருமுறை தெளிவாகச் சொல்லிவிட்டாள், மிர்ஜாவைப் போன்ற பிள்ளை தேடினாலும் கிடைக்காது என்று. அந்தத் தாய்க்கும் அது சரியெனத் தோன்றிற்று; அவள், ஸாஹிபானின் பாட்டான் கீவா கானின் இஷ்டம் என்ன என்று கேட்டாள். கீவா கான் மிகுந்த தூரதிருஷ்டி வாய்ந்தவர். அவர் சொன்னார்: "நமக்கிருப்பதோ ஒரே பெண்; அவள் மூலமாக நாம் ஏன் பெரியதொரு குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ளக் கூடாது? பின்ஜலின் குடும்பமும் நமது குடும்பந்தான். சந்தட் நமக்கு சமமான குடும்பத்தைச் சேர்ந்தவர்; பெருமையுடன் வேறு இருக்கிறார். அவருடைய பையன் தாஹிர் சரியான வாலிபன். அந்தக் குடும்பத்துடன் நமக்கு சம்பந்தம் ஏற்பட்டுவிட்டால், இந்தப் பிரதேசம் முழுதும் நமதுதான்."

இந்த யோசனையை அறிந்த ஸாஹிபான் மிகவும் வேதனைப்பட்டாள். பீபோ அத்தையிடம் சென்று அழுதாள்; "அத்தே, நீ மிர்ஜாவிடம் போய் அவனை அவன் அப்பா-அம்மாகிட்டே கண்டிப்பா பேசச் சொல்லு. நீயும் மாமாவும் போயிட்டு வாங்க. அதுக்கப்புறம் கூடவா தாத்தா சம்மதிக்க மாட்டாங்க?"

பீபோ தானாபாத் சென்றாள். சகோதரி, அவள் கணவர் இருவரிடமும் பேசினாள். சகோதரிக்குத் தனது தந்தையின் குணம் தெரிந்துதான் இருந்தது. அவளது கணவரோ, மிகவும் சுய கௌரவம் உடையவர். "கீவா சந்தட்டின் உறவையும் தான் அவங்க ருசி பார்க்கட்டுமே! இதோ பார் பீபோ! நான் இதற்காக அவர்கிட்ட போகப்போறதில்லே" பின்ஜல் தெளிவாக மறுத்து விட்டார்.

கடைசியில் பீபோ மிர்ஜாவுக்கும் விஷயத்தைத் தெளிவு படுத்தினாள்: "மிர்ஜா, நீயே நேரே போய், ஸாஹிபான் மேலே முதல் உரிமை உனக்குத்தான்னு சொல்லு. கொஞ்சங்கூட காலத்தைக் கடத்தாதே. சந்தட் குடும்பத்துக்கு ஆள் அனுப்பப் போறாங்க. ஸாஹிபானுக்கு ஊண் உறக்கம்

*எல்லாம் மறந்து போச்சு."*

*மிர்ஜாவும் தனது அம்புகளையும் குதிரைகளையும் மறந்தான். சித்தியைத் தொடர்ந்து அவனும் ஸியால் வந்து சேர்ந்தான்.*

*ஸாஹிபானின் நிலையை வர்ணிப்பது கஷ்டம். இந்தச் சந்திப்பைப் பற்றி அவள் தன் மனத்தில் பல விதமாகக் கற்பனை செய்து வைத்திருந்தாள். ஆனால், மிர்ஜாவைக் கண்டவுடன் அவளுக்குக் கையும் காலும் ஓடவில்லை. வாய் திறக்கவில்லை. திடீரென்று அவளது கனவு, நனவாக மாறி அவள் முன்னே வந்து நின்றது போலாயிற்று.*

*மிர்ஜா அவளைப் பார்த்தான். அவளது தோளில் தனது கையைப் போட வேண்டும் என்று தோன்றியது; ஆனால் அவளது தோள்கள் முன்பு மாதிரி இப்போது இல்லை. அவளது கையும்— தனது இடுப்பைச் சுற்றி முன்பெல்லாம் தினமும் போடுவாளே, அந்தக் கை....... முன்போல் இல்லை.*

*"ஸாஹிபான்!" அவனது வாயிலிருந்து ஒரே வார்த்தை தான் வெளியேறியது.*

*"மிர்ஜியா"....... ஸாஹிபானின் நிலையும் அதேதான்.*

*சரியான நேரம் பார்த்து, மிர்ஜா தைரியமாக தனது தாய் வழிப்பாட்டனிடம் பேசினான்: "தாத்தா, நான் உங்க குடும்பத்தைச் சேர்ந்தவன்கிறது உண்மைதான். நீங்க என்னை உங்க மகனா ஏத்துக்கணும்; நான் ஸாஹிபானோட கூட விளையாடியிருக்கேன். படிச்சிருக்கேன். அவ, வேறே ஒருத்தன் வீட்டுக்குப் போனா, என் உரிமையைப் பறிச்சதா ஆகும்."*

*"மிர்ஜா, உன்னை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. ஸாஹிபானுக்கு மட்டும் கூடப் பிறந்த பெண் ஒண்ணு இருந்திருந்தா, நீ சொல்றதை நான் மறுக்கப் போறதில்லை. இப்போ என்னோட ஆசை, சந்தட் குடும்பத்திலே சம்பந்தம் பண்ணிட்டு, கவலையில்லாமெ இருக்கணும்கறதுதான். அதுக்கப்புறம் யாரும் நம்மை நிமிர்ந்து கூடப் பார்க்க முடியாது— நீங்களெல்லாம் என் சொந்த மனிதர்கள்தானே!" என்றார் தாத்தா.*

*மிர்ஜா மிகுந்த உணர்ச்சியுடன் சொன்னான்: "இப்போது*

கூடத்தான், உங்களை நிமிர்ந்து பார்க்க யாரும் இதுவரை பிறக்கவில்லை; எங்கப்பாவுக்கு நான் ஒரே பிள்ளையானால் என்ன; நான் ஒருத்தனே பதினோரு பிள்ளைகளுக்குச் சமமாக்கும்!"

"எனக்கு உன் மனசைப் புண்படுத்த வருத்தமாத்தான் இருக்கு. ஆனா, அவங்க வீட்டுக்கு சம்பந்தம் பேச ஆளை அனுப்பிச்சிட்டேன். வார்த்தையை மீறின பொய்யனாக நான் ஆகமாட்டேன்." பிடிவாதக்காரத் தாத்தா பேச்சை முடித்து விட்டார்.

மிர்ஜா தனது சித்தி வீட்டுக்குச் சென்று, அங்கு தான் ஸாஹிபானைச் சந்திக்க ஏற்பாடு செய்யும்படி அவளிடம் கூறினான்.

பல வருடங்களுக்குப் பிறகு அந்த வீட்டில் மிர்ஜா, ஸாஹிபானுக்காகக் காத்திருந்தான். அப்போதெல்லாம் அவனுடைய கண்கள் மட்டுமே ஸாஹிபான் வரும் வழியை நோக்கி இருக்கும். இப்போதோ, அவனது உடலின் ஒவ்வொரு அணுவும் அவளது வருகையை எதிர்பார்த்துத் துடித்துக் கொண்டிருந்தது.

"ஸாஹிபான் வந்தவுடன்...... முன்பு அவள் என்னை விட உயரமாக இருந்தாள்; ஆனா, இப்போ என் தோளுக்குத்தான் இருக்கிறா. அவளை முழுக்க முழுக்க என் இதயத்துடன் சேர்த்து இணைச்சுக்கப் போகிறேன்" என்று எண்ண மிட்டான் மிர்ஜா.

ஸாஹிபான் வந்தாள். இன்று அவள் கால்களில் சலங்கை ஏதும் இல்லை. அப்படியும் அவள் முன்னை விட அதிகமாக "ஜல்-ஜல்" என்று சப்தமிட்டு நடப்பதாக அவனுக்குத் தோன்றியது. இதுவரை அவன் செய்து வைத்திருந்த எண்ணங்கள், அவன் மனத்தில் மறுபடி எழுந்து அவனது இதயத்தைப் படபடக்கச் செய்தன.

ஸாஹிபான் அருகில் வந்தவுடன், அவனால் தனது வாயைக் கூடத் திறக்க முடியவில்லை. மெல்ல மெல்ல, ஸாஹிபான் தனது கையை அவனது இடையைச் சுற்றி வைத்தாள்; அவனும் வெட்கப்பட்டவாறே, தனது கையை அவளது தோளில் வைத்தான். ஆனால் இருவரது கைகளும்

ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்து கொள்ள முற்படாமல் வெட்கப்பட்டு நின்றன.

ஸாஹிபானின் கண்கள் விசித்திரமான பார்வையை உடையனவாக இருந்தன. அவளது கண்கள் படபடவென்று அடித்துக் கொண்டன. அவளது ஆத்மாவாகிய பறவை, பறப்பதற்கு முன்னேற்பாடாக ஒரு கிளையைத் தேடிய வண்ணம் இருந்தது. அத்தகைய கிளையின் பிரதிபிம்பத்தை அந்தப் பட்சி, மிர்ஜாவின் கண்களில் கண்டது. "சர்"ரென்ற வேகத்துடன் பறவை கிளையிலிருந்து கிளம்பி, மிர்ஜாவின் தோளை அடைந்து, அங்கே தன்னைப் பிணைத்துக் கொண்டது.

பிணைப்பிலிருந்து விடுபட்டபின் அவர்களது கண்களில் அந்நிய மனோபாவம் காணப்படவில்லை. ஒருவருடைய கண்ணில் மற்றவரின் உருவம் காணப்பட்டது மட்டுமல்ல; மற்றவரின் இதயத் துடிப்புகளும் கேட்டது. எதை வேண்டுமானாலும் சொல்வது சுலபமாகப் போய்விட்டது; எது பற்றிப் பேசுவதும் கடினமாக இருக்கவில்லை.

ஸாஹிபான் கேட்டாள்: "மிர்ஜியா, நீ இப்போது என்ன செய்யப் போகிறாய்?"

"நீ என்னுடையவள்; இந்த நம்பிக்கை ஏற்படுவதுதான் பாக்கியாக இருந்தது. உன்னை என்னிடமிருந்து பிடுங்கிக் கொள்ளத் தைரியம் உள்ள எவனும் இதுவரை பிறக்கவில்லை."

"ஆனா, சந்தட் குடும்பத்திலே, பையன்கள் பட்டாளம்போல இருக்காங்களாமே!"

"என்னோட தோள்களிலே பெரிய சேனையின் பலமே இருக்காக்கும்!" பேசிக் கொண்டே, மிர்ஜா தனது கையை அவள் தோளில் வைத்தான்.

"ஆனா, மிர்ஜியா, என்னோட கூடப் பிறந்தவங்க கூட உனக்கு மோதல் ஏற்படாம இருக்கணுமே?" ஸாஹிபானின் முகம் பயத்தினால் வெளிறியது.

"இல்லே, ஸாஹிபான்; அவங்க எனக்கும் அண்ணன்–தம்பிங்கதான். எங்கிட்ட அம்புகளும் குதிரையும் இருக்கறவரை, யாரோடையும் சண்டை போட வேண்டிய

அவசியம் ஏற்படாது. யாருக்கும் அவ்வளவு தைரியம் வராது. ஆனா, அம்மா–அப்பாவுக்கு அவமானம் வரும்னு பயந்தேன்னா, எங்கிட்ட சொல்லிரு'' சொல்லிக் கொண்டே, மிர்ஜா தனது தோளை உயர்த்தினான்.

"அவமானத்தை அவங்க தானாகவே அனுசரிச்சு ஏத்துக்கறாங்க. என் காரணமா, அவங்களுக்கே யாருக்கும் ஆபத்து வரக்கூடாதுன்னுதான் நான் விரும்புறேன். எந்த விருட்சத்திலிருந்து நான் கிளம்பி, வளர்ந்து, உன்னைப் போல ராஜகுமாரன் பார்வையிலே பட்டிருக்கேனோ, என் காரணமா, அந்த மரத்துக்கு ஒண்ணும் ஏற்படக் கூடாது.''

''பின்னே என்ன? கவலையை விடு. சரியான நேரத்துக்கு எனக்கு விஷயம் தெரியணும். நானும் என் குதிரையும் உடனே வந்து சேர்ந்துவிடுவோம். இதை நல்லாப் புரிஞ்சுக்கோ.''

தூது சென்ற மனிதர் சந்தட் குடும்பத்தினருடன் சம்பந்தத்தை நிச்சயம் செய்து கொண்டு வந்து விட்டார் என்று ஸாஹிபான் காதுக்கு மறுநாள் விஷயம் எட்டிய உடன், அவளுக்கு இறக்கைகள் முறிந்தது போலாயிற்று. திருமணத்திற்கான ஏற்பாடுகள் அவளது கிராமத்தில் துரிதமாக நடக்க ஆரம்பித்தன. திருமண தினத்திற்கு இன்னும் பதினைந்து நாள் இருந்தது. ஆனால் நாட்கள் வேகமாகக் குறைய ஆரம்பித்தன. ஸாஹிபானின் மனமும் கவலைக் கடலில் மூழ்க ஆரம்பித்தது. ஆயிற்று, நாளை ''பராத்'' வர வேண்டிய தினம்.

மிர்ஜாவிடமிருந்து தகவல் ஏதும் இல்லை. பீபோ, தானே சென்று அவனிடம் எல்லா விஷயங்களையும் சொல்லி வந்தாள். ஸாஹிபான் எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை, என்பதே அவன் சொன்ன பதில்.

''பராத்''தும் வந்து சேர்ந்தது. அந்தக் கூட்டத்தினருடன் பாடும் கோஷ்டியினரான அலிகளும் வந்தனர். கிராமம் முழுதும் ஆடல் பாடலில் மூழ்கியது. பீபோ, ஸாஹிபான் இருவரது இதயங்கள் மட்டுமே படபடவென்று அடித்துக் கொண்டிருந்தன. மிர்ஜா வர வேண்டிய வழிமேல் விழி வைத்து, கண்களும் ஓய்ந்து விட்டன. மாலை கடந்து இரவும்

வந்து விட்டது.

முகமூடி அணிந்த ஒரு வீரன், குதிரைலாயத்தை அடைந்து, தனது குதிரையை அங்கு கட்டினான். பீபோவின் உடலில் உயிர் வந்தது. அவளது கணவர் அலிகளின் பாடலைக் கேட்கச் சென்றிருந்தார். நிலவரத்தை மிர்ஜாவிடம் கூறிய பீபோ, அவன் செய்யப் போவது என்ன, என்று கேட்டாள்.

"சித்தி, தயாரா இருக்கும்படி ஸாஹிபானிடம் சொல்லிடு. கோழி கூவ வேண்டியதுதான் தாமதம், நானும் என் குதிரையும் அவளது அறையின் வாசலில் நிற்போம். எல்லாரும் அப்ப நல்லா தூங்கிட்டிருப்பாங்க''.

அதன் பின்னர் கழியும் ஒவ்வொரு வினாடியும் ஸாஹிபானுக்கு ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது.

"மிர்ஜா வரல்லேன்னா, நாளைக்கு நான் டோலியிலே உட்கார்ந்து சாவை நோக்கிப் போயிட்டிருப்பேன்— மிர்ஜா வராமெ என்னெக் கை கழுவிட்டான்னா, நான் எதுக்காக வாழணும்? மிர்ஜா என்னை ஏத்துக்கிட்டுட்டான்னா, சிறையில் வாழக்கூட நான் தயார்—"

வாத்தியங்களின் சப்தம் காதைப் பிளந்தது. ஸாஹிபான் தனது இரு கைகளினாலும் தனது இதயத்தைப் பிடித்துக் கொண்டாள். "ஐயோ! மிர்ஜா வரல்லியே; என்ன செய்வேன்!" நிராசை அதிகரிக்கவே, தற்கொலை செய்து கொள்வதற்கான வழிகள் பற்றி யோசிக்க ஆரம்பித்தாள்.

பீபோ அத்தை அவளைச் சென்று அணைத்துக் கொண்டாள். காதலன் வரவை அறிந்த ஸாஹிபானின் மனத்தில் சாவதற்குப் பதில், வாழ்வதற்கான திட்டங்கள் உருவாக ஆரம்பித்தன.

இரவு பாதிக்கு மேல் கழிந்து விட்டது. பாடல் கேட்டுத் திரும்பிய ஜனங்கள், உறக்கத்தில் ஆழ்ந்தனர். நாள் முழுதும் கேளிக்கைகளுக்குப் பிறகு கிராமம் முழுவதையும் அமைதி தழுவிக் கொண்டது. இந்த அமைதியின் நடுவே ஸாஹிபான் கட்டிலில் படுத்தவாறே, ஏதோ ஒரு ஓசையை எதிர்பார்த்தவாறு இருந்தாள். களைப்பைக் காரணம் காட்டி, படுக்கும் போது உடையைக் கூட மாற்றிக் கொள்ளவில்லை அவள்.

இதோ! 'டப்-டப்'-என்ற குளம்புகளின் ஒலி——

ஸாஹிபான் எழுந்து நாற்புறமும் பார்த்தாள். எல்லோரும் நன்கு உறங்கிக் கொண்டிருந்தனர். தூங்குபவர்களின் முகங்கள் பார்க்க அழகாக இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. "இந்த வீட்டினரின் உறவை முறித்துக் கொண்டு போக வேண்டி ஏற்படாமல் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள். கால்களை மெதுவாக வைத்து நடந்து, கதவைத் திறந்து வெளியே சென்று, சுவரை ஒட்டி நின்று கொண்டாள்.

கண்ணிமைக்கும் நேரத்தில் குதிரை அவள் அருகில் வந்து நின்றது. முகமூடி அணிந்திருந்த வீரன், தனது ஒரு காலை வெளியே எடுத்தான். ஸாஹிபான் தனது காலை அந்த இடத்தில் வைத்து, மிர்ஜா நீட்டிய கையைப் பிடித்துக் கொண்டாள். ஒரு உந்து உந்திக் குதிரை மேல் ஏறி, அவன் பின்னால் அமர்ந்து கொண்டாள். வீரனுக்கு மௌனமாக நன்றி தெரிவிக்கும் வகையில் அவனது இடுப்பைச் சுற்றிக் கையைப் போட்டுக் கொண்டு, ஒரு முறை அவனை ஆலிங்கனம் செய்து கொண்டாள். வீரன் மிர்ஜா, குனிந்து அந்தக் கையை எடுத்து அதில் முத்தமிட்டான்.

கிராமத்தின் எல்லையைத் தாண்டிய பிறகு குதிரை காற்றில் பறக்க ஆரம்பித்தது. மிர்ஜாவின் கனவும் நனவாகியது.

சிறிது நேரத்திற்குப் பிறகுதான் ஸாஹிபானுக்குக் கொடுத்திருந்த வாக்குறுதி, மிர்ஜாவின் ஞாபகத்துக்கு வந்தது உன் சகோதரர்களுக்கு ஆபத்து ஏதும் வராது, என்று அவன் கூறியிருந்ததுதான் அது. ஆனால் அவர்கள் அவனைப் பின் தொடர்ந்தால், நிச்சயம் மோதல் ஏற்பட்டுத்தான் தீரும். இதை உணர்ந்த மிர்ஜா, தானாபாத் செல்லும் பாதையைவிட்டு விலகி, வேறு ஒரு நீண்ட பாதையில் குதிரையைத் திருப்பினான்.

பொழுது புலரும் நேரத்தில், பூக்கள் நிரம்பிய தோட்டம் ஒன்றை அவர்கள் அடைந்தனர். அமர்ந்து வளர்ந்திருந்த மரங்களுக்கிடையே சென்று குதிரையை நிறுத்திக் கீழே இறங்கிய மிர்ஜா, ஸாஹிபானையும் கீழே இறக்கி, அவளை ஆலிங்கனம் செய்து கொண்டான். காதலர்கள் ஒன்று

சேர்ந்ததனால் ஏற்பட்ட அமைதியில் அவர்களது எல்லாக் கவலைகளும் மறைந்து போயின. மிர்ஜாவின் தோளிலிருந்து ஸாஹிபான் வில்லை அகற்றினாள். அந்த வில்லில் ஒரு அம்பு பொருத்தி வைக்கப்பட்டிருந்தது.

"இந்த அம்பு, இந்த வில், குதிரை, என் தோள்கள், எல்லாத்துக்கும் மேலே நீ." உணர்ச்சிவசப்பட்ட நிலையில், ஸாஹிபானின் நெற்றியை முத்தமிட்டுக் கொண்டே மிர்ஜா சொன்னான்: "இந்த உலகம் மட்டுமில்லை; மேல் உலகமும் எனக்கே சொந்தமாயிட்டுதுன்னு தோணுது!"

"இங்கே தங்கறதுக்கு என்ன அவசியம் மிர்ஜியா! நம்ம வீட்டுக்கே போயிடலாம், வா!"

"வேண்டாம் ஸாஹிபான்; அங்கே எப்படிப்பட்ட போராட்டம் ஏற்படுமோ? அதுலே அகப்பட்டுக்கிறதுக்கு முன்னாடி, உன்னை முழுசா என்னோடே ஐக்கியமாக்கிக் கொள்ளணும்கிற ஆசையைப் பூர்த்தி பண்ணிக்கிறேனே! கொஞ்ச நேரத்துக்கு நீ உலகத்தையெல்லாம் மறந்துடு, ஸாஹிபான்; இத்தனை நாள் பிரிஞ்சு இருந்தோமில்லையா! அந்தப் புண்ணை நீ ஆத்தணும்!"

ஸாஹிபானின் கால்கள் பூமியில் நிலை கொள்ளவில்லை. களங்கமற்ற காதல் வானத்தில் சஞ்சரிக்க ஆரம்பித்தவளாக, மிர்ஜாவின் தோளில் சாய்ந்தாள். பரஸ்பர இதயப் பரிமாற்றமே, புண்ணுக்கு மருந்தாக அமைந்தது. பல வருடங்களாக அவர்கள் வாழ்வில் இருந்த வெறுமை நீங்கியது. மிர்ஜாவின் ஆத்மாவைத் திணறச் செய்து கொண்டிருந்த அசுரப்பிடி விலகியது போன்ற உணர்ச்சி. "ஸாஹிபான், இந்த வினாடியில் ஏற்பட்டுள்ள நிம்மதிக்கான விலையை, என் வாழ்க்கையையே கொடுத்து ஈடுகட்டத் தயாரா இருக்கேன். உன் மடியிலே என் தலையை வச்சுக்கறேன்; இதோ, என் கண்ணுக்குள்ளே என்ன தெரியறது, பாரேன்!"

அவளது மடியில் படுத்துக் கொண்ட மிர்ஜா, தனது கைகளால் அவளை அணைத்துக் கொண்டான். சிலசமயம் ஸாஹிபான் அவனது முகத்தை நோக்கிக் குனிந்தாள்; மற்றப்போது, மிர்ஜா அவளது முகத்தைத் தன்னிடம் இழுத்துக் கொண்டான்.

களைப்படைந்த சரீரங்களில், அன்பின் பிரவாகம் மயக்க நிலையை ஏற்படுத்தியது. அம்புறாத்தூணியும் வில்லும் மிர்ஜாவை உறுத்திக் கொண்டிருப்பதைக் கண்ட ஸாஹிபான் அவற்றை அவன் கழுத்திலிருந்து இறக்கி, ஒரு புறமாக வைத்தாள். உறக்கத்தில் மிர்ஜா கண்டு கொண்டிருந்த கனவுகளுக்கு ஏற்ப, அவனது பாதி மூடிய கண்களின் அசைவுகளைக் கண்டு, அந்த அழகில் தன்னை மறந்தாள் ஸாஹிபான்.

திடீரென்று அவளுக்கு உணர்வு வந்தது, அவர்களைப் பிடிப்பதற்காக, அவளது மனிதர்கள் வந்து கொண்டிருக்கலாமென்று. சிறிதளவு சலசலப்பைக் கேட்டவுடனே திடுக்கிட்டு, மிர்ஜாவை எழுப்பலாமென்று அவள் யோசிப்பதற்குள், அது சாதாரணமான சிறிய ஒலி என்பது தெரிந்துவிடும்.

"நிஜமாகவே, விவரம் தெரிந்தவுடன் அவர்களைப் பின்தொடர்ந்து மனிதர்கள் வந்துவிட்டால்?"

அம்புறாத்தூணியில் பன்னிரண்டுக்கும் அதிகமாக அம்புகள் இருந்தன. வில்லைத் தொட்டுப் பார்த்தாள்— சிறிது கூட இறக்கமற்ற வில் அது! சகோதரர்களைப் பற்றியும், மிர்ஜாவின் குறிதப்பாது அம்பு செலுத்தும் திறமையும் நினைவு வந்தவுடன் அவளது இதயம் நடுங்கிற்று. "மிர்ஜா எனக்கு வாக்குக் கொடுத்திருக்கிறானே!" இந்த எண்ணம், சிறிது அமைதி அளித்தது. "ஆனால், எல்லோரும் சேர்ந்து அவனைத் தாக்கினால் அவனால் எப்படி அந்த வாக்கைக் காப்பாற்ற முடியும்? எண்ணிக்கையிலே அவங்க நிறையப் பேர் இருப்பாங்களே? அம்பு இருந்தால் போதும்; அவன் எவ்வளவு பெரிய கூட்டத்தையும் விரட்டிடுவான்!—"

ஸாஹிபான் மெதுவாக, அவனை எழுப்பினாள்; "எழுந்திரு, மிர்ஜா; இங்கிருந்து போய்விடலாம்!"

இனிமையான கனவுகளில் ஆழ்ந்திருந்த மிர்ஜா கேட்டான், "யாராவது வந்து விட்டார்களா, என்ன?"

"இல்லை" அவன் மறுபடி உறங்கிப் போனான்.

"கூடப் பிறந்தவங்க அவசியம் வருவாங்க." ஸாஹிபானின் பயம் வளர்ந்து கொண்டு சென்றது. "எல்லோரும் சாகப்

போறாங்க!''

மிர்ஜாவின் தலையை தனது மடியிலிருந்து மெதுவாக இறக்கி வைத்தாள்; பிறகு எழுந்து அம்புறாத்தூணியைத் தொலைவில் இருந்த மரத்தின் பின்னே உயரமான ஒரு கிளையில் மாட்டி விட்டு வந்து மறுபடி மிர்ஜாவின் தலையைத் தனது மடிமேல் வைத்துக் கொண்டாள்.

மறுபடி ஒரு எண்ணம்: "ஆயுதமில்லாத மிர்ஜாவை அவர்கள் கொன்றுவிட்டால்?'' பயத்தினால் அவள் இதயம் நடுங்கியது. "மிர்ஜாவுக்கும் அவர்களுக்கும் நடுவே நான் நிப்பேன்; என்னைத் துளைக்காமே வாள் மிர்ஜாகிட்ட வர விடமாட்டேன். அவங்களோட சாவைச் சகிச்சுக்க என்னாலெ முடியாதுன்னா, என்னோட மரணத்தையும் அவங்களாலெ எப்படிச் சகிச்சுக்க முடியும்?'' இந்த எண்ணம் ஏற்பட்ட பிறகு அவளது மனத்தில் கவலை நீங்கியது. மிர்ஜாவின் நெற்றியில், காற்றினால் கலைந்து கிடந்த அவனது சுருண்ட முடியை ஒதுக்கி விட்டு, அவனது நெற்றியில் முத்தமிட்டாள் அவள்.

குதிரைகளின் குளம்பொலி ஸாஹிபானின் காதில் விழுந்தது. கூடவே உருவங்களும் தெரிய ஆரம்பித்தன. எல்லோருக்கும் முன்பாக வந்து கொண்டிருந்த, தனது தம்பி சந்தாவை அவள் அடையாளம் கண்டு கொண்டாள். அவளுக்குக் கை, கால்கள் மரத்துப் போன உணர்வு ஏற்பட்டது. உறங்கிக் கொண்டிருந்த மிர்ஜாவை உலுக்கி எழுப்பினாள் அவள்: "எழுந்திரு; குதிரை மேல் ஏறி, இங்கிருந்து ஓடி விடுவோம்!''

"அம்புறாத்தூணி— என் அம்புறாத்தூணி எங்கே ஸாஹிபான்? இத்தனை நேரம் என் தோளில் தானே தொங்கிக் கொண்டிருந்தது. நான் அவர்களைக் கொல்ல மாட்டேன், ஸாஹிபான்; என்னோட வில்லிலே அம்பை ஏத்தற சத்தத்திலேயே நம்ம காரியம் ஜயிச்சுடும்! என்னோட அம்புறாத்தூணி எங்கே, ஸாஹிபான்?''

"என்னெ மன்னிச்சிடு, மிர்ஜியா; சகோதர பாசம் உன் மேலே இருக்கிற பிரியத்தை மறச்சிட்டுது; அம்புறாத்தூணி உன் கையிலேருந்து ரொம்ப தூரம் போயிடுத்து. அது

இனிமே உன் உதவிக்கு வர முடியாது. அவங்க எல்லாரும் வந்தாச்சு. சீக்கிரம் குதிரை மேலே ஏறிக்கோ!''

''இல்லே, ஸாஹிபான்; உன்னை விட்டுவிட்டு ஓட என்னாலெ முடியாது.'' உறையிலிருந்து வாளை உருவி எடுத்து வந்த மிர்ஜா சொன்னான்: ''உன்னோடெ கூடப் பிறந்தவங்களுக்குக் காயம் பட்டதுன்னா, என்னை மன்னிச்சிடு. வாளை வீசிச் சண்டை போட்டபடியே சாக என்னாலே முடியும்!''

ஸாஹிபான் அவனது கழுத்தைக் கட்டிக் கொண்டாள். மிர்ஜா, அவளை ஒருபுறம் விலக்கி விட்டான். ''உன்னை எதற்காக அவர்கள் கொல்லப்போறாங்க, ஸாஹிபான்! எங்கிட்டே இருந்து பிரிச்சு, கத்தியெ என் நெஞ்சிலே பாய்ச்சறதுக்கு, ஒரு ஆள் போறாது; ரெண்டு பேர் வேணும். தள்ளி நில்லு, ஸாஹிபான்! அவங்க பக்கத்திலே வந்துட்டாங்க; என்னோடே தலைவிதியை நேருக்கு நேர் சந்திக்க விடு!''

மிர்ஜா, வாளை உறையில் போட்டான். அதே சமயம் ஏழு மனிதர்கள் குதிரைகளிலிருந்து 'தொப்'–பென்று குதித்தனர். வாட்கள் பளபளத்தன. அவர்களுக்கும் மிர்ஜாவுக்கும் நடுவில் ஸாஹிபான் வந்து நின்று கொண்டாள்.

தனது சகோதரர்களிடம் ஸாஹிபான் சொன்னாள்: ''அவசரப் படாதீங்க; நான் சொல்றதைக் கேளுங்க. இனிமே, மிர்ஜாவோ, நானோ இங்கேயிருந்து ஓடிற முடியாது!''

''நாங்க யாரோட பேச்சையும் கேட்கப் போறதில்லே. நாங்க, இப்போ திருடனைப் பிடிச்சுட்டோம்.'' பேசியது, ஸாஹிபானின் சகோதரனில்லை. அவன் யாரென்பதும் ஸாஹிபானுக்குத் தெரியாது. முதல் நாள் இரவு மிர்ஜாவுடன் ஓடி வந்திராவிட்டால், யாருக்கு மனைவியாக அவள் ஆகியிருப்பாளோ அந்த தாஹிர்தான் அவன்.

ஸாஹிபான் பேசினாள்: ''நீங்க என் கூடப்பிறந்தவங்க. உங்க மேலே இருக்கற பிரியத்தினாலே, மிர்ஜாவுக்கு விரோதமான காரியத்தைச் செஞ்சிருக்கேன். நான் சொல்றதைக் கேளுங்க.''

''நீ ரொம்பவும் பிரியமான காரியத்தைத்தான் செஞ்சிட்டு

வந்திருக்கிறே!" குத்தலாகப் பேசினான், அவள் தம்பி.

"ஒரே ஒரு தடவை நான், என் மனசுக்கும் நியாயம் பண்றாப்பலே நடந்துகிட்டிருக்கேன்; எப்போதும் மற்றவங்க எதிர்பார்த்தபடிதான் நடந்துக்கிட்டிருந்தேன். அதைப் பத்தி இப்ப என்ன பேச்சு! மிர்ஜாவோடெ வில்லை மட்டும் நான் ஒளிச்சு வைக்காமல் இருந்திருந்தா, உங்கள்லே ஒருத்தன் கூட இப்ப, இங்கே நின்னுக்கிட்டிருக்க முடிஞ்சிருக்காது. உங்க மேலே நான் வைச்சிருக்கற பாசத்தினாலேதான் நான் அப்படிச் செஞ்சேன் என்னை நம்புங்க''.

"உனக்கு என்ன வேணும்? அதைச் சொல்லு," என்றான் அவள் அண்ணன்.

"இவனை உயிரோட விட முடியாது. இவன் திருடன்," என்று கூறிய தாஹிர் அதற்கு மேல் பொறுமையற்றவனாக, தனது வாளை, மிர்ஜாவின் வயிற்றைக் குறி வைத்து வீசினான். அவனது குறி தவறிவிட்டாலும், மிர்ஜாவின் மீது பட்ட காயத்திலிருந்து ரத்தம் பெருக்கெடுத்தது. அவன் சிங்கமெனச் சீறி எழுந்தான். "ஸாஹிபான், இந்த ஆள் விஷயத்திலெ நான் உனக்கு வாக்குறுதி ஒண்ணும் கொடுக்கல்லே!"

ஒரே வீச்சில், மிர்ஜா, தாஹிரைக் கொன்று விட்டான்.

இதைக் கண்ட மற்ற எல்லோரும் மிர்ஜாவின் மீது பாய்ந்தனர். வாளும் வாளும் மோதிக் கொண்டன. வாள் வீச்சிலும் வல்லவனாக இருந்த மிர்ஜா, எல்லோருடைய தாக்குதல்களையும் சமாளித்து நின்றான்.

ஸாஹிபான் கதறியவாறே, சகோதரர்களின் காலைப் பிடித்துக் கெஞ்சினாள்: ''அவரைத் தாக்காதீங்க; நான் உங்களுக்குக் குற்றம் செய்துவிட்டேன்; மிர்ஜாவை மயக்கியதும் நான்தான்; மிர்ஜாவை வரச் சொன்னதும் நான்தான்; உங்களுக்காக அவரிடம் வாக்குறுதி வாங்கினதும் நான்தான்; இப்போ எனக்காக, உங்க சகோதரிக்காக, மிர்ஜாவைத் தாக்கறதை விட்டிடுங்க.....!''

வாட்கள் எழுப்பிய ஒலியில், யாருமே அவளுடைய வேண்டுகோளைச் சட்டை செய்யவில்லை. ஆறு மனிதர்களின் வாட்களுக்கு ஈடு கொடுத்து கடைசியில் மிர்ஜாவின்

கை கனக்க ஆரம்பித்தது. எல்லோருடைய வாட்களையும் தற்போது அவனால் சமாளிக்க முடியவில்லை. ஒருசமயம் கையிலிருந்து ரத்தம் கொப்பளித்தது; மறு சமயம் தோளில் கீறல் விழுந்தது; அவனுடைய மார்பு சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டுவிட்டது. ஸாஹிபானால் இந்தக் காட்சியைக் காண இயலவில்லை. மிர்ஜாவுக்கும் மற்றவர்களுக்கும் இடையில் போய் நின்று கொண்டாள்.

"இவளை, சிறிது கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்!"

ஒரு சகோதரன், ஸாஹிபானைக் கட்டிப்போட்டுச் செய்லற்றவளாகச் செய்து விட்டான்.

மிர்ஜாவுக்கு ஏற்பட்ட ஒவ்வொரு காயமும், ஸாஹிபானின் இதயத்திலிருந்து கதறலை வரவழைத்தது. கடைசியில், ஒருவாள் மிர்ஜாவின் மார்பில் ஆழமாகப் பதிந்தது. கீழே விழுந்த அவனது கையிலிருந்து வாள் நழுவியது.

எங்கிருந்து ஸாஹிபானுக்கு திடீரென்று அவ்வளவு பலம் வந்ததோ தெரியவில்லை. சகோதரனின் கட்டிலிருந்து திமிறி வெளி வந்து, மிர்ஜாவின் அருகில் வந்து நின்றுகொண்டாள். அவனது வாளையும், கையில் இறுகப் பிடித்தவாறு சொன்னாள்: "இப்போ யாரும் என்கிட்டே வராதீங்க; நான் ஸாஹிபான் இல்லே; வெறிபிடித்த பைத்தியக்காரியாக்கும் நீங்க எல்லோரும் சேர்ந்து மிர்ஜாவை கொன்னுட்டீங்க; இப்போ அவர் சில நிமிஷம்தான் உயிரோடெ இருக்கப் போறான். அவரை ஏமாத்தினத்துக்கு அவங்கிட்ட என்னை மன்னிப்புக் கேக்க விடுங்க!"

இத்தகைய துக்கத்துக்கும்,அச்சமின்மைக்கும் எதிரே, யாரால் வாயடைத்துப் போகாமல் இருக்க முடியும்? சகோதரர்கள் விலகி நின்றனர்.

ரத்தத்தில் நனைந்து கிடந்த தலைமயிரை மிர்ஜாவின் நெற்றியிலிருந்து அகற்றிய ஸாஹிபான், அவன் கண்களிலிருந்த ரத்தத்தைத் துடைத்தாள். அவனுடைய நெற்றியை முத்தமிட்டாள்.

"மிர்ஜியா, என்னை மன்னிப்பியா?"

"எதுக்கு மன்னிக்கணும்? என் வாழ்க்கையின் முழு மதிப்பையும் தான் நான் வசூல் பண்ணிக்கிட்டேனே! ஒரு

தேவதையை இல்லே நான் தீண்டியிருக்கேன்!''

''நான் உனக்கு ஒண்ணுமே தரல்லே, மிர்ஜா; சாவை மாத்திரமே தந்திருக்கேன்!''

''இல்லே, ஸாஹிபான்; நீ எனக்கு அமரத்துவமே கொடுத்திருக்கே!''

''மிர்ஜியா, உன்னாலே ஒரு வினாடி உன் கண்ணைத் திறந்து வெச்சுக்க முடியுமா?''

''என் கண் மூடிக்கிட்டே வருது; ஆனா, உனக்கு விருப்பம்னா, அது திறந்து இருக்கும். ஆனா, நீ என் கையை, உன் கையிலே எடுத்து வச்சுக்கணும்!''

ஸாஹிபான் மிர்ஜாவின் கையை எடுத்து, அதில் முத்தமிட்டாள்.

''உன்னுடன் என் உயிரையே விடப் போகிறேன், மிர்ஜியா! இதுதான் நான் விரும்புவது; நீ வேணுமானாப் பாத்துக்கோ! நான் உங்கிட்ட இல்லே, என்னோட வாழ்க்கைக்குக் கொடுத்த வாக்குறுதியையே மீறிட்டேன். உன்னை விட, என்னோட கூடப் பிறந்தவங்க மேலே எனக்கு அதிகப் பிரியம்னு நினைக்காதே! என்னோட சொந்த சந்தோஷத்தை விட, மற்றவங்க சுகத்தை, அதிகமா விரும்பற என்னோட வழக்கந்தான் உனக்கு எமனா முடிஞ்சிருச்சு நான் உன்னுடையவ; உங்கிட்டேருந்து என்னெ யாராலேயும் பிரிக்க முடியாது.''

மிர்ஜாவின் திறந்திருந்த கண்களின் முன்பாக, எழுந்து சென்று நின்று கொண்டாள், ஸாஹிபான். மிர்ஜாவின் வாள், அவள் கையில் இருந்தது. பிடியை முத்தமிட்டு விட்டு, வாளைத் தனது வயிற்றினுள் செருகிக் கொண்டாள். மிர்ஜாவின் தேகத்தை ஒட்டினாற்போல விழுந்து உயிர்நீத்தாள்.

# ஸஸ்ஸி புன்னு

## அம்ருதா ப்ரீதம்

அரண்மனைத் தோட்டத்தில் உள்ள மரங்களில் பூக்கள் மலரும் போதெல்லாம், மாளிகையின் ஜன்னலருகே நின்று கொண்டு, ராணி ஒடிந்த ஒரு கொடியைப் போன்று, நிராசையுடன் பெருமூச்செறிவாள்: "ஆண்டவனே! பூமியின் ஒவ்வொரு அங்கமும் பசுமையாகி விட்டதே! என் வயிறு மட்டும் ஏன் வறண்டே கிடக்கிறது?" பிறகு மரங்களுக்கும் செடிகளுக்கும் வருடா வருடம் வரும் மலர்ச்சிப் பருவம், ஒருமுறை, ராணியின் உடலிலும் வந்தது. பூக்கள் நிறைந்த மரக்கிளையைப் போல, ராணியும் பேரழகுடன் விளங்கினாள்.

தனது கைகளில் மருதாணி இட்டுக் கொண்டவாறே, கற்பனாலோகத்தில் சஞ்சரிப்பது அவளது வழக்கமாயிற்று. கண்ணாடிக்கு முன் நின்று பல் துலக்கும் போதெல்லாம், அவளது உதடுகள், தாலாட்டுப் பாடல்களை முணுமுணுக்க ஆரம்பித்தன.

பட்டாடை விரித்த தொட்டிலில் முத்துக்களைக் கோத்துக் கொண்டு, அவைகளை எண்ணுவதன் மூலம், சுபதினம் வருவதற்கு பாக்கி உள்ள நாட்களைக் கணக்கிட்டு வந்தாள் அவள். ஒரு நாள், ராணி முத்துக்களைக் கோத்துக் கொண்டிருந்தபோது, நூல் அறுந்து, முத்துக்கள் தரையில் சிதறி ஓடின. பணிப் பெண்கள், முத்துக்களைப் பொறுக்கிய வண்ணம் இருந்தனர். ஆனால், அறுந்த நூலைப் போலவே, ராணியும் கவலையில் மூழ்கினாள்: "என்னுடைய நம்பிக்கைகளும் இவ்வாறே சிதறிவிடுமோ!"

பம்போர் நகரத்து அரசன், தனது கஜானாவையே திறந்து வைத்து விட்டான். மக்கள் வெறும் கையுடன் அரண்மனைக்கு

வந்தனர்; கைகள் நிரம்ப பொருள் பெற்றுச் சென்றனர். அரசனும் அரசியும் தினசரி இரவில் ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்தனர். "பிரபு! நாங்கள் ராஜ தம்பதிகள்தான்; ஆனால் உன் சன்னிதியில் வெறும் பிச்சைக்காரர்களே! எங்களுக்கு மக்கட் செல்வம் அருள்வாய்!" என்று இறைஞ்சினர்.

பூரண சந்திரனைப் போன்ற பொலிவுள்ள பெண் குழந்தையை ராணி ஈன்றாள். தனது கற்பனைகளையெல்லாம் மீறிய சௌந்தர்யவதியாக அக்குழந்தை இருந்ததைக் கண்ட அவள், உடல் முழுவதும் புளகாங்கிதம் அடைந்தவளாய், தாலாட்டுப் பாடினாள்.

தனது ரத்தத்தையே பாலாக உருமாற்றி, ராணி குழந்தைக்கு ஊட்டினாள். ஒரு நாள் அவ்வாறு பால் குடித்துக் கொண்டிருந்த ஸஸ்ஸியின் உதடுகளிலிருந்து வெண் முத்துக்கள் போன்ற பால் துளிகள் வெளியேறி, தரையில் விழுந்தன. அச்சமயம், முன்பொருநாள், முத்துமாலை அவள் கையிலிருந்து அறுந்து விழுந்து, தரை முழுதும் முத்துக்கள் சிதறிய சம்பவம் அவள் நினைவுக்கு வந்தது. உடனே திடுக்கிட்டவளாய், குழந்தையைத் தன் மார்பில் அழுந்த அணைத்துக் கொண்டாள். ஆனால் அன்று இரவு முழுவதும் அவள் உதடுகள் நடுங்கியவாறு இருந்தன.

மறுநாள் காலை, தர்பாருக்குச் சென்ற அரசன், உடனேயே அரண்மனைக்குத் திரும்பி விட்டதைக் கண்ட ராணி, வியப்படைந்தாள். திரும்பி வந்த அரசன், தொட்டிலின் அருகில் சென்று உட்கார்ந்த விதத்தைக் கண்டால், அவன் ஏதோ சமாதிக்கருகில் உட்கார்ந்திருப்பதைப் போலத் தோன்றியது.

நடுக்கமும் அழுகையும் மேலிட ராணி, தன் கணவனையும் குழந்தையையும் மாறி மாறிப் பார்த்தாள். ஒரு வழியாக அரசன் பேசினான்: "இந்தக் குழந்தையை, நமது குலத்திற்கே ஒரு களங்கமான இவளை, என்ன செய்வது? இவள் வளர்ந்து பெரியவளாகும்போது, உலகினரை விட்டுத் தனிப்பட்ட குணமுள்ளவளாக இருப்பாளாம். இவளுக்குப் பிடித்த ஆண் பிள்ளைக்காக, இவள் வீடு வாசலை மட்டுமல்ல, குலத்தின்

மானம்–மரியாதையையும் கூட விட்டு விடுவாளாம். ஜோஸ்யர்கள் இன்னிக்கு என்கிட்டே சொன்னாங்க!''

''களங்கம், சந்திரனிடம் கூடத்தான் இருக்கு'' என்று கூறியவாறு ராணி அவன் காலில் வீழ்ந்தாள்.

''சந்திரனின் குறையை எல்லாரும் மன்னிச்சுடறாங்க; மனுஷ ஜாதியோட களங்கத்தை மன்னிக்கிறதில்லே—''

''நம்ம குழந்தையும் சந்திரன் மாதிரித்தானே!'' என்று கூறியவாறே ராணி மூர்ச்சையானாள்.

தன் வயிற்றிலிருந்து உதித்ததைத் தன் கையாலேயே எவ்வாறு கொல்வது? ஆகவே மந்திரிகளும் அதிகாரிகளும் கூறிய யோசனையின்படி, சந்தன மரத்தினால் ஒரு பெட்டி செய்து, அதில் பட்டுத் துணியை விரித்து, வைரங்களினாலும், முத்துக்களினாலும் அதை அலங்கரித்து தங்கக் காசுகள் அடங்கிய பைகளுடன், குழந்தையையும் அந்தப் பெட்டியில் வைத்து ''ஆண்டவனே, இதை உன்னிடம் ஒப்படைக்கிறோம்!'' என்று கூறியவாறே அரசன், பெட்டியை நதியில் மிதக்க விட்டான்.

பிரக்ஞை திரும்பிய பின் ராணி ஓலமிட்டு அழுதவாறே இருந்தாள்: ''உன்னை எப்படித்தான் பெட்டிலே போட்டாங்களோ; செம்படவங்க உன்னை பெட்டியோட தூக்கி எடுத்து, எங்கே கொண்டு போனாங்களோ!''

நகரத்திற்கு வெளியே, நதிக் கரை ஒன்றில் துணி துவைத்துக் கொண்டிருந்த வண்ணான் அத்தாவின் பார்வையில், நதியில் பளபளக்கும் வஸ்து ஒன்று மிதந்து செல்வது தெரிந்தது. பலமுறை கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். வெள்ளம் பெருக்கெடுத்தோடும் நதியில், வண்ணக் கனவைப் போன்ற ஒரு வஸ்து மிதந்து சென்று கொண்டிருந்தது—

முத்துக்களினால் அலங்கரிக்கப்பட்ட பெட்டியின் மீது, சூரியனின் கிரணங்கள் படவே, பெட்டி பளபளத்தது. அல்லாவின் பெயரைச் சொல்லிக் கொண்டே, நதியில் குதித்து, பெட்டியை எடுத்து, கரைக்கு வந்து அதைத் திறந்து பார்த்தவன், வெகு நேரம் பார்த்த வண்ணமே இருந்து விட்டான். குழந்தைப் பாக்கியம் இல்லாத அவனுக்கென்று,

ஆண்டவன் வலுவிலே வந்து இவ்வாறு கருணை புரிந்துள்ளான் என்பதை அவனால் நம்பவே முடியவில்லை. பூரண சந்திரனைப் போன்ற எழிலுடைய குழந்தையை அல்லவா அல்லா திடீரென்று அவனுக்கு அளித்திருக்கிறார்?

இத்தகைய சௌபாக்கியத்தைப் பெற்றும், இதைக் கைவிட்டு விலக்கியவர் யாராக இருக்க முடியும் என்பது அவனுக்கு விளங்கவில்லை. ஆனாலும், மோதிரத்தைச் சப்பிக் கொண்டிருந்த குழந்தையைத் திரும்பத் திரும்பத் தன் நெஞ்சாற அணைத்து மகிழ்ந்தான் அவன்.

"எவ்வளவு அழகான குழந்தை!'' அத்தாவின் மனைவி, தன் கணவன் கொண்டு வந்து கொடுத்த சிசுவைத் தன் கைகளில் வாங்கியபோது, காய்ந்து கிடந்த அவளது இதயத்தில் பாசம் சுரந்தது.

குழந்தையின் கழுத்தில் இருந்த தங்கச் சங்கிலியில் ஒரு தாயத்து கோர்க்கப்பட்டிருந்தது. அதில் குழந்தையின் பெயர் ஸஸ்ஸி என்று எழுதப்பட்டிருப்பதைக் கண்டான்; அந்த தாயத்து மற்றும் பெட்டியிலிருந்த வைரங்கள், முத்துக்கள் எல்லாவற்றையும் ஒரு மூட்டையாகக் கட்டி, வீட்டின் பின்புறமிருந்த ஒரு அறையில், பிறருடைய சொத்தைப் பத்திரமாகப் பாதுகாத்து வைப்பது போல் வைத்தான். தனது மனதுக்குள் சொல்லிக் கொண்டான்: "மகளே, இது உன் சொத்து, பருவம் வந்ததும் நீ இதையெல்லாம் பெற்று அணியலாம்.''

வண்ணான் அத்தா, அக்கம்பக்கத்தாருக்கெல்லாம் விருந்து வைத்தான். முதன் முதலாக ஒரு தட்டு மிட்டாய்களை நதிக்கு அர்ப்பணம் செய்தான். திரும்பத் திரும்ப அல்லாவுக்கு நன்றி செலுத்தினான். "என் சகோதரர்மாருங்களே! இப்போ நான் இந்த உலகத்திலே வாழறதுக்கு லாயக்கானவானாயிட்டேன்! தூங்கிக்கிட்டிருந்த என்னோட அதிர்ஷ்டம் விழிச்சுக்கிட்டு தாக்கும்!"

அத்தாவின் மனைவி, குழந்தையைக் கட்டி அணைத்து, மார்புறத் தழுவிக் கொண்டபோது, காய்ந்து கிடந்த அவளது மார்பில் பால் சுரக்க ஆரம்பித்தது. வீணாகிக் கொண்டிருந்த அவளது தேகத்தில், ஆண்டவன் அளித்த பூ ஒன்று மலர்ந்தது

போல அவள் உணர்ந்தாள்.

இவ்வாறாக, அரண்மனையின் செல்வம் வண்ணானின் வீட்டு முற்றத்தில் விளையாட ஆரம்பித்தது.

ஸஸ்ஸியின் அழகும், வாலிபமும் வெள்ளப் பெருக்கைப் போல வளர்ந்து வந்தன. உறவுக்காரர்களிடமிருந்து பெண் கேட்டுச் செய்திகள் வர ஆரம்பித்தன. ஆனால் தனது மகளின் முகத்தை அத்தா பார்க்கும் போதெல்லாம், அவனது கண்கள் தாமாகவே மூடிக் கொண்டன. "இந்தப் பெண்ணுக்காக நான் ஒரு தேவனைத்தான் தேடிக் கொண்டு வர வேண்டும். இவளுக்கு லாயக்கான கணவன் யாரோ; எனக்குத் தெரியலையே!"

அத்தாவிடம் சம்பந்தம் பேச வந்த உறவுக்காரர்கள் கூறியது இதுதான்: "இவனுடைய பெண் ஆகாசத்திலேர்ந்து குதிச்சிருக்கா; அவளைத் தேடிக்கிட்டு ஒரு ராஜாதான் மாலையோட வரப்போறான்."

ஸஸ்ஸியின் அழகின் பிரபல்யம் நான்கு திசைகளிலும் பரவியது. விஷயம் குடிசைகளைத் தாண்டி, செலவந்தர்களுக்கும், மந்திரிமார்களுக்கும் எட்டியது. யாரோ ஒருவர், அரசனிடம் கூடச் சொல்லி வைத்தார். "வண்ணான் அத்தாவின் மகள், மாளிகையில் வாழத் தகுதி உள்ளவள்," என்று.

அரசன் அழைப்பதைக் கேட்ட அத்தாவின் மனத்தில் பீதி உண்டாயிற்று. "ஆண்டவனே, இது என்ன சோதனை!" என்று கலங்கியவாறே, அரசனுடைய ஆணையைத் தட்ட இயலாதவனாக, அரண்மனைக்குக் கிளம்பினான். அத்தாவின் மனைவி, ஸஸ்ஸிக்கு வாசனைத் திரவியங்கள் பூசிக் குளிக்கச் செய்து, அத்தாவுடன் அவளையும் அரண்மனைக்கு அனுப்பினாள்.

ஸஸ்ஸியை அழைத்துக் கொண்டு அத்தா, அரண்மனைக்கு வந்து சேர்ந்த பொழுது, அரசனின் கண்கள் இமைக்க மறுத்தன. "இந்த மாதிரி அழகை அரண்மனைகளில் கூடக் காண்பது கஷ்டம்; இந்த வண்ணான் எங்கிருந்து கொண்டு வந்திருக்க முடியும்?" என்று அவன் வியந்தான்.

அரசனின் கால்களின் கீழ் பூமி வழுக்கிக் கொண்டு

போவது போலிருந்தது. மூளை குழம்பியவனாக, அரசன் ஸஸ்ஸியின் கையைப் பிடித்தான். அவளுடைய தோளை நோக்கி, தனது கையை அவன் எடுத்துச் சென்றபொழுது, அவன் பார்வை அவளது கழுத்தில் தொங்கிய தாயத்தின் மீது விழுந்தது. அவனுக்குப் பூமியே ஆடுவது போன்ற உணர்வு ஏற்பட்டது. உடனே, அவன் அரண்மனை உள்ளிருந்து ராணியை வரவழைத்து, அவளிடம் அந்த தாயத்தைக் காண்பித்தான்.

"மகளே, என் மகளே!" என்று நடுங்கிய குரலில் கூவினாள் அரசி.

"நதியில் விடப்பட்ட அவனது உயிருக்கு உயிரான மகள், இவ்வளவு நாட்களுக்குப் பிறகு எவ்வாறு உயிரோடு இருக்க முடியும்?" என்ற யோசனையினால், ஸஸ்ஸியின் உருவத்தைக் கண்ட பிறகும் அந்த உண்மையை அங்கீகரிக்க அரசன் தயங்கினான்.

தனது கண்களுக்கு முன்னால் தெரிவது, இந்த உலகத்தைச் சேர்ந்த காட்சியல்ல; ஆகவே தனது கண்களை இமைத்தால், எங்கே அது கனவைப் போல மறைந்து விடுமோ என்ற பயத்தில், ராணி தனது கண்களை இமைக்கவே இல்லை.

ராஜா, வண்ணான் அத்தாவை தனக்கருகில் உட்கார வைத்துக் கொண்டு, உண்மையை முழுக்க, உள்ளது உள்ளபடிக் கூறும்படி கட்டளையிட்டான்.

"சுல்தான்! அல்லா என்னோடே சூன்யமாயிருந்த வீட்டிலே ஒளி ஏத்தி வெச்சார். முத்துனாலெ அலங்காரம் பண்ணியிருந்த பெட்டிலே இதுவும் உசந்த பட்டுத் துணி போலவே கிடந்தது; பெட்டி நதிலே மிதந்து போய்க்கிட்டு இருந்தது—"

கையைக் கட்டியவாறு வரலாறு முழுவதையும் கூறின வண்ணான், அரசனின் கால்களைப் பிடித்தவாறே கூறினான். "ஜல தேவதையைப் போல நீரிடையேயிருந்து இவள் வெளிப்பட்டாள், அரசே! ஆண்டவன் எண்ணப்படி தான் இப்படி நடந்திருக்கு; இல்லேன்னா, இந்த உசந்த குடும்பத்துக் கொழந்தை என் குடிசைலே வளர்ரதுக்கு வேண்டிய யோக்கியதை எனக்கு ஏதுங்க!"

அரசன் நூற்றியொரு தங்க நாணயங்களை அத்தாவுக்கு அளித்தான். அத்துடன் கூறினான். "அத்தா! நீ எந்தக் கிராமத்தைக் காட்டுறயோ அதை உனக்கே சொந்தமாத் தர்றேன்! ஆனா, எங்க மாளிகையின் குல விளக்கை எங்க கிட்ட அனுப்பிடு!" அரசனின் குரல், அதிகாரம் செய்வதைப் போல அல்லாமல், பிரார்த்தனை செய்வது போலவே இருந்தது.

ராணியின் இதயத்திலும் நம்பிக்கை துளிர்விட ஆரம்பித்தது. "நீ செஞ்சிருக்கிற உதவிக்கு என்னாலே பிரதி உபகாரமே பண்ண முடியாது அத்தா! ஆனா, பெத்த தாயாரோட சௌபாக்கியத்தைத் திருப்பிக் கொடுத்திடுப்பா!"

அத்தாவின் உதடுகள் துடிக்க ஆரம்பித்தன. அவனால் பேச இயலவில்லை. அவனுக்குப் பதிலாக ஸஸ்ஸியே பேசினாள். "ராணியம்மா! நீங்க எப்பெப்போ உத்தரவு பண்றீங்களோ, அப்ப நான் இங்கே ஆஜராயிடறேன்; ஆனா, சாகற நிலைமையிலே இருந்த எனக்கு எந்த வீடு அடைக்கலம் கொடுத்ததோ, அங்கேதான் இருக்கப்போறேன்."

ஆக, அரண்மனையின் ஒளி வண்ணான் வீட்டு முற்றத்தில் முழு தேஜஸுடன் பிரகாசித்தது. முன்பெல்லாம் ஆண்டவன் ஒருவனுக்கு மட்டுமே தெரிந்த உண்மை, உலகத்தார் கண்களுக்கு முன்பும் தெளிவாக விளங்கியது. நீரைப் போலவே சுயேச்சையாக, நினைத்தபோதெல்லாம் நதிக் கரையில் உலவிக் கொண்டு இருந்தாள் அவள்.

ஸஸ்ஸிக்கென்று தனியாக ஒரு தோட்டத்தை நிர்மாணித்தான் அரசன். தோழிகளுடன் அங்கு சென்று ஊஞ்சலாடியும் பாடியும் மகிழ்ந்தாள் ஸஸ்ஸி. மலர்களைப் போலவே அவளுடைய இயல்பும் நறுமணம் வீசுவதாக இருந்தது.

மக்கள் எல்லோரும் ஸஸ்ஸியின் நல்வாழ்வை விரும்பினர். பண்டிதர்களும் ஆசிரியர்களும் வரவழைக்கப்பட்டனர். ஸஸ்ஸி, படிப்பில் கவனம் செலுத்த ஆரம்பித்தாள். இரவு முழுவதும் அவளருகில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் அவள் தனது அறிவை வளர்த்துக் கொண்டாள்.

அச்சமயம், நகரத்தில் கஜனியைச் சேர்ந்த ஒரு வியாபாரி, தோட்டம் ஒன்றை அமைத்துள்ளதாகவும், தோட்டத்தின் உள்ளே இருக்கும் கட்டிடத்தில் யாருமே அதுவரை கண்டும் கேட்டும் இராத வகையில், படங்களை வரைந்துள்ளதாகவும் தெரிய வந்தது. அறிவை வளர்த்துக் கொள்வதில் நாட்டம் கொண்ட ஸஸ்ஸி, தோழிகளை அழைத்துக் கொண்டு, அந்தத் தோட்டத்துள் புகுந்தாள். அங்கே கண்ட காட்சி அவளைப் பரவசம் கொள்ளச் செய்தது. கட்டிடத்தின் இரு புறச் சுவர்களும் அலங்கரிக்கப்பட்டிருந்தன— ஒரு புறம் மலர்களாலும், மற்றொரு புறம் வண்ணங்களாலும். கட்டிடத்துக்கு வெளியே ஒரு தோட்ட வேலைக்காரன், பூச்செடிகளை 'பதியன்' போட்டுக் கொண்டிருந்தான். உள்ளே, ஒரு கலைஞன் பல வண்ணங்களில் சித்திரங்கள் வரைந்து கொண்டிருந்தான்.

படங்களைக் கண்ட ஸஸ்ஸி, அவை வெளிப்படுத்திய அழகுக்கு அஞ்சலி செய்தாள். ஆனால் அச்சித்திரங்களில் ஒன்றைக் கண்டவுடன், அவளது கால்கள், பூமியில் ஒட்டிக் கொண்டுவிட்டன. கண்கள் இமைப்பதை மறந்து விட்டன. தோழிகள் அவளை அசைத்து, பிரத்யட்ச உலகுக்குக் கொண்டு வந்தனர். பொறுமையற்ற ஸஸ்ஸி, அந்தக் கலைஞன் முன் சென்று வணங்கி நின்றாள்: "இந்தப் படம் யாருடையது சித்திரக்காரரே?"

கலைஞன் நகைத்தான்: "உருவத்தை ஆண்டவன் கொடுத்தான்; படம் வரைந்தது அடியேன்; கீசம் நாட்டு, வலி அலிஹோத்தின் மகன், பட்டத்து இளவரசன் புன்னுவின் படம்தான் இது!"

ஸஸ்ஸியின் உடலின் ஒவ்வொரு அணுவும், "புன்னு, புன்னு," என்று ஜபிக்க ஆரம்பித்தது. அறிவை வளர்த்துக் கொள்ளவும், மதிப்பை உணரவும் வந்த ஸஸ்ஸி, தனது தலைவிதியை நிர்ணயித்துக் கொண்டு விட்டாள். தனது இதயம் முழுவதையும் விலையாகக் கொடுத்து வாங்கி, அந்த உருவத்தைத் தன் இமைகளுக்குள் வசிக்கச் செய்து கொண்டாள்.

பம்போர் நகரத்தின் எல்லா அதிகாரிகளும் ஸஸ்ஸியிடம்

விசுவாசம் கொண்டவர்களாயிருந்தனர். நதிக் கரை ஒவ்வொன்றிலும் காவலர்கள் ஏற்பாடு செய்யப்பட்டனர்: "நகரிலிருந்து வரும் ஒவ்வொரு வியாபாரியையும் முதன் முதலில் ஸஸ்ஸியின் முன்பு அழைத்து வர வேண்டும்" என்பது உத்தரவு. "வியாபாரிகளின் உயிரும் பொருள்களும் பாதுகாக்கப்படும்; ஆனால், அலிஹோத்தின் இளவரசன் புன்னுவைக் கூட்டி வராத வரை அவர்கள் சொந்த நாட்டுக்குத் திரும்புவது இயலாது." கீசம் நாடு இருக்கும் திசைகளிலிருந்து வந்த காற்றுக்கு வணக்கம் செய்த ஸஸ்ஸியின் ஆணையைக் கேட்ட வியாபாரிகள் கலவரமடைந்தனர். அவர்கள் தமக்குள் ஒரு வியாபாரியை, தூதனாக கீசம் செல்ல அனுப்பினர். அலிஹோத்துக்கு விவரம் தெரிந்தவுடன், பலூசியர்களிடம் ஆத்திரம் பொங்கியது. இந்த ஆத்திரம் பற்றிய தகவல் புன்னுவுக்கும் எட்டியது. அவன் தூதனைத் தனிமையில் அழைத்துப் பேசி, ஸஸ்ஸி தன் மீது கொண்டிருக்கும் காதல் பற்றி அறிந்து கொண்டான்.

ஸஸ்ஸியைப் பீடித்த காதல் ஜுரம் புன்னுவையும் பற்றிக் கொண்டது. அவன் உடல் முழுதும் ஸஸ்ஸி மீது கொண்ட காதலினால் தகிக்க ஆரம்பித்தது. செந்நிறம் கொண்ட காலைச் சூரியன், புன்னுவின் கண்களுக்கு, ஸஸ்ஸியின் பிரேமை ஆகாயத்தில் பவனி வருவதுபோலத் தோன்றியது. அதற்கு வணக்கம் செலுத்தி விட்டு அத்தரும், வாசனைத் தைலமும் அடங்கிய மூட்டையைத் தூக்கிக் கொண்டு, வியாபாரி வேடம் தரித்து, தன் தந்தையிடம் கூறாமல், திருட்டுத்தனமாக, பம்போர் நகரை நோக்கிக் கிளம்பினான்.

கீசம்-நாட்டிலிருந்து வியாபாரிகள் வந்திருப்பதான தகவல் கிடைத்தவுடனே, ஸஸ்ஸி கவலை கொண்டவளாக, அவர்கள் தமது பல்வகையான பொருள்களைப் பரப்பிக் கடை வைத்திருக்கும் கூடாரங்களுக்குச் சென்றாள்.

புன்னுவும் வியாபாரிகளின் வரிசையில் தானும் ஒருவனாக உட்கார்ந்திருந்தான். முதலில் ஸஸ்ஸியால் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அவனது ரூப செளந்தரியத்தைக் கண்டவுடனேயே அவளுக்குத் தெரிந்து விட்டது: ஆகாயத்தில் அமர்ந்திருந்த

எந்தச் சூரியனுக்கு அவள் வணக்கம் செலுத்தினாளோ; அது வானத்திலிருந்து கீழே இறங்கி வந்துள்ளது என்று.

அத்தர் தெளிந்த பஞ்சை, புன்னு ஸஸ்ஸியின் ஆடையின் மீது தெளித்த விதம், மசூதியில் ஆண்டவனுக்கு ஆர்ப்பணம் செய்வது போல இருந்தது.

ஸஸ்ஸியின் கண்களில் வர்ணிக்க இயலாத ஒளி வீசியது. அவளுடைய நடுங்கும் உதடுகள் அவனிடம் விசாரித்தன: "வியாபாரீ! நீ ரொம்ப அதிர்ஷ்டம் செஞ்ச நாட்டிலேருந்து வந்திருக்கே; உண்மையைச் சொல்லு; நீ என் புன்னுவை எப்போதாவது பாத்திருக்கியா?"

"பாத்திருக்கேன்!" புன்னு தலைகுனிந்தவாறு பதில் சொன்னான். பிறகு தலை நிமிர்ந்து ஸஸ்ஸியின் கண்களில் பார்த்தவாறே சொன்னான்: "அரச குமாரீ! உண்மையான புன்னுவை நான் இன்னிக்குத்தான் உன் கண்களிலே பார்க்கறேன்!"

இருவருடைய தலைகளும் குனிந்து கொண்டன.

இது இப்படி இருக்க, புன்னுவின் சகோதரர்கள் விஷயம் தெரிந்தவுடன் கோபாவேசம் கொண்டு, ஒட்டகங்களின் மீதேறி, புன்னுவைப் பின்தொடர்ந்து பம்போர் நகர் வந்து சேர்ந்தனர். அந்நகர் முழுதும் மெழுகுவர்த்தி ஏற்றி வைத்தது போல் ஒளிமயமாக இருந்தது. புன்னு தங்கியிருந்த, ஸஸ்ஸியின் தோட்டத்துக்கு வந்து சேர்ந்தனர். மலர்த் திருவிழா போன்ற சூழ்நிலையில் ஸஸ்ஸியின் தோழிகள், புறாக்கள், புல்புல் மற்றும் குருவிகள் போல இங்குமங்கும் சென்று கொண்டிருந்தனர்.

தமக்குள் கலந்தாலோசித்த பின், புன்னுவின் சகோதரர்கள் ஒட்டகங்களை வெளியே மரத்தில் கட்டிவிட்டு உள்ளே சென்று, ஸஸ்ஸியையும் புன்னுவையும் அன்புடன் தடவிக் கொடுத்தனர். பேச்சில் தேனைக் குழைத்தவாறு, "நாங்க, எங்க சகோதரனோட மகிழ்ச்சியில் பங்கு கொள்ள வந்திருக் கோம்!" என்றனர்.

"ரொம்ப சந்தோஷம்; உங்க சந்தோஷத்துக்காக நான் எதையும் செய்யத் தயாராயிருக்கேன்" என்ற ஸஸ்ஸி, நிறைய வாசனைப் புகையிலையும் "புலாவ்" சாதமும்

அவர்களுக்கு அளித்தாள்.

மாலை நேரம் வந்தது. புன்னுவின் சகோதரர்கள் சாராயம் அருந்துவதற்கான ஏற்பாடுகள் செய்தனர்: "கல்யாணத்துக்கு முந்தி மூணு நாள் இப்படிக் கொண்டாட்டம் வச்சுக்கப்போறோம்!"

ஸஸ்ஸியின் தோழிகள் மருதாணி அரைத்து, அதில் அத்தரும் வாசனைத் திரவியங்களும் கலந்து வைத்துக் கொண்டனர். ஸஸ்ஸிக்கும் புன்னுவுக்கும் சுத்தமான பட்டாடை உடுத்தினர். "டோலக்" வாத்தியங்கள் முழங்கின.

அரண்மனையிலிருந்து அரசி தட்டு நிறைய முத்துக்களை அனுப்பினாள். அத்தா, பலூசி சகோதரர்களுக்கு திருஷ்டி சுற்றிப் போட்டான். அத்தாவின் உறவினர்கள் நதியின் கரைகளில் விளக்குகள் ஏற்றி வைத்தனர். இஸ்லாமியப் பக்கிரிக்கும் மிட்டாய்கள் சமர்ப்பித்தனர்.

ஆனால் கடைசியில், புண்ணியம் சம்பாதிக்க வேண்டிய இத்தருணத்தில், புன்னுவின் சகோதரர்கள் பாவகாரியம் செய்தனர். புன்னு குடிக்க வேண்டிய சாராயத்தில் கடைசியாக, தூக்க மருந்தைக் கலந்து விட்டனர். கடைசியாக ஒரு கோப்பை சாராயம் குடிப்பது வழக்கமாக இருந்ததால், புன்னுவின் மனத்தில் சந்தேகம் எதுவும் எழவில்லை. ஆனால் அந்தக் கோப்பையைக் காலி செய்த உடனேயேபுன்னுவுக்கு உறக்கம் வர ஆரம்பித்துவிட்டது. ஸஸ்ஸி, தனது தோழிகளுடன் ஒரு 'ஷாமியானா'விற்குச் சென்று உறங்கினாள். புன்னு, தனது சகோதரர்களுடன் வேறொரு கூடாரத்தில் தூங்கினான்.

பொழுது விடிந்து ஸஸ்ஸி எழுந்திருந்த போது, தனக்கு எதிரே, புன்னுவின் 'ஷாமியானா,' கிழிந்த புடவைத் தலைப்புப் போலத் தொங்குவதைக் கண்டாள். நள்ளிரவில் மயக்கத்தில் ஆழ்ந்து கிடந்த புன்னுவை அவனது சகோதரர்கள், ஒட்டகத்தின் மீது ஏற்றிக் கொண்டு கீசம் பிரதேசத்தை நோக்கிக் கிளம்பி விட்டிருந்தனர்.

பூக்களின் சுகந்தம் ஸஸ்ஸியைப் பொறுத்த வரை பெரும் துக்கமாக மாறியது. பைத்தியம் பிடித்த மனமுடையவளாக, புன்னுவை ஏற்றிச் சென்ற ஒட்டகம் செல்லும்

பாலைவனத்தை நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தாள். ஸஸ்ஸியின் தோழிகள் அலறியடித்துக் கொண்டு அவள் பின்னால் ஓடினர். ஆனால் வெறி பிடித்தவளின் வேகமான நடைக்கு ஈடு கொடுக்க முடியாமல், பின்னே சென்றவர்களுக்கு மூச்சு வாங்கியது. காலில் எதுவும் அணிந்து கொள்ளாமல், ஒட்டகத்தின் கால் சுவடுகளைத் தேடிக் கொண்டே அவள் வெகு தூரம் சென்று விட்டாள்.

"புன்னூ-புன்னூ—!" பாலைவனத்து மணற் குவியல் களின் ஏற்ற இறக்கங்கள் போல, ஸஸ்ஸியின் கூவல்களும் உயர்ந்தும் தாழ்ந்தும் கேட்கலாயின. அவளுடைய பாதங்களில் தடவியிருந்த மருதாணியின் வண்ணம், ரத்தச் சிவப்பாக மாறியது. தலைக்கு மேலே இருந்த சூரியன், அவளுடைய காதலைப் போலவே தகித்துக் கொண்டிருந்தான்.

ராணியம்மா கொடுத்தனுப்பிய முத்து மாலை அவளுடைய கழுத்தில் கிடந்தது. விரிந்து கிடந்த அவளது தலைமயிரில் சிக்கி, மாலையின் நூல் அறுபடவே, "சம், சம்" என்ற சப்தத்துடன் முத்துக்கள், மணலில் விழ ஆரம்பித்தன. அச்சமயம், ஸஸ்ஸிக்கு, தான் பிறப்பதற்கு முன் தன் தாயாருக்கு ஏற்பட்ட அனுபவம் ஞாபகத்துக்கு வந்தது. பிறக்கப் போகும் தனக்குத் தொட்டில் அலங்கரிப்பதற்காக ராணியம்மா, முத்துமாலை கோர்த்துக் கொண்டிருந்ததும், திடீரென்று நூல் அறுந்து—

கூடவே ஸஸ்ஸியின் வாயிலிருந்து நெருப்பைப் போன்று வார்த்தைகள் வெளி வந்தன: "தலையெழுத்தை அம்மா அப்பவே புரிஞ்சுகிட்டாங்க—"

மணலின் உஷ்ணத்தில் கொதித்துக் கொண்டிருந்த பாதங்களின் அருகே விழுந்திருந்த முத்துக்களைப் பார்த்தாள் ஸஸ்ஸி; பிறகு, ஒட்டகங்களின் அடிச்சுவட்டைத் தேடுவதில் மும்முரமானாள்.

"நீரும் உலர்ந்த மணலும்தான் என்னை ரட்சிக்கணும். ஆழமான நதி, என்னை ரெண்டு கைகளாலேயும் மேலே தூக்கி வைச்சிருந்தது; இப்போ, இந்தப் பாலைவனமும் என் காதலையும் என்னையும் காப்பாத்தித் தரணும்!"

ஸஸ்ஸி, பெரியவர்களிடமும், ஞானிகளிடமும் ஒரு கதை கேட்டிருந்தாள். "கூகனூஸ்" என்ற பட்சி பறக்கும்போது அதனுடைய இறக்கைகளிலிருந்து, நெருப்பு ஜ்வாலைகள் கிளம்புமாம். அது பறக்கப் பறக்க, ஜ்வாலைகள் அதிகமாக, அதிக உயரமாக ஆகிக் கொண்டே போய், கடைசியில் அதன் இறக்கையிலிருந்து வெளிவரும் நெருப்பிலேயே அது கருகிச் சாம்பலாகி விடுமாம்—

தனது உடலின் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் நெருப்புச் சுடர்கள் கிளம்புவதாக ஸஸ்ஸிக்குத் தோன்றியது. அவள் இன்னும் உயர்ந்த ஸ்தாயியில் அழைத்தாள்: "புன்னூ—புன்னூ—புன்னூ!"

அவளுடைய உடலும் அதனிலிருந்து கிளம்பிய தீயில் கருக ஆரம்பித்தது—

அருகே, ஒரு மண்குன்றின் நிழலில், ஆடு மேய்த்தவாறு ஒரு சிறுவன் சென்று கொண்டிருந்தான். அவனுடைய காதுகளில் மனத்தை உருக்கும் இந்தக் கதறல்கள் விழுந்தன. உஷ்ணமான காற்றையும் மீறி, நிழலில் இருந்து ஓடி வந்து பார்த்தான். ஓரங்கள் ஜரிகை வேலைப்பாடு கொண்ட ஒரு "துப்பட்டா" (பெண்களின் மேலாடை) கீழே விழுந்து கிடந்தது.

"ஏ, அல்லா!" துப்பட்டாவை விலக்கிப் பார்த்தான் சிறுவன்; கீழே ஸஸ்ஸி மயக்கமாக விழுந்து கிடந்தாள்.

சிறுவன் ஆட்டின் மேல் வைத்திருந்த பாத்திரத்திலிருந்து தண்ணீரை எடுத்து, ஸஸ்ஸியின் முகத்தில் தெளித்தான். ஸஸ்ஸிக்கு உணர்வு வந்தது: ஆனால் ஒரே க்ஷணத்துக்குத்தான்: தண்ணீரை ஒரு வாய் குடிப்பது போல, ஒரே ஒரு க்ஷணம் "புன்னூ—புன்னூ" என்று அழைத்து விட்டு, உயிரை விட்டாள்.

இடையச் சிறுவன் வெகு நேரம் வரை மௌனமாக அவளது உடலருகில் அமர்ந்திருந்தான். பிறகு சூரிய அஸ்தமன சமயத்தில் அதே மணலில் ஸஸ்ஸியைப் புதைக்க ஏற்பாடு செய்ய ஆரம்பித்தான்.

இடையச் சிறுவன் மனத்தில் முற்றிய வாலிபர்களுக்கு ஏற்படும் வைராக்கிய உணர்ச்சி ஏற்பட்டது. இந்த உயர் குலப் பெண்ணின் மணல் சமாதியருகில், விளக்கைப் போல தான்

எப்போதும் உட்கார்ந்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

மாலை நேரத்து இருட்டு பரவி வரும் சமயம், ஒட்டகத்தில் பயணம் செய்து வந்த பிரயாணி ஒருவன், இச்சிறுவன் பாலைவனத்தின் நடுவே உட்கார்ந்திருப்பதைக் கண்டு, ஒரு கணம் நின்றான்: "இங்கு எங்காவது தண்ணீர் கிடைக்குமா?"

இடையச் சிறுவன் எந்த மண் கோப்பையில் ஸஸ்ஸிக்குக் குடிக்க நீர் கொடுத்தானோ, அதே கோப்பையில் தண்ணீரை அந்தப் பயணிக்கும் கொடுத்தான்: ஒரு வாய் தண்ணீர் குடித்த பின், பயணி, சிறுவனிடம் கேட்டான்: "ஒரு மறைப்போ, நிழலோ இல்லாத இந்தப் பாலைவனத்து நடுவே நீ ஏன் தம்பி உட்கார்ந்துகிட்டு இருக்கிறே?"

சமாதியைச் சுட்டிக் காட்டியவாறே சிறுவன் சொன்னான்: "எனக்கு இந்த உலக வாழ்க்கையே அலுத்துடுத்து; நான் இன்னிக்கு ஒரு உசந்த ஜாதிப் பெண் செத்துப் போறதை என் கண் முன்னாலே பார்த்தேன்!"

பயணியின் கையிலிருந்த கோப்பை நடுங்கியது: "யாரப்பா அந்தப் பெண்?"

"யாரோ தெரியாது; புன்னு, புன்னூ-ன்னு சொல்லிக்கிட்டே செத்துப் போயிருச்சு!"

ஒட்டகத்தில் வந்தவன் தனது நடுங்கும் கையை சிறுவனின் தோளின் மீது வைத்தான்: "ஒரு உதவி செய் தம்பீ! இந்த சமாதியைத் திறந்து, பெரிசாக்குவியா?"

சிறுவன் வியப்புடன் பயணியைப் பார்த்தவாறே நின்றான். அந்தப் பயணிக்கோ காத்திருக்கப் பொறுமை யில்லை. அவன் அந்த சமாதியின் மீதிருந்த மணலைத் தானே விலக்க ஆரம்பித்தான்.

மணலை விலக்கிய பயணி, முதலில் ஸஸ்ஸியின் உடலுக்கு மரியாதை செய்தான்; பிறகு தனது ஆடைகளை அவிழ்த்து, அதன் காலடியில் வைத்தான்: "ஸஸ்ஸி, என் கூடப் பிறந்தவங்க என்னை ஏமாத்திட்டாங்க; எனக்குப் பிரக்ஞை வந்த உடனே, என் வாக்குறுதியெக் காப்பாத்துறதுக்காக ஓடி வந்தேன்!"

பிறகு எந்தக் கத்தியின் உதவியால் தனது

சகோதரர்களுடன் சண்டை போட்டு திரும்பி வந்தானோ, அந்தக் கத்தியைத் தனது மார்பில் குத்திக் கொண்டு, அந்த மணல் குழியில் விழுந்தான்.

இடைச் சிறுவன் வியப்பினால் வாயடைத்து நின்றான். மணல் சமாதியை மறுபடி மூடிய அவன், சமாதியின் அருகில் இருக்கும் விளக்கைப் போல நடுங்க ஆரம்பித்தான்.

# ஸோஹ்னி-மஹீவால்

**கர்த்தார் சிங் துக்கல்**

இந்தியப் பிரிவினைக்கு முந்திய காலத்தில், பஞ்சாப் ஐந்து நதிகள் கொண்ட பிரதேசமாக இருந்தது: ஜேலம், சினாப், ராவி, பியாஸ், ஸத்லுஜ் என்ற ஐந்து நதிகளில் மூன்று பாகிஸ்தான் நாட்டில் தற்போது உள்ளன. பியாஸும், ஸத்லுஜும் மட்டுமே நமது நாட்டில் உள்ளன. மூன்று நதிகள் கொண்ட தனது பிரதேசத்தைப் பாகிஸ்தானியரும் பஞ்சாப் என்றுதான் கூறுகின்றனர்; இரண்டு நதிகள் கொண்ட நமது பிரதேசத்தை நாமும் அதே பெயரால்தான் அழைக்கிறோம். இந்தச் செயற்கையான எல்லைக் கோடு, கரும் பலகையில் எழுதிய எண்களைப் போன்று ஒரு காலத்தில் அழிந்து போய், இணைந்த பஞ்சாப், இந்த இருளிலிருந்து, நிமிர்ந்த தலையுடனும் பிரகாசத்துடனும் கூடியதாக வெளிவரக் கூடும் என்ற நம்பிக்கை இருக்கிறது போலும்!

பஞ்சாபின் நதிகளில் சினாப்பின் பெயர்தான் மற்ற நதிகளின் பெயர்களை விட அதிகமாக வழங்குகிறது எங்கும். இதைக் குறிப்பாக பஞ்சாப் மக்கள் இலக்கியத்தில் காணலாம். நாட்டுப் பாடல்களிலும், கதைகளிலும் சினாப் நதியை, ஜனா என்ற பெயரில் அழைக்கின்றனர். இந்த நதியின் தண்ணீரின் அதிசயமான குணம் இதுதான்: அது மனிதனை வாழவும் விடுவதில்லை, ஆண்டவனுக்குப் பிரியமானவனாக ஆகவும் விடுவதில்லை. இதே ஜனா நதிக்கரையில்தான், தாமோதர் கவியின் கண் எதிரே ஹீர்-ரான்ஜாவின் சோக நாடகம் நிகழ்ந்தது. இதே இடத்தில் தான் மிர்ஜா-ஸாஹிபான் இருவரும் காதல் வயப்பட்டு, மேலே மேலே பறந்தனர்; பிறகு தலைகுப்புறக் கீழே விழுந்தனர். இதே நதிக் கரையில் தான்

ஸோஹ்னி-மஹீவாலின் கதையும் குருதியினால் எழுதப்பட்டுள்ளது.

உலகத்து நாடுகள் அனைத்தும், பாரதத்தை ஒரு தங்கச் சுரங்கமாகக் கருதிய காலத்தைச் சேர்ந்தது இந்த ஸோஹ்னி-மஹீவாலின் காதல் கதை. பல்வேறு நாடுகளிலிருந்தும் வியாபாரிகள் பொருள்களை மூட்டை கட்டி இங்கு கொணர்ந்து விற்றனர். பின்னர் வகை வகையான பாரதப் பொருள்களை ஏராளமாக எடுத்துக் கொண்டு திரும்பிச் சென்றனர். புகாரா என்ற பிரதேசத்தைச் சேர்ந்த, அரபுக் குதிரைகளை வியாபாரம் செய்பவனைப் பற்றிய விவரங்களைக் கூறுவதுடன் இக்கதை தொடங்குகிறது. அந்த வியாபாரியுடன், இஜ்ஜத் பேக் என்ற பெயர் கொண்ட பணக்கார இளைஞனும் இருந்தான். அந்த இளைஞனுக்கு குதிரைகளின் மீது ஒரே மோகம்.

குதிரையின் மீது சவாரி செய்து கொண்டே அந்த இளைஞன் பல்வேறு வகையான வித்தைகளைச் செய்து காட்டி, வாடிக்கையாளர்களை அதிசயப்பட வைப்பான். சில சமயம் சிவப்புக் குதிரையை அன்ன நடை போட வைப்பது, சீனக் குதிரையின் வாயில் கடிவாளம் மாட்டுதல், கருப்புக் குதிரை மீது சேணத்தை வைத்தல், இவற்றையெல்லாம், சவாரி செய்து கொண்டே செய்து காட்டுவான். அந்த வியாபாரியின் குதிரைகள், இரு மடங்கு, நான்கு மடங்கு விலைகளில் விற்பனையாயின. குதிரை வியாபாரம் செய்தவாறே அவர்கள் குஜராத் நகரத்துக்கு வந்து சேர்ந்தனர். லாஹூர், தில்லி, மற்றும் அனேக நகரங்களுக்குச் சென்று வந்த அவர்களிடம், அவர்கள் அமர்ந்து சொந்த நாட்டுக்குத் திரும்பிச் செல்வதற்கு வேண்டிய குதிரைகளே மீதி இருந்தன. ஏராளமான அளவில் கிராம்பு, ஏலக்காய், பிஸ்தா, உலர்ந்த திராட்சை ஆகியவற்றையும் விற்பனை செய்திருந்தனர்.

அக்காலத்தில், குஜராத் பிரதேசம், மண்பாண்டங்கள் செய்யும் தொழிலில் மிகப் பிரசித்தி பெற்றிருந்தது. குறிப்பாக, துலா என்ற பெயர் கொண்ட குயவன் இவ்விஷயத்தில் பெயர் பெற்றவனாயிருந்தான். உள் நாட்டிலும், பல்வேறு வெளி நாடுகளிலும் அவனது

மண்பானைகள் விற்பனையாயின. அவன் செய்யும் தண்ணீர் கூஜா (ஸுராஹி)வின் கழுத்தின் ஊடே தண்ணீர் தளும்புவது வெளியே புலப்படும். அவன் செய்த கிண்ணங்கள், பூ வைக்கும் பாண்டங்கள், தட்டுகள், ஹுக்காவில் உபயோகப்படும் சிறிய பாத்திரம், ஆகியவற்றைக் காண்பவர், பிரமித்து நிற்பது வழக்கம். அவன் மண் எடுத்து வரும் இடம், மண்ணைப் பிசையும் முறை, சக்கரங்களில் கொடுத்து உருவம் கொடுக்கும் விதம் ஆகிய விவரங்களைப் பிறர் எவரும் அறியாத வண்ணம் பாதுகாத்து வந்தான். அவனுடைய பாண்டங்களில் காணப்பட்ட சித்திர வேலைகள் ஈடு சொல்ல முடியாதவைகளாக இருந்தன. பல தலைமுறைகளாக அவனுடைய குடும்பத்தினர் இந்தத் தொழிலையே செய்து வந்தனர். மற்ற வேலைகளைச் செய்வதெல்லாம் குயவன் துலாதான்; ஆனால் மண் பாண்டங்களில் சித்திர வேலைகள் செய்வது மட்டும் அவனது மகள் ஸோஹ்னிதான், என்று மக்கள் கூறினர். அவளுடைய விரல்கள் பிஞ்சுக் காய்களைப் போன்று இருந்தன. அவளுடைய சௌந்தர்யத்தின் புகழ், பல நகரங்களின் மூலை முடுக்குகளில் பரவி இருந்தது. நன்கு படித்தவளாகவும் இருந்தாள் அவள்.

ஒரு நாள் இஜ்ஜத்பேகும் நகரத்தைச் சுற்றி வந்து, துலாவின் வீட்டு முற்றத்திற்கும் வந்து சேர்ந்தான். வெறும் முற்றமாகவா அது இருந்தது? முழுமையாகத் தயார் செய்யப்பட்ட பணிமனையாக அது காட்சியளித்தது. நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் வேலை செய்து கொண்டிருந்தனர். பல்வேறு சிறிய, பெரிய அறைகள் முழுதும் பாத்திரங்களால் நிரம்பி வழிந்தன. துலாவின் கை வண்ணத்தைக் கண்ட இஜ்ஜத்பேக் வியந்து நின்றான். பாண்டங்களின் தரமும், சித்திர வேலைப்பாட்டின் அழகும் ஒன்றை ஒன்று விஞ்சி நின்றது. வெளியே வெயில் தகித்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில், உள்ளே வண்ணங்கள் அவனுக்குக் குளிர்ச்சியை ஏற்படுத்தின.

துலா, தானே அந்தப் பணக்கார இளைஞனுக்குப் பாத்திரங்களைக் காண்பித்து வந்தான்: ஒரு அறையிலிருந்து

மற்றொன்றுக்கு, ஒரு கட்டிலிருந்து வேறொன்றுக்கு. நாற்புறமும் சுற்றிய பிறகு, இதுவரை காட்டியவற்றை விட உயர்வான, அதிக விலையுள்ள, பணக்காரர்கள் மட்டுமே வாங்கக் கூடிய பாத்திரங்கள் வைத்துள்ள, உட்புறம் அமைந்திருந்த பெரிய அறைக்கு இளைஞனை அழைத்து வந்தான் துலா.

அந்தப் பெரிய அறையில் இஜ்ஜத் பேக் அடியெடுத்து வைத்த கணத்திலேயே, அவன் எதிரேயிருந்த திரையின் பின்னால், சிறியதொரு ஸ்டூலின் மீது அமர்ந்து, கோப்பை ஒன்றில் சித்திர வேலை செய்து கொண்டிருந்த துலாவின் மகள் ஸோஹ்றனியின் உருவத்தைக் கண்டான். அந்தக் கணமே, அவன் கையிலிருந்த பூவைக்கும் மண் பாத்திரம் நழுவித் தரையில் விழுந்தது. பாத்திரம் உடைந்த சத்தத்தினால் திடுக்குற்ற ஸோஹ்றனி, அதே நிலையில், தலையில் முக்காடு இல்லாதவளாக, கையில் வண்ணத் தூரிகையுடன் உள்ளே வந்தாள். வந்தவள் எதிரே உயரமாக, ஆஜானுபாகுவாக, முழுவதும் மலர்ந்த முகத்துடன், கழுத்து வரை அடர்ந்து பளபளத்த கேசத்துடன் கூடிய இஜ்ஜத்பேக் நின்றிருந்தான்; ஸோஹ்றனியும் அவ்வாறே, வானுலகிலிருந்து இறங்கி வந்த அப்சர ஸ்திரீ போல, பயத்தினால் சிவந்த முகத்துடன், அவசரமாக வந்ததனால் நெற்றியிலும் முகத்திலும் விழுந்திருந்த மயிர்களுடன் கதவருகில், ஓவியம் போல நின்றிருந்தாள்.

ஓரிரண்டு நிமிடங்கள் பொறுத்த பிறகு, துலா, தனது தொண்டையை இருமுவது மூலம் சரி செய்து கொண்டு, உடைந்த பாத்திரத் துண்டுகளைப் பொறுக்க ஆரம்பித்தான்.

அன்றிலிருந்து தினமும் இஜ்ஜத்பேக் துலாவின் வீட்டுக்கு வர ஆரம்பித்தான். மண் பாண்டங்கள் பலவற்றைத் தேர்ந்தெடுத்து வாங்கிய வண்ணம் இருந்தான். துலா பாத்திரங்கள் அடுக்கி வைத்திருந்த பல கொட்டகைகள் காலியாயின.

ஒரு நாள் இஜ்ஜத்பேக் வந்திருந்தபோது துலா, உறவினர் ஒருவர் வீட்டில் துக்கத்திற்காகச் சென்றிருந்தான். தந்தை இல்லாததால், இவ்வளவு நல்ல வாடிக்கையாளனுக்கு,

ஸோஹ்னி தானே பாண்டங்களைக் காட்ட ஆரம்பித்தாள். பகல் முழுதும் இஜ்ஜத் பேக் பாத்திரம் வாங்கியவாறு இருந்தான். பகல் முடிந்து மாலையும் வந்தது. பிறகு பாத்திரங்களை விற்று வந்த ஸோஹ்னி, எப்படி நடந்தது என்றே தெரியாமல், தன்னையே அவனிடம் இழந்து விட்டாள். பரதேசி (வெளிநாட்டினன்)யின் கைபட்ட உடனே பாத்திரங்களில் மேலும் மேலும் வண்ணங்கள் அதிகரித்ததாக அவளுக்குத் தோன்றியது. அதற்கு முன் அவ்வண்ணங்கள் அவளது கண்களில் படவில்லை. காதலனது கை அவள் மீது ஒரு முறை பட்டவுடன், அவள் இருந்த வீட்டின் அறை முழுதும் குளிர்ச்சி பரவியது போன்று உணர்ந்தாள். வீட்டுக்கு வெளியே கடுமையான வெய்யில்; உள்ளே ஒரே குளுமை. அவளுடைய காதலன் அவளைத் தொட்ட அந்த இனிமையில் அந்த ஹீர்க் காதலியான ஸோஹ்னியின் அவயங்கள் அத்தனையும் புல்லென்று மலர்ந்தன. சுற்றுமுற்றும் சங்கீதம் இசைக்கத் தொடங்கியது.

இஜ்ஜத்பேக்கின் தோழர்கள் அலுப்படைய ஆரம்பித்தனர். அவன், சம்பாதித்ததை எல்லாம் மண்பாண்டங்கள் வாங்கியதில் வீணாக்கியிருந்தான். பாத்திரங்கள் ஏராளமாகச் சேர்ந்து விட்டிருந்தன. ஒரு சில பாத்திரங்களானால் எந்த ஒரு மனிதனும் எடுத்துச் செல்ல முடியும்; ஆனால் நூற்றுக்கணக்கான பாண்டங்களை தொலைவில் உள்ள புகாராவுக்கு யார் எடுத்துச் செல்வது? தவிர, இந்த நகரத்தை விட்டுக் கிளம்புவது பற்றிய பேச்சையே இஜ்ஜத்பேக் எடுக்கவில்லை. கூடாரத்தில் சேர்த்து வைத்திருந்த பாண்டங்களின் மீது தூசியும், மண்ணும் பட்டதுடன், அவைகளை ஒன்றின் மீது ஒன்றை வைத்ததன் காரணமாக, அவற்றுள் சில உடையவும் ஆரம்பித்தன. இஜ்ஜத்பேக்கின் போக்கைப் புரிந்து கொள்ள, அவனது தோழர்களால் இயலவில்லை.

கடைசியில் வியாபாரிகளின் குழு சோர்வடைந்து அந்த நகரத்தை விட்டுக் கிளம்பியது. இஜ்ஜத்பேக் அதனுடன் திரும்பிச் செல்லவில்லை.

இப்போதெல்லாம், துலாவின் தொழிற்சாலையில் சுற்றித்

திரிவதுதான், இஜ்ஜத்பேக்கின் ஒரே வேலையாகி விட்டது. சில சமயம் சக்கரங்களின் அருகில் நிற்பது, பிறகு பாத்திரங்களின் விலைகளை நிர்ணயிப்பது, சில சமயம் குயவனின் உலையருகில் நிற்பது— இப்படிப் பொழுதைக் கழித்த பிறகு, ஒரே ஒருமுறை ஸோஹ்னியின் தரிசனம் கிடைத்துவிட்டால், அன்றையப் பொழுது வெற்றிகரமாகப் போய்விட்டதாக அவன் திருப்திப்படுவான்.

ஸோஹ்னியின் நிலையும் அதே மாதிரிதான் இருந்தது. பரதேசியின் ஸ்பர்ஸம் பட்டது முதல், அவள் தனக்கு இதுவரை சொந்தம் என்று நினைத்துக் கொண்டிருந்ததை எல்லாம் அன்னியமாகக் கருத ஆரம்பித்தாள். சாப்பாடு இறங்கவில்லை. இரவும் பகலும் உட்கார்ந்து, தனது காதலனுக்குப் பிடித்தமான நீல நிறத்தைப் பாத்திரங்களுக்குப் பூசிக் கொண்டும், அவனுக்குப் பிடித்த சித்திரத்தையே அவைகளில் வரைந்து கொண்டும் இருந்தாள்.

துலா எல்லாவற்றையும் அறிந்து, புரிந்து கொண்டுதான் இருந்தான். ஆனால் வாயைத் திறந்து ஒன்றும் சொல்லவில்லை. மனத்துள்ளேயே மருகிக் கொண்டிருந்தான். ஸோஹ்னிக்குத் திருமணம் செய்து வைத்து விட வேண்டும், என்று அவன் மிகவும் முயற்சி செய்தான். ஆனால் அவன் மகள் அவனுக்கு எதிலும் பிடி கொடுக்கவில்லை. அவனுடைய தயக்கமெல்லாம், தனது ஒரே மகளை, பரதேசிக்கு எப்படித் திருமணம் செய்து கொடுப்பது என்பதுதான். வியாபாரிகளின் குழு, கிளம்பிச் சென்று பலவாரங்கள் கழிந்துவிட்டன. இப்போது இஜ்ஜத்பேக்கிடம் இருந்ததெல்லாம் அழுக்கேறிய, கிழிந்த ஆடைகள், பட்டினி, சில்லறைச் செலவுகளுக்குக் கூடத் திண்டாட்டம், ஆகியவை தாம்.

குதிரைகளைக் கவனித்துக் கொள்வது தவிர, வேறு ஒரு வேலையும் அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. அந்த நகரத்துப் பாஷையும் அவனுக்குத் தெரியாது. மிகவும் யோசித்து, கால் நடையை மேய்க்கும் வேலையை மஹீவால் ஏற்றுக் கொண்டான். அவன் நகர மக்களின் பசு, எருமை, குதிரை ஆகியவற்றை ஒன்று கூட்டி, ஊருக்கு வெளியே

அவற்றை மேய்க்க அழைத்துச் சென்றான். நாள் முழுதும் புல்வெளிகளில் கால்நடைகளை மேய்த்துக் கொண்டே "அல்கோஜா" (ஷஹனாய் போன்றதொரு இசைக் கருவி) வாசித்த வண்ணம் இருந்தான். அவன் கையில் எப்போதும் அந்த இசைக் கருவி இருந்தது. இப்போதெல்லாம், அந்தப் புல்வெளிகளில்தான் அவன் ஸோஹ்னியைச் சந்தித்தான். துலாவின் பாத்திரங்களை வாங்குவதற்கு வேண்டிய சக்தி இப்போது அவனிடம் இல்லாது போயிற்று.

இவ்வாறாக, புகாராவைச் சேர்ந்த பணக்கார இளைஞன், பஞ்சாபின் ஸோஹ்னிக்காக இடையனாக ஆகிவிட்டான். ஏழு திரைகளுக்குப் பின்னால் வாழ்ந்து வந்த, கைத் தொழிலில் தேர்ச்சி பெற்ற பெண்ணான ஸோஹ்னியும் தற்சமயம் காடுகளிலும், புல்வெளிகளிலும் அலைந்து திரிந்தாள். மஹீவாலின் மீது கொண்ட பிரேமையினால், தனது வீட்டு வேலைகள் அவளுக்கு விஷமெனக் கசந்தன. மனமொத்த தோழிகளுடைய பாதுகாப்புடன் அவள், காலையிலும் மாலையிலும் நகரைவிட்டு வெளியே சென்று வந்தாள். அவளது தோழிகள், ஆடியும் பாடியும் மஹீவாலைச் சந்தோஷப்படுத்தி வந்தனர்.

காதலையும் நறுமணத்தையும் முயன்றாலும் மறைத்து வைக்க இயலாது. சில தினங்களிலேயே ஸோஹ்னி-மஹீவாலின் காதல் எங்கும் பரவிவிட்டது. அவதூறான பேச்சுக்களைத் தவிர்ப்பதற்காக, அச்சமயம் கிடைத்த ஒரு பையனுக்கு ஸோஹ்னியை மணம் செய்து கொடுத்துவிட்டு, தான் கவலையற்று இருந்தான் துலா.

ஸோஹ்னி திரும்பத் திரும்ப முறையிட்டாள்: "அப்பா, மஹீவாலுடன் என்னோட தொடர்பு ஜன்ம-ஜன்மாந்திரமா இருந்து வந்துகிட்டிருக்கு." ஆனால் வாழ்நாள் முழுதும் மண் பாத்திரங்களுடனேயே பழகிவிட்ட குயவன் துலாவிற்கு அதெல்லாம் புரியவில்லை. தாரை தாரையாகக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த ஸோஹ்னியை "டோலி"யில் ஏற்றிப் புகுந்த வீட்டிற்கு அனுப்பினர்.

ஜனா நதியின் ஒரு கரையில் ஸோஹ்னியின் மாமியார் வீட்டுக்காரர்களின் கிராமம் இருந்தது. மறுபுறம் அவளது

தந்தையின் கிராமத்தில், மஹீவால், அவளைப் பிரிந்த துக்கத்தில் வெந்து கொண்டிருந்தான். தனிமையில், பைத்தியக்காரனைப் போன்று சுற்றிக் கொண்டு, "ஸோஹ்னீ, ஸோஹ்னீ" என்று கதறி, ரத்தக் கண்ணீர் வடித்த வண்ணம் இருந்தான். சாப்பாட்டு நினைவோ, அக்கறையோ அவனுக்கு இல்லை. நிறைந்த வசதிகளோடு வளர்ந்த பணக்கார வீட்டுப் பையன் உலர்ந்த வைக்கோல் போல இளைத்துப் போனான். பஞ்சாபி மொழியை மிக நன்றாகப் பேச ஆரம்பித்தான். அதே மொழியில் தனது மதுரமான குரலில் பாடவும் ஆரம்பித்தான். எல்லாவற்றிலும் ஸோஹ்னியைப் பற்றிய எண்ணங்களும் வார்த்தைகளும்தான். காடும், புல்வெளியும் "ஸோஹ்னீ," "ஸோஹ்னீ" என்ற வார்த்தையை எதிரொலிக்க ஆரம்பித்தன.

ஸோஹ்னியின் நிலையும் இதுதான். மஹீவாலையே மனத்தில் எண்ணி வந்தவளாக, அவள் தனது கணவனுக்கு எந்த வித உரிமையும் தர மறுத்துவிட்டாள். இரவும் இஜ்ஜத் பேக்கின் ஸமரணைதான், வேறு எதுவும் இல்லை.

ஒரு நாள், பதட்ட நிலையில் சுற்றிக் கொண்டிருந்த மஹீவாலின் காதுகளில், ஸோஹ்னி அவனை அழைக்கும் குரல் கேட்டது. கவனமாகக் கேட்க முயற்சி செய்தான். ஆனால், அவன் உடலின் உள்ளிருந்தல்லவா அழைப்பு வருகிறது! மஹீவால் மலர்ந்த முகத்துடன் சிரிக்க ஆரம்பித்தான். இது ஒரு மாயக் குரலாக இருந்தது. பைத்தியக்காரனைப் போல, மஹீவால் மேலும் மேலும் உரத்த தொனியில் சிரிக்க ஆரம்பித்தான். அப்படியும் அந்தக் குரல் அவனுக்குக் கேட்டுக் கொண்டிருந்தது. யாரோ அவனை அழைத்துக் கொண்டிருந்தனர்: "மஹீவால், மஹீவால்!" அவன் ஓடிப்போய் ஒரு மண் குன்றின் உச்சிக்குச் சென்று, முன்னும் பின்னும் கவனமாகப் பார்த்தான். அங்கே யாரும் இல்லை. ஆனால் அழைப்பு என்னவோ வந்து கொண்டுதான் இருந்தது.

ஒருவேளை, எதிரே இருந்த மரக் கூட்டத்தின் நடுவே யாரோ இருக்கிறார்கள். "மஹீவால், மஹீவால்!" என்ற சப்தம் வந்து கொண்டிருந்தது. பிறகு அவனது ஒவ்வொரு மூச்சிலும்

கலந்து ஊடுருவி, வெளிவரும் போதெல்லாம், "ஸோஹ்னி, மஹீவால்; ஸோஹ்னி, மஹீவால்" என்று 'கூறிய வண்ணம் வந்ததாகத் தோன்றியது. அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. யாரோ அவனுடன் தமாஷ் செய்து கொண்டிருக்கின்றனர்! அவனை அழைப்பது, பிறகு ஒளிந்து கொள்வது. ஒரு சமயம் குரல் வெளியேயிருந்து வருவது போலிருந்தது; பிறகு தன்னுள்ளிருந்தே— "ஸோஹ்னி–மஹீவால்; ஸோஹ்னி–மஹிவால்!"

திடீரென்று அவனுக்குத் தோன்றியது. அந்தக் குரல், தொலைவில் இருந்த குழியிலிருந்து வருவதாக. ஓடிப் போய் அதற்குள் இறங்கிப் பார்த்தான். அங்கே சென்றவுடன் மேலிருந்து கேட்டது. அதே வேகத்தில் மறுபடி ஏறி, குழிக்கு மேற்பக்கம் வந்தான், "ஸோஹ்னி–மஹீவால்!" "ஸோஹ்னி–மஹீவால்!" அவனுக்கு மூச்சு இரைக்க ஆரம்பித்தது. பட்டினியுடன், காலிலே செருப்பு இல்லாமல், களைத்துப் போய் மேலே வந்தால், குரல் என்னவோ, குழிக்குள்ளிருந்துதான் வருவதாகத் தோன்றுகிறது. மறுபடி குழிக்குள் வந்தால், குரல், மேலிருந்து அழைக்கிறது. அழைத்தவாறே அவனைவிட்டு விலகிச் செல்கிறது, "ஸோஹ்னி–மஹீவால்; மஹீவால்–ஸோஹ்னி!"

களைப்பு மேலிட, மறுபடி அவன் மேலே வந்தான், பைத்தியக்காரனைப் போல. வந்தவுடன் நாற்புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். குரல் வெகு தூரம் சென்று விட்டதாகத் தோன்றியது; ஆனால் மறுகணமே வெகு சமீபத்தில் கேட்டது. ஆத்திரத்தில் மஹீவால் தனது ஆடையைக் கிழித்துக் கொள்ள ஆரம்பித்தான். அந்த இடத்தை விட்டு ஓட ஆரம்பித்து, ஜனா நதிக் கரைக்கு வந்து சேர்ந்தான். ஒருவேளை, அந்த அழைப்பு, நதியின் அலைகளிலிருந்து வருவதாக இருக்கலாம். ஆம்! ஜனா நீரிலிருந்துதான் குரல் கேட்கிறது. பிறகென்ன! மஹீவால் நதியில் குதித்துவிட்டான்.

முதல் முயற்சிக்குப் பிறகு, பொங்கி வந்த அலைகளுடன் மஹீவால் போரிட ஆரம்பித்தான். அவன் முன்பு இருந்த கரைப் பகுதி, வெகுவாகப் பின்னே சென்று விட்டிருந்தது. அடுத்த கரை, கண்ணுக்குப் புலப்படவேயில்லை. கைகளை

மாற்றி மாற்றிப் போட்டு, கால்களால் ஜனாவின் வெறி கொண்ட அலைகளை உதைத்தவாறே, மஹீவால் சென்று கொண்டிருந்தான். மேலே, மேலே சென்று கொண்டிருந்தான். பிறகு அவனது காதுகளில் ஸோஹ்னியின் குரல் கேட்க ஆரம்பித்தது; அவளது குரலேதான்! "மஹீவால், மஹீவால்!" நடுங்கும் எதிரொலி போன்ற குரல். மஹீவால், வேகமாக நீந்த ஆரம்பித்தான். கரையில் நின்று அழுது கொண்டிருப்பது ஸோஹ்னியேதான், என்று அவனுக்கு விளங்கியது.

அதேசமயம் படகோட்டியின் கண்களில் மஹீவால் தென்படவே, அவன் மஹீவாலைத் தன் படகில் ஏற்றிக் கொண்டான்.

உண்மையிலேயே, ஸோஹ்னி எதிரே நின்று கொண்டிருந்தாள். தாரை தாரையாகக் கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தாள். மறுபடியும் மறுபடியும் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான் மஹீவால்; சொப்பனமல்ல. அது ஸோஹ்னியேதான். இருவரும் முழு ஆர்வத்துடன், ஒருவரை ஒருவர் நோக்கி ஓடினர், புஜங்களை நீட்டியவாறே. மாலையின் நிழல்கள், குளிர்ந்த இருட்டாக மாறிவிட்டன.

ஸோஹ்னியும் மஹீவாலும் ஒரு ஏற்பாடு செய்து கொண்டனர்: அவன் கால்நடைகளை அவற்றின் வீடுகளில் விட்டுவிட்டு, ஸோஹ்னியைச் சந்திக்க வருவான். ஜனா நதிக் கரைப் புல் வெளியில் அவர்களது சந்திப்பு நடக்கும்.

மஹீவால் ஒரு தோல் பை வாங்கிக் கொண்டான். இரவானதும், அதை நதியில் தள்ளி நீந்தியவாறே, ஸோஹ்னியின் கிராமத்தின் கரையை அடைவான். தூண்டில் போட்டு, மீன் பிடிக்க முயற்சி செய்வான். அல்கோஜா வாசித்தவாறே, ஸோஹ்னிக்காகக் காத்திருப்பான்.

"ஸோஹ்னீ! உனக்காகக் காத்திருக்கும்போது வாசிக்கிற அல்கோஜாவின் இசையிலே மயங்கி, ஏகப்பட்ட மீனுங்க வந்து விழுது!"

"நீ ஒரே ஒரு மீனைப் பிடிச்சாப் போதும்!" சிரித்தவாறே பதில் சொல்வாள் ஸோஹ்னி.

தினமும் ஒரு மீனைப் பிடித்தபின் ஸோஹ்னியின் வருகைக்காகக் காத்திருப்பான் மஹீவால். அவள் வந்தவுடன்

மீனை வறுத்து இருவரும் உண்பார்கள்.

மஹீவாலுடன் அமர்ந்து மீன் சாப்பிடுவது, ஸோஹ்னிக்கு மிகவும் பிடித்திருந்தது. மீன் தின்றவாறே பேசுவாள், பேசிக் கொண்டே இருப்பாள். இரவு முழுவதும் பேசிக் கொண்டே இருப்பாள். பொழுது புலரும் சமயம், மெல்ல மெல்ல நடந்து சென்று தன் வீட்டில், தனது கட்டிலில் படுத்துக் கொள்வாள்.

மழைக் காலம். ஒரு நாள் ஜனா நதியில் பிரளய காலத்தில் வருவதைப் போல வெள்ளம் வந்தது. நதியின் மேல் மட்டத்தில் நல்ல மழை பெய்திருக்க வேண்டும். தனது பழைய கரைகளை எல்லாம் உடைத்துக் கொண்டு, நதி எங்கெல்லாமோ சென்று விட்டிருந்தது. பயிர்களை மூழ்கடித்திருந்தது. குளங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டது. ஸோஹ்னியின் கரைக்கு வந்து சேர்நத மஹீவாலுக்கு ஒரு பிரச்னை: இன்று எப்படி மீன் பிடிப்பது? வெகு நேரம் அவன் தேடியும், அவனுக்கு மீன் கிடைக்கவில்லை. நதியின் நீர் கலங்கி, அழுக்காக இருந்தது. நதி தன்னுடன் புதர்கள், முள், குப்பை ஆகியவற்றைத் தான் எடுத்து வந்திருந்தது. மீன் எதுவுமே, எங்குமே இல்லை. தவிர, ஜனா பல மைல் தூரம் கரைகளை உடைத்துப் போட்டிருந்தது. தூண்டிலைப் எப்படிப் போடுவது? வலையை எங்கே போடுவது?

ஸோஹ்னி வரும் சமயம் நெருங்கிவிட்டது. தனது காதலியை அவன் வெறும் கையுடன் எப்படி உபசரிக்க முடியும்? திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அவனது முகமும் மலர்ந்தது.

ஆனால், அவன் நினைத்தபடி அன்று அவனால் செய்ய இயலவில்லை. ஒரு வேளை அவ்வாறு செய்வதற்கு வேண்டிய சாதனங்கள் அவனிடம் இல்லையோ என்னவோ? குறிப்பிட்ட நேரத்திற்கு ஸோஹ்னி வந்து விட்டாள். திரும்பத் திரும்ப, மஹீவாலிடம் வேடிக்கையாகக் கூறினாள்: "இப்பெல்லாம், மாமியார் வீட்டிலே ராத்திரி சாப்பாடு சாப்பிடறதையே நிறுத்திட்டேன். மஹீவாலோடெ சேர்ந்து சாப்பிடற பாக்கியம் இருக்கிற எனக்கு வேறு ஒரு இடத்துச் சாப்பாடு, ஒரு கவளம் கூட எப்படி இறங்கும்?" மஹீவாலுக்கு

மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. பூமி இடம் கொடுத்தால், அதில் புதைந்து போய்விடலாமே, என்று கூடத் தோன்றியது.

மறுநாளும் அதே மாதிரித்தான் மழையும் புயலும் இருந்தன. அதே போலத்தான் தொடர்ந்த மழை; நதியில் கொந்தளிப்பும் முன் போலவே இருந்தது. மஹீவால் பலமுறை பிரயத்னம் செய்தும் அவனுக்கு ஒரு மீன் கூடக் கிடைக்கவில்லை. ஆனால் அன்றிரவு ஸோஹ்னி வரும்போது அவனுக்குத் தலைகுனிவு ஏற்படாது. அவளைச் சரியானபடி உபசரிப்பதற்குத் தேவையான ஏற்பாட்டை அவன் செய்து வைத்திருந்தான்.

சரியான நேரத்துக்கு ஸோஹ்னி வந்து சேர்ந்தாள், நாற்புறமும் புன்னகையைச் சிதற விட்டுக் கொண்டே ஒவ்வொரு நாளும் புதிய வண்ணம், புதிய உருவம், புதிய ருசி கொண்டவளாக அவள் விளங்கினாள். காதல் பெண்ணானவள் ஒரு காற்றாடியைப் போன்றவள்: மேலே மேலே பறந்து, வானத்தின் உச்சியையே தொட விரும்புவது போல.

சிறிது நேரத்துக்குப் பிறகு, மீனின் துண்டுகளை கம்பியில் குத்தி வறுக்க ஆரம்பித்தாள்:

"இது என்ன இன்னிக்கு இந்த மீன் வறுபடவே மாட்டேங்கறதே!"

"அப்படியா"

"ரொம்ப நேரமா அப்படியே இருக்கே!"

"அச்சா!"

ஹுக்கா பிடித்துக் கொண்டிருந்த மஹீவால் தனது நினைவுகளில் மூழ்கியிருந்தான்.

மீன் சாப்பிட அவர்கள் அமர்ந்தவுடன் அவளுக்கு நிச்சயமாகிவிட்டது, ஏதோ விசேஷம் இருக்கிறது, என்று. அன்று மீனின் ருசியே வேறு விதமாக இருந்தது. திடீரென்று அவனது 'லுங்கி'யின் (வேஷ்டி) மீது அவளது பார்வை சென்றபோது, அவளுக்கு மூச்சடைத்தாற்போல் ஆகி விட்டது— அவனது வேஷ்டியின் தலைப்பில் ரத்தக் கறையைக் கண்டவுடன்.

அவனுடைய லுங்கியின் தலைப்பைக் கையில்

எடுத்தவாறே அவள் கேட்டாள்: "இதில் ரத்தம் எப்படி வந்தது, மஹீவால்?"

மஹீவால் அவளது தோள்களில் சாய்ந்தான்.

தனது காதலிக்கு உணவிடுவதற்காக, மஹீவால் தனது உடலின் ஒரு பகுதியைத் துண்டாக்கி, அன்றிரவு எடுத்து வைத்திருந்தான். அன்றும் அவனுக்கு மீன் கிடைக்கவில்லை என்பதற்காக, ஸோஹ்னியைப் பசிதாகத்துடன் இன்றிரவும் திருப்பி அனுப்ப முடியுமா என்ன? இத்தனை நாளாக இரவுச் சாப்பாட்டை வேறு எங்கும் சாப்பிட விரும்பாத ஸோஹ்னியையா அப்படித் திருப்பி அனுப்புவது?

காதல் தத்துவத்தின் சிகரத்தையே தொட்டுவிட்டான் மஹீவால். அவனது உதடுகள், கன்னங்கள், கண் இமைகள், அவனது தலை, எல்லா இடங்களிலும் மாறி மாறி முத்தமிட்டவாறே அவனைப் பிரக்ஞையடையச் செய்தாள் அவள். அவர்களது உதடுகள் அடிக்கடி இணைந்தே இருந்தன. ஒருவர் மற்றவரது அதர ரசத்தைப் பருகியவாறே இருந்தனர். மஹீவாலின் உடலின் ஒவ்வொரு அணுவையும் அவள் சீராட்டினாள்; தழுவினாள். பொழுது புலர ஆரம்பித்தது; அவள் பிரிய வேண்டிய வேளையும் வந்தது; ஆனால் மஹீவாலை விட்டுப் பிரிய அவளுக்கு மனமே வரவில்லை.

கடைசியில் வேறு வழியில்லாமல், ஸோஹ்னி அங்கிருந்து கிளம்பினாள். கிளம்பும் போதுஅவனிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டாள்; அவன் திரும்பத் தன் கரைக்குப் படகில்தான் போக வேண்டும்; காயம் ஆறும் வரை அவன் தண்ணீரில் இறங்கக் கூடாது, என்று. மறுநாள் மாலையும் அதன் பிறகும், ஸோஹ்னியே மஹீவால் இருக்கும் கரைக்குச் செல்வாள்.

அவர்கள் அங்குள்ள மண் வண்ணம் கொண்ட தாமரையை உடைய சாதுவின் தோட்டத்தில் சந்தித்துக் கொள்வார்கள்.

இவ்வளவு முடிவுகள்; இத்தனை பேச்சுக்களுக்குப் பிறகு ஸோஹ்னி தனது வீட்டுக்குச் சென்ற பிறகு வெகு நேரம் ஆகிவிட்டிருந்தது. மெதுவாகத் தனது இடத்துக்குச் சென்றபோது லட்சக்கணக்கான கண்கள் அவளையே உற்றுப் பார்ப்பது போல அவளுக்குத் தோன்றியது. அவளது

மாமியாரும், நாத்தனாரும் பொய்யாகக் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்தனர். மறுநாள் காலையில் அவளது மாமியாரும் நாத்தனாரும் அவளை வார்த்தையால் வறுத்தெடுத்தனர். தனது மென்மையான சரீரம் வெந்து போய்விடும் என்று அவளுக்குத் தோன்றியது. அவர்கள் இருவரும் விரோத பாவத்தினாலும், பொறாமையாலும் எரிந்து கொண்டிருக்கும் விறகுகளாக அவளுக்குத் தோன்றினர். தனக்கு மூச்சுத் திணறி ஆபத்து வந்துவிடலாம், என்று அவளுக்குத் தோன்றியது. அந்த வீட்டின் சூழ்நிலை, அழுகி நாற்றமெடுத்துப் போன ஒன்றாக அவள் உணர்ந்தாள். வீட்டின் உள்ளே மூலை, மூலையாக நின்று கொண்டிருந்தவர்கள், குசு குசு என்று பேசி அவளுக்கு எதிராகச் சதி செய்வது போல அவளுக்குத் தோன்றியது.

எப்படியோ இரவும் வந்தது; எல்லோருக்கும் உறக்கமும் வந்தது. எல்லோரும் தூங்க ஆரம்பித்தவுடன் ஸோஹ்னி மஹீவாலைச் சந்திக்கக் கிளம்பினாள். ஜனாவைக் கடப்பதற்காக அடுக்களையிலிருந்து ஒரு மண் பானையையும் எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டாள்.

ஸோஹ்னி வெளியேறியதுதான் தாமதம், தூங்குவதுபோல் நடித்துக் கொண்டிருந்த, கெட்ட எண்ணம் கொண்ட அவளது நாத்தி, மெதுவாக அடிமேல் அடி வைத்து அவளைப் பின் தொடர்ந்தாள். அவளது மாமியாரோ, கட்டிலில் படுத்துக் கொண்டே தனது மனத்தை விஷமாக்கிக் கொண்டிருந்தாள்.

ஸோஹ்னி, வேகமாக நடந்து நதிக் கரையை அடைந்தாள். முன் நாட்களில் கொந்தளிப்பு எதுவுமே நடக்காததுபோல், நதி அமைதியாக இருந்தது. அவள் முன் பின் திரும்பிப் பார்க்காமல் தனது காதலனைச் சந்திக்கப் போகும் ஆர்வத்தில் நதியில் இறங்கி நீந்த ஆரம்பித்தாள். அவளது நாத்தியோ, கைகளைப் பிசைந்தவாறு கரையில் நிற்க வேண்டியதாயிற்று. அவள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, ஸோஹ்னி நதியில் வெகு தூரம் நீந்திச் சென்று, நாத்தியின் பார்வையிலிருந்து மறைந்துவிட்டாள்.

இரவு முழுதும் நாத்தி, நதிக் கரையிலேயே உட்கார்ந்து திட்டம் தீட்டிக் கொண்டிருந்தாள், பற்களை நற-நறவென்று

கடித்தவாறே. விடியும் சமயம், எதிரே நதியில் பானையின் உதவியுடன் நீந்தி வருவதைக் கண்டாள்.

திருடனைக் கையும் களவுமாகப் பிடித்து விட வேண்டும் என்று நாத்திக்கு ஆசைதான். ஆனால் அவளால் அவ்வாறு செய்ய இயலவில்லை. ஒரு அடர்ந்த ஆலமரத்தின் கீழே நின்று பார்த்துக் கொண்டே இருந்தாள்.

நதியிலிருந்து வெளி வந்தாள் ஸோஹ்னி. என்ன அழகு வாய்ந்தது ஸோஹ்னியின் சரீரம்! சந்திரனின் ஒளி, அவளைப் பிரமிக்கத்தக்க அழகியாகக் காட்டியது. நாத்தி அவளை எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள். தனது ஈர ஆடைகளைப் பிழிந்து கொண்டாள் ஸோஹ்னி. பிறகு தனது குடத்தை ஒரு புதரில் மறைத்து விட்டு, வீட்டை நோக்கி நடந்தாள். காலை ஆவதற்கு முன்பு, வீட்டில் தனது கட்டிலில் சென்று படுத்துக் கொண்டாள். வெய்யிற் காலமானதால், வரும் வழியிலேயே அவளது ஆடைகள் உலர்ந்து விட்டன.

நாத்தி, தனது தாயாரிடம் எல்லா விஷயங்களையும் கூறி விட்டாள். ஸோஹ்னியை விட அவளது நாத்தி வயதில் மிகவும் பெரியவள். ஆனால் வரன் ஏதும் கிடைக்கவில்லை. ஆகவே, அவள் பொறாமையால் வெந்து கொண்டிருந்தாள்...... ஸோஹ்னி, கொண்ட கணவனைக் கை விட்டு விட்டு, காதலனுடன் உல்லாசமாக இருக்கிறாளே என்று.

அடுத்த இரவு ஸோஹ்னி குறித்த நேரத்தில் வீட்டிலிருந்து கிளம்பினாள். மஹீவாலைச் சந்திப்பதாக வாக்குறுதி கொடுத்திருந்தாளே! அம்பைப் போல நேரே சென்று நதிக் கரையை அடைந்தாள். புதரிலிருந்து குடத்தை எடுத்துக் கொண்டு நீரில் இறங்கினாள்.

அன்று பௌர்ணமி; இருந்தாலும் நதியில் கொந்தளிப்பு இருந்தது. மஹீவாலைச் சந்திக்கப் போகும் உற்சாகத்தில் நதியின் அலைகளில் வழுக்கிக் கொண்டு சிரமமில்லாமல் சென்று கொண்டிருந்தாள். அதிக தூரம் சென்றிருக்க மாட்டாள்; திடீரென்று, அவள் தோள்களில் இருந்த பானை உடைவது போன்ற உணர்வு அவளுக்கு ஏற்பட்டது. உண்மையில் இது உலராத, ஈரப்பானை; நதியில் கரைந்து குழம்பாகிப் போய்விட்டது. ஸோஹ்னி நதியின் நடுப்

பகுதியை அடைந்து விட்டிருந்தாள்.

எதிர்க் கரையில் பழுப்பு நிறத் தாமரைச் சாமியாரின் தோட்டம் இருந்தது. அங்கே, மஹீவால், ஸோஹ்னியின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஸோஹ்னி, மஹீவாலைக் கூப்பிட ஆரம்பித்தாள். நதியில் புயலின் ஆதிக்கம் அதிகரித்தது. தன் சக்தியை எல்லாம் இன்றே காட்டிவிடப் போவதாக, சுழிக் காற்று அறைகூவியது. அலைகளின் மோதல், ஸோஹ்னியைக் கலவரத்துக் குள்ளாக்கியது. மஹீவாலைக் கூப்பிடும் ஒவ்வொரு முறையும், அலைகள் அவளை தண்ணீரின் உள்ளே தள்ளிக் கொண்டிருந்தன. மஹீவாலை ஸோஹ்னி அழைக்கும் ஒவ்வொரு தடவையும் அவளது நாத்தி, கரையில் நின்று கொண்டு, பெரிதாகச் சத்தம் போட்டுச் சிரித்தாள். புயல் வீசும் இரவன்று அவளது சிரிப்பின் சத்தம், ரா்ட்சஸியின் சிரிப்பைப் போல எதிரொலித்துக் கொண்டிருந்தது.

ஸோஹ்னியின் கூவல், மஹீவாலின் காதுகளில் விழுந்தது. ஒரு கழியின் துணை கொண்டு நொண்டியவாறே அவன் தோட்டத்திலிருந்து வெளியே வந்தான். எவ்வளவு இளமை கொழிக்கும் வாலிபன்! இம்முறை ஸோஹ்னி அழைத்த வுடனே, மேற்கொண்டு கேள்வி கேட்காமல், நழுவப் பார்க்காமல், அதே நிலையிலேயே, புண்கொண்ட காலுடன் நதியில் குதித்தான்.

மஹீவால் நதியில் குதித்த உடனே, புயல் மறுபடி ஒருமுறை அதிக ஆவேசத்துடன் வீசியது. வெள்ளப் பெருக்கு, ஸோஹ்னியையும் மஹீவாலையும் ஒன்றுபடுத்தியது. இருவரும் அரவணைப்பில் இருந்த காட்சியை கரையிலிருந்த நாத்தி ஓரிரு கணங்கள் கண்டாள். பிறகு ஸோஹ்னியோ, மஹீவாலோ காணப்படவில்லை. வெள்ளம் அவர்களை மறைத்து விட்டது. ஒருவரை ஒருவர் தழுவியவாறே அவர்கள் தண்ணீரினுள் சென்று விட்டனர். கரையிலிருந்த நாத்தி, எட்டி எட்டிப் பார்த்தவாறே நிற்க வேண்டியதாயிற்று.

# ராஜா ரஸாலு

## ஹரிபஜன் சிங்

தனது ஒரே மகன் பூரனுக்கு ராஜா ஸல்வான் மரணதண்டனை விதித்து விட்டான். தன்னைப் பொறுத்த வரை அவன் நியாயம் வழங்கி விட்டான்; யாருக்கு உரிமை வழங்க வேண்டுமோ வழங்கி விட்டான். ஆனால் அவனது மனத்தில் சாந்தி இல்லை. அவனுக்கு வயது ஏறிக் கொண்டே போயிற்று; அவனது ராணிகள் இருவருடைய மடியும் சூன்யமாகவே இருந்தன. அரசனுக்கு வாரிசு ஏதும் உண்டாகவில்லை. மூத்த ராணியான பூரனின் தாயார் இச்சரா அழுது அழுதே குருடியாகி விட்டிருந்தாள்; இளைய ராணி லூணாவின் யௌவனமும் தேய்ந்து வந்தது; அவள் இதுவரை மலரவே இல்லை. அவளுக்குள்ளே இருந்த மிகப் பெரியதொரு ஆறாத புண்ணிலிருந்து சீழ் ஒழுகிக் கொண்டே இருந்தது. அஜாக்கிரதையாலோ, கனவு காணும் போதோ அல்லது வெறி பிடித்த நிலையிலோ தான் செய்திருந்த பாப காரியத்தைத் தானே உளறிவிடுவோமோ, என்று அவள் பயந்து கொண்டிருந்தாள். பல வருடங்களாக அவள் தன்னைச் சிங்காரித்துக் கொள்ளவே இல்லை. அரசனுக்கும் அவளுக்கும் ஊடல் ஏற்படவோ, அவன் அவளைச் சமாதானப்படுத்தவோ இல்லை. அந்த அரண்மனை முழுவதுமே சூனியமாகக் கிடந்தது. வேலைக்காரர்களும், தாதிகளும் கூட ஜீவனற்று, நிழல்களைப் போலச் சுற்றி வந்தனர்.

ஊரின் குளக் கரையில் யோகி பூரன் வந்திருக்கிறார், என்று ஒரு நாள் தகவல் வந்தது. பல வருடங்களாக இந்தக் குளத்திலிருந்து யாரும் தண்ணீர் எடுக்கவில்லை. அருகிலிருந்த

தோட்டமும் வாடிப் போயிருந்தது. குளத்தில் வெறும் பாசியே காணப்பட்டது. இந்த அபசகுனம் பிடித்த தோட்டத்திற்குப் பொழுதைக் கழிக்க வருவதையும் மக்கள் நிறுத்தி விட்டிருந்த னர்.

ஆனால் இப்போதோ, யோகி அந்தக் குளக்கரைக்கு வந்தவுடன், குளத்தில் நீர் சுரக்க ஆரம்பித்தது. தோட்டமும் பூத்துக் குலுங்கியது. மக்கள் கூட்டம் கூட்டமாக வர ஆரம்பித்தனர்.

யோகியின் பெருமை அரண்மனையை எட்டியது. அரண் மனையின் வெளிக் கட்டிடச் சுவற்றில் வெள்ளைக் காகம் ஒன்று வந்து அமர்ந்ததாக வேறு பேசிக் கொண்டனர். தங்களது மகன் தம்மை அழைப்பதாக இச்சரா, லூணா இருவருக்குமே ஒரு பிரமை. காலில் ஏதும் அணியாமல் யோகியின் தரிசனத்திற்குச் செல்வதென அவர்கள் தீர்மானித்தனர்.

அரசி இச்சரா, பன்னிரண்டு வருடங்களாகச் சிறியதொரு இருட்டறையில் அடைந்து கிடந்தவள், ரோஜா மலர் அணிந்து வெளியே வந்தாள். இந்தச் செய்தி நகர் முழுதும் உடனே பரவிவிட்டது. அரண்மனையின் முகவாயிலில், குதிரைகள் பூட்டிய வண்டியைச் சாரதி கொண்டு வந்து நிறுத்தினான். ஆனால் இச்சராவோ, பைத்தியத்தைப் போன்று வெறும் கால்களுடன் தட்டுத் தடுமாறியவாறு, நடந்து சென்றாள். இருளடைந்திருந்த அவளது கண்களுக்குக் கூட, அவளது மகன் தங்கியிருக்கும் தோட்டத்திற்கு வழி தெரிந்திருந்தது. அரசி முன்னே செல்ல, வண்டி பின்னால் சும்மா சென்று கொண்டிருந்தது. ராணி வந்து கொண்டிருக்கும் செய்தி, அவளுக்கும் முன்னால் பூரன் தங்கியிருக்கும் குளக்கரையை எட்டிவிட்டது.

தட்டுத் தடுமாறியவாறு தன்னை நோக்கி வந்து கொண்டிருந்த தனது தாயாரைக் கண்ட யோகி, தனது இருக்கையிலிருந்து எழுந்து, பாதி தூரம் சென்று அவளைத் தாங்கிக் கொண்டான். இவ்விதம் அவர்கள் நடந்து வரும் போது இச்சரா கேட்டாள்:

"நீ தொடுவது என் பிள்ளை தொடுவது மாதிரியே இருக்கு;

யோகி, நீ என்னோட பிள்ளை தானா?''

யோகியின் மனதும் நெகிழ்ந்தது. அவனுக்கும் பல வருடங்களுக்குப் பிறகு தாயாரின் ஸ்பரிசம் கிட்டியிருக்கிறது.

"ஆமாம்மா! உன்னோட யோகிப் பிள்ளைதான் நான்!"

பசுமை பெற்ற அந்தத் தோட்டத்தைப் போலவே, பூரனின் தாயும் புது மலர்ச்சி பெற்றாள். அவளது கண்பார்வையும் மீண்டது; அவளது மார்பில் பால் ஊற்றாகப் பெருகியது.

இச்சராவின் பின்னே, ஸல்வானும் லூணாவும் போஷிக்கப்படாமல் நாதியற்றுப் போன மரங்களைப் போல நடந்து வந்து கொண்டிருந்தனர்; பூரன் இவர்களுக்கும் தனது ஸ்பரிசத்தால், புத்துணர்வு ஊட்டுவானா?

வாடியிருந்த தனது கிழத் தந்தை தன்னை நோக்கி வருவதைக் கண்ட பூரன், எழுந்து நின்று கொண்டான். தனக்கு அருகில் ஸல்வான் வந்தவுடன் குனிந்து வணங்கினான். அரசன் அதிசயித்து நின்றான்:

"யோகீ, என் மேலே இத்தனை சுமையை வைக்காதீங்க; நான் உங்க கிட்டே கொஞ்சம் விபூதிப் பிரசாதம் வாங்கிட்டுப் போகத்தான் வந்திருக்கேன்! உங்க கிருபையைத்தான் யாசிக்க வந்திருக்கேன்!"

"மஹாராஜா! இந்தக் கட்டை நீங்க கொடுத்ததுதான்! எது வேணும்னாலும் எடுத்துட்டுப் போங்க!"

அரசன் அதிர்ச்சியடைந்து நின்றான்: ஆனால் புத்திர பாக்கியம் பெறாத லூணா எப்படிச் சும்மா இருக்க முடியும்?

"யோகீஸ்வரரே! எங்க மேலே பெரிய மனசு பண்ணி, எங்களுக்கு ஒரே ஒரு பிள்ளை பிறக்கணும்னு வரம் குடுங்க!"

யோகி சொன்னான்: "அரசருக்குத்தான் ஏற்கனவே ஒரு பிள்ளை இருக்கானே!"

அரசனின் கண்களில் நீர் பெருகியது: "மகன் இருந்தான்; இப்போ இல்லை; இருந்தான்னா, அந்தப் பாபகாரியம் செஞ்ச பிள்ளையைத் திருப்பி அழைச்சிட்டு வருவேன். பிள்ளையே இல்லாமெ சாகறதைவிட..."

யோகி அரசனை முழுவதும் பேச விடவில்லை:

"அரசே உங்க மகன் இப்போது கூட இருக்கான். ஆனா, அவன் பாபகாரியம் ஏதும் செய்யவுமில்லே; நீங்க திரும்ப

அவனை அழைச்சுக்கிட்டுப் போகவும் முடியாது!''

அரசனுக்குத் தெரியும் யோகிகள் பொய் பேசமாட்டார்கள், என்பது. அவன் லூணாவின் பக்கம் திரும்பி அவளைக் கடுமையாக நோக்கினான். லூணா, கற்சிலை போன்று அமர்ந்திருந்தாள். அவளது கண்களிலிருந்தும் வெள்ளம் பெருகியது. இவ்வளவு தேஜஸ் உள்ள யோகியிடம் பொய் பேச எப்படித் தைரியம் வரும்? அரசனின் பார்வையின் கடுமையோ, மிக அதிகமாக இருந்தது. தவிர, பிள்ளை வரம் கேட்பதற்காகவே அந்த அரசி, யோகியின் கூடாரத்திற்கு வந்திருக்கிறாள். வேறு வழியில்லை அவளுக்கு. எனவே அழுதவாறே தனது குற்றத்தை ஒப்புக் கொண்டாள்: ''பூரன் மீது குற்றம் ஒன்றுமில்லை; என்னோட மூளைக்குத்தான் கோளாறு ஏற்பட்டுப் போச்சு. அவனோட ரூப சௌந்தர்யத்தைப் பாத்துட்டு என்னாலே சும்மா இருக்க முடியலை; நான் தர்மத்தை விட்டு நழுவிட்டேன்!''

அரசன், வாளை உருவி அவளை வெட்ட முற்பட்டான். யோகி அவனைத் தடுத்தார்: ''அரசே எது நடந்திருந்தாலும், நல்லதாத்தான் முடிஞ்சிருக்கு. ஏன் ஆத்திரப்படுகிறாய்? உன் பிள்ளை உசிரோடதான் இருக்கான். உனக்கு முன்னாலே தான் உட்கார்ந்துக்கிட்டு இருக்கான்.''

எல்லா மக்களும் ஊன்றிக் கவனித்து யோகியை அடையாளம் கண்டு கொள்ள முயற்சி செய்ததில், யோகியிடம் அரச குமாரனின் சாயல்கள் இருப்பதை அறிந்து கொள்ள முடிந்தது. அவர்கள் யோகியைத் தழுவிக் கொள்ள விரும்பினர். ஆனால், அவர் தனக்கு அருகில் எரிந்து கொண்டிருந்த கட்டைகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு நின்றார்: ''அரசே, நாம் உறவு-பந்தம் என்ற மாய வலையை அறுத்துக் கொண்டு விட்டோம், மறுபடியும் நாம் அப்பா- பிள்ளை உறவுக்குத் திரும்பிப் போக முடியாது. அதற்காக நீங்க நிராசையடைய வேண்டாம். உங்க மகன் உங்க குலத்துப் பெருமையை அதிகமாக்கிக்கிட்டுத்தான் இருப்பான். மக்கள் யோகியின் பெயரைச் சொல்லும் போது, ராஜா ஸல்வானின் பெயரையும் சேர்த்தே பேசப் போறாங்க. அரச வாழ்க்கை எல்லாம், தேய்ந்து போகும் நிழல் மாதிரி. தர்மம் யுகக் கணக்கில்

ஸ்திரமாக இருந்து வர்ற விஷயம்.''

ராணி லூணா சொன்னாள்: "என்னாலே அரண்மனையே சூன்யமாகிக் கிடக்கு. ராஜாவோட பிள்ளை அரண்மனைக்குத் திரும்பாத வரைக்கும், நான் அங்கே அடி எடுத்து வைக்கப் போறதில்லே. மகனே! யோகீ! நீ வீடு திரும்பாத வரைக்கும், என் மேலே இருக்கற களங்கம் நீங்காது. தியாகம் பண்ணனும்னா, எல்லாக் குற்றம்–குறைகளையும் தியாகம் பண்ணிடு. நம்ம வீட்டுக்குத் திரும்பிடு!''

தனது பிச்சைப் பாத்திரத்திலிருந்து ஒரு அரிசியை எடுத்து, லூணாவின் உள்ளங்கையில் வைத்தவாறே யோகி கூறினார்: "அம்மா, உன் வீட்டுக்குத் திரும்பிப் போ. உன்னோடெ உன் மகனும் வருவான். இந்தத் தோட்டத்தைப் போல உன் வயிறும் பூத்துக் குலுங்கப் போகிறது!''

அரசன் சொன்னான்: "பூரனா! நீயும் வீட்டுக்குத் திரும்பிடு! குலைஞ்சு போயிருக்கற குடும்பம், நீ இல்லாம சீ ராகாது!''

"அரசே! இனி நாம் வீடு திரும்ப இயலாது. உங்களைப் பொறுத்தவரை நாம் இறந்து விட்டோம். நான் பேசற வார்த்தைகளும் நிச்சயமானவைதான். உன் வீட்டிலே மகன் பிறப்பான்; ஆனா, அவனையும் நீ உன் வீட்டிலே வைத்துக் கொள்ள முடியாது. இச்சரா அம்மாவைப் போலவே, லூணா அம்மாவும், பிள்ளையைப் பிரிஞ்சு அழப்போறா, கதறப்போறா!''

சிறிது காலத்துக்குப் பிறகு லூணா ரஸாலுவைப் பெற்றாள். அவனுடைய ஜாதகத்தைப் பரீட்சித்த ஜோதிடர்கள், குழந்தையை பன்னிரண்டு வருட காலம் பெற்றோர் களிடமிருந்து பிரித்து வைக்க வேண்டும் என்று கூறினர். அவனுடைய நட்சத்திரமும் கிரக நிலையும் பூரனுடையவை போலவே இருந்தன. ரஸாலு, பலவானாகவும் சிறந்த ராஜபுத்திர வீரனாகவும், அதே சமயம், யோகி போன்று எதிலும் பற்றில்லாதவனாகவும் இருப்பான், என்றும் ஜோதிடர்கள் கூறினர்.

ரஸாலுவை தனியே ஒரு சுரங்க மாளிகையில் வைத்தனர். அவனைக் கவனித்துக் கொள்வதற்காக தாதிகள், அடிமைகள் பலர் அமர்த்தப்பட்டனர். பன்னிரண்டு வருடச் செலவுக்கு

வேண்டிய செல்வமும் அவர்களிடம் தரப்பட்டது. ரஸாலு பிறந்த அதே தினத்தன்று, அரசனின் குதிரைகளில் ஒன்று குட்டி போட்டது. ஃபௌலாதி என்று பெயர் வைக்கப்பட்ட அந்தக் குதிரை ரஸாலுவுடன் சேர்ந்தே வளர்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

ரஸாலு நன்கு வளர்ந்து பெரியவனாகி, பன்னிரண்டு ஆண்டுகளின் முடிவில் சுரங்க மாளிகையிலிருந்து வெளியே வந்தான். மிகுந்த அழகுடனும் பலவானாகவும் விளங்கினான். பண்டிதர்கள் அவனுக்கு ராஜீய விவகாரங்கள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் கற்றுத் தந்தனர். குதிரைச் சவாரி, அம்பெறிதல், வாள் போர் மற்றும் ஈட்டி எறிதல் ஆகியவற்றில் அவன் நிபுணனாக விளங்கினான். வீட்டிற்கு வெளியே செல்லும்போது வேட்டையாடுவதும், அரண்மனைக்குள் சதுரங்கம் விளையாடுவதும் அவனுடைய பொழுது போக்குகளாக இருந்தன.

வாலிபப் பருவத்தை அடைந்த ரஸாலு மண் உருண்டைகளைக் குறி பார்த்து எறிவதில் நாட்டம் கொண்டான். கிராமத்துப் பெண்மணிகள் குளத்திலிருந்து நீர் கொண்டு வர மண் குடங்களை எடுத்துச் சென்றனர். அவற்றின் மீது மண் உருண்டைகளை எய்து ஓட்டை விழச் செய்தான் ரஸாலு. கண் இமைப்பதற்குள் குடத்தில் பத்துப் பன்னிரண்டு ஓட்டைகள் ஏற்படுத்த வல்லவனாக இருந்தான் அவன். பாதை நெடுக, தண்ணீர் தாரை தாரையாக வழியலாயிற்று. அவன் செய்யும் காரியங்களெல்லாம், கனவுக் காட்சிகள் போல இருந்தன. ஆனால் விளையாட்டாக ரஸாலு செய்யும் இந்தக் காரியங்களினால், கிராமத்தினருக்கு மிகுந்த நஷ்டம் ஏற்பட்டது. பெண்மணிகள், ராணி லூணாவிடம் சென்று முறையிட்டனர். ராணியினால் தனது அருமந்தப் புதல்வனைக் கட்டுப்படுத்த இயலவில்லை. அவள் மக்களுடைய மண் குடங்களுக்குப் பதிலாக, பித்தளைக் குடங்கள் வாங்கிக் கொடுத்தாள். ஆனால் ரஸாலு, தனது தாயாரைவிடச் சாமார்த்தியசாலியாக இருந்தான். மண் உருண்டைகளுக்குப் பதிலாக அவன் வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டான். அம்புகளை எய்து

பித்தளைக் குடங்களை ஓட்டையாக்கி வந்தான். மக்களின் இன்னல் அதிகமாயிற்று. புகார் அரசன் வரைக்கும் போயிற்று. அரசனால் தனது ஒரே மகனைத் தடுக்க முடியவில்லை. அதே சமயம், மக்களுடைய துன்பத்தைக் கண்ட பின் ஒன்றும் செய்யாமலும் இருக்க முடியவில்லை. அவன் தனது மகனைப் போன்ற சிலை ஒன்று செய்து அதன் முகத்தில் கரி பூசி, அதை அரண்மனைக்கு வெளியே வைக்க ஏற்பாடு செய்தான். விளையாட்டுக்கள் முடிந்து திரும்பிய ரஸாலு, அரண்மனை வாயிலில் கரி பூசப்பட்ட முகத்துடனும், நீல வண்ணமும் கொண்ட சிலையைப் பார்த்தான். அரசனின் கோபம் ரஸாலுவுக்குப் புரிந்தது. அரண்மனையில் தான் இருக்கச் கூடிய நாட்கள் முடிந்து விட்டன, என்பதை அவன் அறிந்தான். தனது நாட்டை விட்டு வெளியேறி விடுவது என்ற முடிவுக்கு வந்தான்.

அரச குமாரன் வெளியேறிய செய்தி, நகர் எங்கும் பரவியது. தைரியம் கொண்ட இளைஞர்கள் அவனுடன் வெளியேறினர், தமது நாட்டை விட்டு வெளியேறி, தமது பலத்தால் சாதனைகள் புரிந்து காட்டுவதாக அவர்கள் விரதம் பூண்டனர். இந்த இளைஞர்களின் தாய்மார்கள், மறுபடி ராணி லூணாவிடம் சென்று முறையிட்டனர், தனது மகனைத் தடுத்து நிறுத்தும்படி. ஆனால் வில்லிலிருந்து கிளம்பிய அம்பைப் போல, ரஸாலுவும் அவன் தோழர்களும் நகருக்கு வெளியே வெகு தூரம் சென்றுவிட்டிருந்தனர். லூணா, அரண்மனையின் மேல் மாடத்தில் நின்று கொண்டு வெளியேறும் தனது மகனைக் காண முயன்றாள்; ஆனால், தும்பும்–தூசியும் கலந்த புழுதிப் படலத்தைத் தவிர வேறு எதுவும் அவளுக்குத் தென்படவில்லை.

பிரிவுத் துயரினால் பீடிக்கப்பட்ட லூணா, கதறி அழுவதைக் கவி பாடலாக அமைத்துள்ளார்:

வே தூ சலிஊ தே₃ஸ் ப₃கா₃னே புத் ரஸாலுவா,
வே தூ முட்₃ ஆ கிஸே ப₃ஹானே புத் ரஸாலுவா,
கலகீ₃ தேரீ மிட்டீ சரூல் க₃யீ
தேரே நக்ஷ் நா ஜாண்–ப₂சாணே, வே புத் ரஸாலுவா!
திக்₂கீ₂ சுரோ கலேஜ தா₄ணீ,

ஜா பை$_3$ழ$_2$ தி$_2$ல் தே$_3$ கா$_2$னே, வே புத் ரஸாலுவா,
பிச்$_2$சே$_2$ தா சு$_2$ட்$_3$ கி$_3$வோ, ப$_3$லதி$_3$யா லாடா,
வே தூ ப$_3$ன் கி$_3$யோ அக் தே$_3$ கா$_3$னே, வே புத்
ரஸாலுவா

(மகனே ரஸாலூ, நீ வெளி தேசத்துக்குப் போய்விட்டாய். கண்ணே ரஸாலூ, ஏதேனும் காரணம் சொல்லித் திரும்பி வா; ஒன்னோட இளவரசுக் கிரீடம் தூசி படிஞ்சு போச்சு; உன்னை அடையாளமே தெரியல்லை; கூர்மையான கத்தி எங்க நெஞ்சிலே பாய்ந்துவிட்டது; உன் பிரிவாலே நாங்க வெந்துகிட்டு இருக்கோம்)

ரஸாலு, தனது நகரை ஒருமுறை கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. ஸியால் கோட்டை விட்டுப் புறப்பட்ட அவன் கூஜர் அரசன் ஆட்சி புரியும் குஜராத்தை அடைந்தான். அந்த அரசன் நகருக்கு வெளியே வந்து அவனை வரவேற்றான். பிறகு கேட்கிறான்:

கிஸ் ராஜே தா$_3$ புத்தர் ஹை
தே கீ ஹை தேரா நாம்
கேஹடா$_3$ தேரா தே$_3$ஸ் ஸோணியா
கேஹடா$_3$ நக$_3$ர் கி$_3$ராம்

(உன் பேர் என்ன; நீ எந்த ராஜாவோட பிள்ளை? அழகான இளைஞனா இருக்கே; உன்னோட நாடு எது? எந்த நகரம், இல்லே கிராமத்திலேருந்து வந்திருக்கே?)

ரஸாலு பதில் சொல்லுகிறான்:

மை ராஜே ஸல்வான் தா$_3$ புத்தர்
மேரா நாம் ரஸால்
மேரா தா ஹுண் தே$_3$ஸ் நா கோயீ
பியோ தா$_3$ தே$_3$ஸ் ஸியால்

(நான் ராஜா ஸல்வானோட பிள்ளை; எனக்குன்னு இப்போ ஒரு தேசமும் இல்லே. எங்க அப்பாவோட தேசத்தின் பேர் ஸியால்.)

ரஸாலு தன் இஷ்டப் படியே காரியம் செய்யும் இளைஞன், என்பது கூஜர் ராஜாவுக்குப் புரிந்தது. அவன் கூறினான்: "உன் பலத்தைப் பரீட்சை பண்ணிப் பார்க்கணும்னா, ஜைலம் பக்கம் போ. அந்த நாட்டின் கால் பாகத்திலே, உங்களுக்கு

உரிமை இருக்கு. உங்க அப்பா ரொம்ப காலமா பிள்ளையே இல்லாமலிருந்தார்; தன்னோட உரிமையை அங்கே செலுத்தவே இல்லை.''

தன் குதிரை ஃபௌலாதியின் மேல் அமர்ந்து, ரஸாலு மேலே சென்றான். அவனிடம் இரண்டு மணங்கு எடையுள்ள வில் இருந்தது; அதிலிருந்து ஒரே சமயத்தில் மூன்று அம்புகளைச் செலுத்த முடியும். அவை தனது இலக்குகளைத் தேடித் தாக்கி விட்டே திரும்பும். ரஸாலு, ஜேலம் கோட்டையைச் சில நிமிஷங்களில் ஜெயித்து விட்டான். தனது தோழர்களில் ஒருவனை அதற்கு அரசனாக நியமித்து விட்டு, தான் மேலே செல்ல ஆரம்பித்தான். மற்ற தோழர்கள் அவனுடன் செல்ல முற்பட்டபோது அவர்களைத் தடுத்து நிறுத்தி அங்கேயே இருக்கச் செய்து, புதிய ஜேலம் கோட்டை அரசனுக்கு அரசு புரிவதில் உதவி செய்யும் படி கூறினான். "இனிமே, நான் தனியேதான் பயணம் செய்யப் போறேன்; எனக்குத் தோழர்கள், இரண்டே பேர்தான்; இந்தக் குதிரை ஃபௌலாதி, இந்தக் கிளி, ஷாதி,'' என்றான்.

ரஸாலு, வெற்றி மேல் வெற்றி கொண்டு மேலே சென்று கொண்டிருந்தான். ஆனால் ஸியாலில் ராஜா ஸல்வான் கிழவனாகிக் கொண்டிருந்தான். எந்த நேரத்திலும் அவனுடைய ஆவி பிரிந்து, சிம்மாசனம் காலியாகலாம் என்ற நிலை. அரசன் தனது மகன் ரஸாலுவுக்குச் செய்தி அனுப்பினான். ஆனால் தூதர்கள், ரஸாலு இருக்குமிடம் அறிந்து அங்கு போய்ச் சேர்வதற்குள், அவன் வேறு இடத்தை அடைந்து விடுவான். ஆக, தந்தையின் செய்தி மகனுக்கு எட்ட முடியாமல் போயிற்று. தூதர்கள் வெறும் கையுடன் ஸியால் திரும்பினர். அதற்குப் பிறகு லூணா செய்தி அனுப்பினாள். ஆனால் அதுவும் ரஸாலுவை எட்டவில்லை. கடைசியில் இச்சரா, பூரனின் பெயரைத் தியானம் பண்ணிக் கொண்டவாறு, ரஸாலுவுக்குச் செய்தி அனுப்பினாள். ஆண்டவன் கருணையினால், அந்தச் செய்தி, ரஸாலுவுக்கு எட்டி, அவன் ஸியாலுக்குத் திரும்பி வந்தான். ஸல்வான், ரஸாலு சிறுவனாக இருந்த போதே, அவனுக்கு மந்திரி மோதி ராமின் மகளைத் திருமணம் செய்து வைப்பதாக நிச்சயம்

செய்து வைத்திருந்தான்.

ரஸாலு, தன் அரண்மனைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். நகருக்கு வெளியே இருந்த குளம் ஒன்றில், இளம் பெண்கள் குடங்களில் தண்ணீர் நிரப்பிக் கொண்டும் தமக்குள் விளையாடிக் கொண்டும் இருந்தனர். அவர்கள், ரஸாலு அலட்சியத்துடனும் கர்வத்துடனும் சென்று கொண்டிருந்ததைக் கண்டனர். அவர்களில் ஒருத்தி, ரஸாலுவைச் சீண்டும் விதத்தில் பாடினாள்:

வே கோ$_3$டீ தே$_3$ அஸவாரா
ஃபண்டே$_3$ தா தேரே உட$_3$ன் ஹவா விச்
ஸாம்ப்$_4$ லை கு$_3$டீ தே$_3$ வாங்க்$_3$
ஹாய் வே கோ$_4$டீ தே$_3$ அஸவாரா
ஜே ஃபண்டி$_3$யா தோ தைனூ ஃபண்டி$_3$யா கிஸே நே
புடன்ன நஹீ தே$_3$னீ லாங்க்$_4$

(ஓ, குதிரைச் சவாரிக்காரரே, உன் தலை மயிர் காத்திலே பறந்து போய்க்கிட்டிருக்கு; பொம்பளைங்களைப் போல அதைப் பின்னல் போட்டுக்க! ஓ, குதிரை வீரனே, உன் மயிரைப் பிடித்து எவளாவது இழுத்துட்டாள்னா, உன்னாலே, மேலே ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியாது!)

ரஸாலுவும் "பட்"டென்று பதில் சொன்னான்:

ஜா தா அப்னீ மோட்$_3$ லை போ$_3$லீ
நஹீ தா ஹோண் நா தே$_3$வா தேரா காஜ்
டுட் ஜாயே தேரா சூடா$_3$பீ$_3$டா$_3$
த$_4$ரியா ரஹ் ஜாயே தா$_3$ஜ்

(மரியாதையா நீ பேசினதை வாபஸ் வாங்கிக்கோ; இல்லே, உனக்குக் கல்யாணம் நடக்க விடமாட்டேன். உன்னோட வளையல் உடைந்து போயிரும்; உனக்கான சீர் வரிசையெல்லாம் உங்க வீட்டிலேயே தங்கிரும்")

அந்தப் பெண்ணுக்குத் தன் இளமை பற்றிய கர்வம் இருந்தது; தான் மந்திரியின் பெண், என்ற பெருமை வேறு. தன்னுடைய பேச்சை அவள் எப்படி வாபஸ் வாங்கிக் கொள்வாள்? ரஸாலுவின் பக்கம் பார்த்த அவள், உடனே வேறு பக்கம் திரும்பிக் கொண்டு விட்டாள்.

தன்னை எதற்காகக் கூப்பிட்டார்களோ, அதைச் சீக்கிரம்

சொல்லும் படியும், தன்னால் நான்கு சுவர்களுக்கு நடுவே வெகு காலம் அடைபட்டுக் கிடக்க முடியாதென்றும் தன் வீட்டை அடைந்த உடனேயே தன் தாய்–தந்தையரிடம் ரஸாலு தெளிவாகச் சொல்லி விட்டான். தாய்–தந்தையரின் எண்ணமோ வேறு விதமாக இருந்தது. பையனுக்குத் திருமணம் செய்து விட்டால் அவன் மனது ஒரு நிலைப்பட்டு விடும் என்று அவர்கள் நினைத்தனர்.

மறுநாளே மந்திரி மோதிராம் வீட்டுக்கு மாப்பிள்ளை, தனது பந்து, மித்திரர்களுடன் சென்றான். திருமணம் முடிக்க மணப் பெண் வறுத்த தானியத்தின் மீது, சர்வாபரண பூஷிதையாக வந்து அமர்ந்தாள். அந்தணர்கள் மணமகன்–மணமகள், இருவருடைய வஸ்திரங்களையும் சேர்த்து முடிச்சிட்டனர். அக்னியைச் சுற்றி நான்கு முறை வலம் வந்தாயிற்று. மூன்று பிரதட்சிணங்கள் பாக்கி இருந்தன. அடுத்த வலத்தின் போது, மணப் பெண்ணுக்கு முன்னால் மாப்பிள்ளை இருக்க வேண்டும். அவளைத் தாண்டி முன்னே செல்வதற்கு முன்னால், ரஸாலு மணமகளின் முகத்தைப் பார்த்தான். நான்கு கண்கள் சந்தித்துக் கொண்டவுடன், ஒருவர் மற்றவரை அடையாளம் கண்டு கொண்டனர். கண் இமைப்பதற்குள், உறையிலிருந்து வாளை உருவிய ரஸாலு தன்னைப் பிணைத்திருந்த முடிச்சை அறுத்து தூர எறிந்தான். மின்னல் போன்ற வேகத்துடன், முற்றத்திற்குப் பாய்ந்து அங்கு நின்று கொண்டிருந்த தனது குதிரை ஃபௌலாதின் மீது ஏறி விட்டான். பார்த்து நின்றவர்களின் பிரமை நீங்குவதற்குள், ரஸாலு நகரை விட்டு வெகு தூரம் சென்று விட்டிருந்தான். அவன் தந்தை குரல் கொடுத்தார்: "நெத்தியில் திலகமாவது வைத்துக் கொண்டு போப்பா! இன்னிலேருந்து இந்த ஊருக்கு ராஜா நீதான்!"

ராஜா ரஸாலு அடர்ந்த ஒரு காட்டைச் சென்றடைந்தான். அங்கே அதிக வெப்பம் இருந்தது; ஆனால், நாற்புறமும் நல்ல வாசனையும் இருந்தது. சிறிது தூரம் சென்ற பின் சந்தன மரம் ஒன்று எரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். சிறிது நேரத்திற்குப் பிறகு, மரத்தின் மேலிருந்து, பொசுங்கிய இறக்கைகளுடன் கூடிய அன்னப் பறவை ஒன்று அவனது

காலடியில் விழுந்தது. அந்தப் பறவையைப் பார்த்து மிகுந்த மன வேதனை கொண்ட ரஸாலு, அதனிடம் கேட்டான்: "மரம் எரிய ஆரம்பித்த உடனே அதை விட்டுப் பறந்து ஏன் போகவில்லை," அன்னம் பதில் கூறியது: "ஆயுசு முழுக்க இந்த மரத்தோட பழத்தைச் சாப்பிட்டு, அதோட நிழல்லே ஆனந்தமா இருந்திருக்கேன்! அந்த மரத்துக்குக் கஷ்டம் வந்தபோது அதை விட்டுட்டு எப்படி ஓடிப் போக முடியும்?" ரஸாலு தானே உழைத்து நதியின் பிரவாகத்தை, மரத்தின் பக்கம் வரச் செய்தான். தவிர, ஆண்டவனிடமும் மரத்தின் துக்கத்தை நீக்கும்படி வேண்டிக் கொண்டான். நெருப்பு அணைந்தவுடன், அன்னம் மறுபடி மரத்தின் மீது சென்று அமர்ந்து கொண்டது. அன்னமும் மரமும் பரஸ்பரம் கொண்டிருந்த நேசத்தைக் கண்ட ரஸாலுவின் மனம் நெகிழ்ந்தது. ஆனால் தனது சொந்த வாழ்க்கையில் அவன் பிரியம், காதல், எல்லாவற்றையும் முறித்துக் கொண்டு வந்து விட்டிருந்தான். தன் பயணத்தைத் தொடர ஆரம்பித்த ரஸாலுவை நோக்கி அன்னம் கூறியது:

கலமுகல்லா போ$_4$ரே பாலியோ, கல்லே தேரே ராஹ்
கலமுகல்லே ஜங்கல் தா$_2$னீ; கல்லா–கல்லா ஜா.

(ரஸாலு, நீ சுரங்கத்திலே தனியா இருந்து வளர்ந்தவன்; இந்த தனித்த காட்டிலேயும் தனியாகவே நீ போ!)

ராஜா மேற்கொண்டு சென்றான். காடு முடிவடைவதாக இல்லை. மறுநாள் காலை, அவன் செல்லும் வழியில் ஒரு பாம்பு எதிர்ப்பட்டது. சுழல் காற்று வீசும்போது, மணல் பறந்ததன் காரணமாக, அந்தப் பாம்பிற்குக் கண்களில் பார்வை போய்விட்டது. குதிரையின் குளம்பொலி கேட்டதன் மூலம், ஒரு மனிதன் சென்று கொண்டிருப்பதை ஊகித்த பாம்பு அவனிடம் வேண்டுகோள் விடுத்தது:

ஜனீ ராஹீ லங்கா$_4$ர்தயா,க$_3$ல்ல ஸா$_3$டீ ஸுன்ஜா,
ஜே தூ மேஹரா வால்$_3$டா ஸாடீ$_3$ அக்க கங்கர் கட்ட ஜா

(வழிப் போக்கனே நான் சொல்றதைக் கொஞ்சம் கேளேன்; நீ இரக்கமுள்ளவனாக இருந்தா, என் கண்ணிலே விழுந்திருக்கிற சின்னக் கல்லை எடுத்துடு. நீ தர்மவான்; ஒரு புண்ணிய காரியத்தைப் பண்ணு!)

பாம்பு மனித குலத்துக்கு எதிரியாகும். ஆனால், வீட்டை விட்டு வெகுதூரம் வந்துவிட்ட ரஸாலு, விரோதம் பற்றிய விஷயங்கள் எல்லாம் மறந்து விட்டிருந்தான். ராஜா தன் கைகளால் அந்தப் பாம்பின் கண்களிலிருந்து சிறு கற்களை எடுத்தான். பாம்பிற்கு பார்வை திரும்பக் கிடைத்து விட்டது. ரஸாலு மேலே நடக்க ஆரம்பித்த உடன் பாம்பு, தனது படத்தை விரித்து அவன் முன்னே சென்று நின்றது: "என்ன இது? உபகாரம் செய்ததற்கு இதுவா பதில்?" என்றான் ராஜா. பாம்பு, தலை குனிந்தவாறே பதில் கூறியது: "இன்னிக்கி ராத்திரி என் வீட்டிலேயே தங்கிட்டுப் போகணும்கறதுதான் என்னோட ஒரே பிரார்த்தனை." அதனுடைய வேண்டுகோளை ஏற்ற அந்த வீரன், பாம்பின் குகைக்குச் சென்று, அன்று படுத்து உறங்கினான். பொழுது விடிந்ததும் பாம்பு, வேறு ஒரு மனிதனைக் கடிப்பதற்காக வெளியே புதரில் சென்று மறைந்தது. ரஸாலுவும் தன் வழியே சென்றான்.

காட்டைக் கடந்த ரஸாலுவின் முன்னே ஒரு நீல வண்ணம் கொண்ட நகரம் எதிர்ப்பட்டது. நகரத்துக்கு வெளியே அமர்ந்திருந்த ஒரு கிழவி ஒரு சமயம் அழுவதும் மறு சமயம் சிரிப்பதுமாக இருந்தாள். கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லவில்லை. ரஸாலு அவளை விடாமல் வற்புறுத்தவே, அவள் தனது கதையைக் கூறினாள். "இந்த ஊர் ஒரு பூதத்தின் பிடியிலே இருக்கு. தினசரி ஒரு மனிதனைச் சாப்பிடுது; சில பேர் இந்த நகரத்தை விட்டு ஓடிட்டாங்க. சில பேரைப் பூதம் விழுங்கிருச்சு. மீதி இருக்கறவங்க, தன்னோட சாவை எதிர்பார்த்துக் காத்துகிட்டு இருக்காங்க. என்னோட ஏழு பிள்ளைகளிலே, ஆறு பேரைப் பூதம் சாப்பிட்டிருச்சு. ஏழாவது மகனை இன்னிக்குத் தின்னப் போகுது. நான் தப்பிச்சுக் கிட்டேன்கிறதை நினைச்சா, சிரிப்பு வருது; என்னோட ஏழு பிள்ளைகளையும் பூதத்துக்குக் காவு கொடுத்துட்டேன் கிறதை நினைச்சு அழுதுகிட்டு இருக்கேன்."

ரஸாலு இதுவரை மரங்கள், பறவைகள், பாம்புகள் ஆகியோருக்குத்தான் உதவி செய்திருந்தான். இப்போது மனிதர்களுக்கு உதவி செய்யும் வாய்ப்பு அவனுக்குக்

கிட்டியது. ஆனால், அவனது உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும் வாய்ப்பு இது. கிழவியின் மகனுக்குப் பதிலாகத் தன்னை பூதத்துக்கு அர்ப்பணிக்கப் போவதாக ரஸாலு நிச்சயம் செய்து கொண்டான்.

தனது குதிரையின் மீதேறி காட்டை நோக்கிச் சென்றான் ரஸாலு. நகரத்து மக்கள், பூதம் சாப்பிடுவதற்காக ஒரு வண்டி நிறைய ரொட்டிகளுடன், ஒரு காளை மாட்டையும் கொண்டு வந்திருந்தனர். குதிரை வீரன் ஒருவன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட பூதத்தின் மகிழ்ச்சி அதிகரித்தது– மற்ற பொருள்களுடன், அதிகமாக ஒரு குதிரையும் அதற்குச் சாப்பிடக் கிடைத்துள்ளது அல்லவா? பூதம் முதன் முதலில் குதிரையைத்தான் தொட்டது. உடனே, கண் இமைக்கும் நேரத்தில் ரஸாலு தனது வாளினால் அதனுடைய கையை வெட்டி விட்டான். பூதம் கதறிக் கொண்டே எழுந்து, தன் வீட்டை நோக்கி ஓடியது. ஆனால் அது தப்புவதற்கு வழியில்லாமல் போய்விட்டது. அது மரத்தின் பின்னே ஒளிந்து கொண்டது. ஆனாலும் ரஸாலு விடவில்லை. அவனுடைய அம்பு மரங்களைத் துளைத்துக் கொண்டு சென்றது. பூதம், தனது பிள்ளைகளை ரஸாலுவுடன் போரிட, தனக்கு முன்னே அனுப்பியது. அவற்றில் சிலவற்றை, ராஜா தனது வாளால் வெட்டி வீழ்த்தினான். மற்றவற்றை கயிற்றினால் கட்டிப் போட்டான். பிறகு பூதம் தன் வீட்டினுள் இருந்த இரும்பினால் செய்த ஏழு அண்டாக்களுக்குப் பின்னால் சென்று ஒளிந்து கொண்டது. வீரன் ரஸாலு, தனது ஒரே பாணத்தினால் ஏழு அண்டாக்களையும் துளைத்து, பூதத்தைக் கொன்றான். பூதத்தின் குடும்பம் முழுவதையும் நாசம் செய்த ரஸாலுவின் பெருமை ஊரெங்கும் பரவியது. நகர மக்கள் அனைவரும், தங்களது அரசனுடன், ரஸாலுவைக் காண வந்தனர். அந்த நகரத்தைச் சேர்ந்தவர்கள், தம்முடனேயே ரஸாலுவை நிறுத்தி வைத்துக் கொள்ள விரும்பினர். ஆனால், அவன் கால்களில் இருந்த சக்கரம் அவனை ஒரு இடத்தில் இருக்க விடவில்லை. அந்நகரத்து அரச குமாரி சௌங்கனி ரஸாலுவின் அழகைக் கண்டு அவன் மேல் மையல் கொண்டாள். ஆனால் அவனோ அவளைத் திரும்பிக் கூடப்

பார்க்கவில்லை. அங்கிருந்து அவன் கிளம்பிச் செல்வதைக் கண்ட சௌங்கனி, விரகதாபத்தினால் அழுதாள்:

சன்னன் சீ ரா, சிக்₂ பூஹா, ஃபூக் லகா₃வா லக்₃க₃,
வே ஸோஹனே பரதே₃சியா, மை மரா தேரே க₃ல்ல
லக்₃க₃

(சந்தனக் கட்டை மீது படுத்து நெருப்பு மூட்டிக் கொள்வேன்; ஏ வெளிநாட்டு அழகனே, உன் கழுத்தில் என் கைகளை மாலையாகப் போட்டுக் கொண்டவாறே செத்துப் போவேன்!)

இந்த அளவு காதலினால் கூட ரஸாலுவை நிறுத்தி வைக்க முடியவில்லை. "நீங்களெல்லாம் ஒரு இடத்தில் வசிப்பதுதான் சரி; யோகிக்கோ சுற்றித் திரிவதுதான் சரி"

அங்கிருந்து கிளம்பிய ராஜா ரஸாலு, 'அடக்' என்ற இடத்துக்கு அருகில், ஆற்றங்கரையில் இருந்த சிரிகோட்டை அடைந்தான். அந்தப் பிரதேசத்தின் மன்னன் பெயர் ஸிர்கப் என்பது. அந்த அரசனிடம் ஒரு விசித்திரமான வழக்கம் இருந்தது. அவன் வழிப் போக்கர்களான வெளிநாட்டி னருடன் தலையைப் பணயமாக வைத்து, சொக்கட்டான் விளையாடுவான்; பிறகு அவர்களை ஏமாற்று வித்தையின் மூலம் விளையாட்டில் தோற்கடித்து பிறகு அவர்களது தலையை வெட்டி விடுவான். இந்த நகருக்குள் இரவு வேளையில் ராஜா ரஸாலு பிரவேசித்த போது அவனது குதிரையின் குளம்புகளில் ஒரு எலும்புக் கூடு இடறியது. இந்த நகரின் வீதிகளில் பிணங்கள் கிடக்கும்; இங்கே நிம்மதி இருக்காது, என்பது ரஸாலுவுக்குப் புரிந்துவிட்டது. சூதாடி மன்னனான ஸிர்கப்பின் நகரம்தான் அது என்பதையும் அவன் புரிந்து கொண்டான். தனது உயிரையே லட்சியம் செய்யாமல் சுற்றி வந்த ரஸாலு, ஸிர்கப்புடன், விளையாடுவதென நிச்சயம் செய்து கொண்டான். பொழுது விடிந்ததும் அவன், அந்நகரத்து அரண்மனையை நோக்கிச் சென்றான். இவ்வளவு அழகான குதிரை வீரன், தமது அரசனுக்குப் பலியாகப் போவதை எண்ணி, அந்நகர மக்கள் மிகவும் கவலை கொண்டனர். ஒரு அழகிய யுவதி, குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து நிறுத்தி, ரஸாலுவிடம்

கூறினாள்:

நீலே கோ$_3$டே வாலியா ராஜா, நீவே நேஜே ஆ,
அக்$_3$கே$_3$ ராஜா ஸிர்கப் ஹை, ஸிர் லைஸெள
ஒஹ் லாஹ்,
ப$_4$லா சாஹே ஜே ஆப்னா, தா பிச்சே$_2$ முட்$_3$ ஜா

(நீலக் குதிரை மேலே சவாரி பண்ணுற ராஜாவே, கிட்ட வா! இங்கே இருக்கிற ஸிர்கப் ராஜா உன்னோட தலையை வெட்டிவிடுவான். உயிர் மேலே ஆசை இருந்தா, திரும்பிப் போய் விடு)

ஆனால் ரஸாலு குதிரையை அங்கிருந்து கிளப்பி மேலே சென்றான். அந்த நகரத்து மக்களுக்கும், ராஜா ரஸாலுவைக் கண்டு மிகுந்த இரக்கம் உண்டாயிற்று. ஒவ்வொருவரும், தன்னுடைய புத்திசாலித் தனத்துக்கு ஏற்றபடி, விளையாட்டில் ஜெயிப்பதற்கான ரகசிய வழிகளை அவனுக்குக் கூறினர். அவனுடைய உடல் நலத்தைக் கோரி சிலர் மந்திரம் ஓதினர்; சிலர் பிரார்த்தனை செய்தனர். ஒரு மனிதன் தான் செல்லமாக வளர்த்த பூனை ஒன்றை ரஸாலுவின் சட்டைப் பையில் வைத்தான். பிறகு கூறினான்:

ட$_2$ஹர் வே ராஜா போ$_4$லியா, ஸாடீ3 இத்னீ க$_3$ல்
ஸுன் ஜா,
ஜதோ$_3$ டா$_3$ டீ$_4$ பீ$_4$டா$_3$ ஆ ப$_3$னே, தேரீ பேஷ் நா
ஜாவே கா,
தா$_3$ஹினே த$_3$ஸ்த் உடா$_2$யே கே அப்னீ ஜேப்$_3$ சபா

(விவரம் தெரியாத ராஜாவே; நில்லு. எங்க வார்த்தையைக் கேட்டுட்டுப் போ. உனக்கு அதிகமா கஷ்டம் வர்றபோது, உன்னாலே வேறே ஏதும் செய்ய முடியாதபோது, உன்னோட வலது கையை எடுத்து, சட்டைப் பையிலே போட்டுக்கோ!)

ரஸாலு அரண்மனைக்குச் சென்று அரசனுடன் விளையாட வந்திருப்பதை அறிவித்தான். அரண்மனையின் முன் வாசலில் பதினான்கு முரசுகள் இருந்தன. அந்த ராஜாவுக்கு விஷயத்தைத் தெரிவிப்பவன், அவற்றில் ஒரு முரசை அறைய வேண்டும். முரசின் ஒலி வெகு நேரம் வரை எதிரொலிக்கும் வண்ணம், முரசுகள் அமைக்கப்பட்டிருந்தன. முரசொலி கேட்பவனுக்கு அந்தக் கடுமையான எதி

ரொலியினால் தலை சுற்ற ஆரம்பித்து விடும். தலைசுற்றல் உள்ள மனிதன், சூதாட்டத்தில் எப்படி ஜெயிக்க முடியும்? முரசைக் கவனித்துக் கொள்பவன் ரஸாலுவை முரசுகளை அடிக்கும் படி கூறினான். ஒரு முரசை அடித்த பிறகு, ரஸாலு இரண்டாவது முரசை அடித்த வேகத்தில் அது கிழிந்து போய்விட்டது. அதனால் எதிரொலி எழுப்ப முடியவில்லை.

முன் வாசலைத் தாண்டியவுடன், ஸிர்கப்பின் எழுபது பெண்கள் ஆடும் ஊஞ்சல் இருந்தது. அந்த ஊஞ்சல் அங்கு வருபவர்களின் மனத்தை ஒரு நிலைப்படுத்த விடாமல் செய்தது. "எங்களுக்கு ஊஞ்சலை ஆட்டிவிட்டுப் போ," என்று அப்பெண்கள் ரஸாலுவிடம் கூறினர். "எனக்கு அவ்வளவு நேரம் இல்லை; எல்லோருக்கும் சேர்த்து ஒரே தடவையில் ஆட்டிவிடுகிறேன்," என்றான் அவன். எழுபது பெண்களும் ஒரே முறையில் ஊஞ்சலில் ஏறிக் கொண்டனர். ரஸாலு ஊஞ்சலை வெகு வேகமாக ஆட்டி, அதை ஆகாயத்தில் வெகு உயரத்திற்கு ஏற்றி விட்டான். ஊஞ்சல் திரும்பும்போது, தனது வாளினால் ஊஞ்சலைஅறுத்து விடவே, ஊஞ்சல் உடைந்து, பெண்கள் அனைவரும் கீழே விழுந்து காயமுற்றனர்.

ரஸாலு தர்பாரை நோக்கிச் சென்றான். ஆனால் அதற்குள் அவன் முரசுகளை உடைத்ததும், தனது குமாரிகளுக்குக் காயம்பட்டதும் அரசன் காதுகளுக்கு எட்டிவிட்டது. இப்போது பயம் கொண்டது ரஸாலு அல்ல; அரசன்தான். அவனது மனம் ஒருமுனைப்படுவது பாதிக்கப்பட்டது. சூதாட்டம் ஆரம்பித்தவுடன், ஸிர்கப் பிரார்த்தனை செய்து கொண்டான்.

தீ$_3$வே தே$_3$ நிம்மே சானண் செளபட்$_3$
ராஜே கே$_2$ட்$_3$ட$_3$ன் தோ$_3$
ஆ நீ ஸயியேஹோணியே, தூ மேரே வல்ஹோ
ஹுகம் ஜோ ராஜே ஸிர்கப் தா$_3$
மரதா$_3$ மன்னன் ஸோ

(விளக்கின் நடு அளவு வெளிச்சத்தில் இரண்டு அரசர்கள் சூதாடுகின்றனர்; என் தோழி ஹோணீ, நீ எனக்கு உதவியாக இரு; ராஜா ஸிர்கப்பின் ஆணையை சொக்கட்டான் காய்கள் கூட ஏற்றுக் கொள்கின்றன!)

ஸிர்கப், காய்களை உருட்டப் போகும் சமயத்தில், ரஸாலு

அவனிடம் சொன்னான், "மன்னா, உன் ஆட்டம் ஆரம்பமே அபசகுனத்தோடு இருக்கு. எல்லாக் காரியங்களையும், பரமாத் மாவை நினைச்சு ஆரம்பிக்கணும்," என்று கூறிப் பாடினான்:

தீ$_3$வே தே$_3$ நிம்யே சானண் செளபட்$_3$
ராஜே கே$_2$ட$_3$தோ$_3$
ஆ நீ மாதா ஹோணியே, தூ மேரே வல்ல ஹோ
ஹூக்ம் ஜோ சச்சே ஸாஹப்$_3$ தா$_3$, நரதா$_3$ மன்ன ஸோ

சொக்கட்டான் விளையாடும்போது, ராஜா ஸிர்கப் ஒரு பக்கம் தனது ராணியையும், மறுபக்கம் மகளையும் உட்கார வைத்துக் கொள்வது வழக்கம். அந்த ஸ்திரீகள் தங்களது உடலழகினால் எதிரே விளையாட அமர்ந்திருப்பவனின் கவனத்தைத் தங்கள் பால் இழுத்துக் கொள்வது வழக்கம். விளையாடுபவன், ராணியின் பக்கம் பார்த்தால், அரசகுமாரி காய்களை அசைத்து விடுவாள். அரச குமாரியைப் பார்த்தால் ராணி காய்களை அசைத்து விடுவாள். ஆனால் ரஸாலுவிடம் யோகியைப் போன்ற ஏகாக்கிர சித்தம் இருந்தது. உடல் அழகிலோ அவன் ராணி, ராஜகுமாரி இருவரையும் விட பல மடங்கு உயர்ந்தவனாக இருந்தான். விளையாட்டு ஆரம்பமான பின், ஏமாற்று வேலை பயனளிக்கவில்லை. சமாதியில் அமர்ந்திருப்பவனைப் போல, ரஸாலு அசையாமல் உட்கார்ந் திருந்தான்.

ராஜா ஸிர்கப் முதல் ஆட்டத்தில் தோற்று விட்டான்.

இரண்டாவது ஆட்டம் ஆரம்பமாயிற்று. ராணியும் அரச குமாரியும் தங்களது தோல்வியை ஒப்புக் கொண்டு அங்கிருந்து எழுந்து விட்டனர். அவர்கள் இடத்தில் புதிர் போடுபவர்கள் வந்து உட்கார்ந்தனர். ரஸாலு விளையாடும் விதத்தை யோசிக்கும்போதெல்லாம் புதிர் போடுபவன் ஏதாவது ஒரு கடினமான புதிரைக் கூறுவான். முதல் புதிர் இது:

அட்$_2$ பத்தன் நெள பே$_3$டி$_3$யா, செளத$_3$ங் கு$_4$ம்மன் கே$_4$ர்,
ஜே தூ ராஜா ஜதீ ஸதீ தாபானீ கித்னே ஸேர்

ரஸாலு ஒரே சமயத்தில் விளையாடவும், புதிருக்குப் பதில் சொல்லவும் செய்தான்:

அட்$_2$ பத்தன் நெள பே$_3$டி$_3$யா, செளத$_3$ங் கும்யன் கே$_4$ர்

அம்பர் தாரே கி₃ன் தஸ்ஸீ, மை த₃ஸ்ஸா பானீ உதனே
ஸேர்
ஜின்னீ ஜங்கல் லக்டி, பானீ உத்னே ஸேர்

(எட்டு கரைகள், ஒன்பது படகுகள், பதினாலு சுழிகள் இருக்கு. நீ முதல்லே வானத்திலே இருக்கிற நட்சத்திரங்களை எண்ணிச் சொல்லு; அதே அளவு ஸேர் தண்ணீர் நதியிலே இருக்கு. காட்டிலே எத்தனை மரக் கட்டைகள் இருக்கோ, அதே அளவு ஸேர் தண்ணீர் நதியிலே இருக்கு.)

ஒரு புதிருக்குப் பிறகு இன்னொரு புதிர் தொடர்ச்சியாக வந்து கொண்டே இருந்தது. ரஸாலு, புதிரைவிடக் கடினமான பதில் அளித்தான். புதிர்கள் வீணாகப் போவதைக் கண்ட புதிர் போடுபவர்களுக்குத் தமது தலை தப்பித்தால் போதும் என்றாகி விட்டது. அங்கிருந்து நழுவுவதுதான் நமக்கு நல்லது என்று அவர்கள் உணர்ந்தனர். ஸிர்கப் இரண்டாவது ஆட்டத்திலும் தோற்றுவிட்டான்.

கடைசி ஆட்டம். ஸிர்கப்பிடம் இன்னும் ஒரு ஏமாற்று வேலை பாக்கி இருந்தது. ஆட்டம் ஆரம்பித்தவுடன் ஸிர்கப், தன்னிடமிருந்த பயிற்சி அளிக்கப்பட்ட எலிகளை வெளியே எடுத்தான். அவை சொக்கட்டான் மீது நடந்து, காய்களை ஆட்டிவிட்டன. ரஸாலுவின் ஆட்டம் பாதிக்கப்பட்டது. சரியான நேரத்தில், அரண்மனையில் நுழைவதற்கு முன், நல்ல மனிதன் ஒருவன் கூறிய யோசனை, ராஜா ரஸாலுவின் நினைவுக்கு வந்தது:

டூஹர் வே ராஜா போ₄லியா, ஸாடீ₃ இத்னீக₃ல்₄ ஸுன்
ஜா,
ஜதோ₃ டா₃டீ₄ ஆ ப₃னே, தேரீ பேஷ் நா ஜாவே கா,
தா₃ஹினா த₃ஸ்த் உடா₂யீகே அப்னீ ஜேப் சபா

ரஸாலு தனது வலது புறச் சட்டைப் பையில் கையை விட்டான். சட்டைப் பையிலிருந்து பூனை வெளியே வந்தது. எலிகள் தமது பொந்தில் சென்று நுழைந்து கொண்டன. காய்கள் மறுபடியும் ரஸாலுவுக்குச் சாதகமாக உருள ஆரம்பித்தன. ஸிர்கப் பீதியடைந்தவனாகக் கூறினான்:

டல்₄ வே பாஸே டா₄வே, இத்தே₂ பஸ்ந்தா லோக்
ஸிரா த₄டா தீ₃யா பா₃ஜீ வா, ஜேஹடீ₃ ஸிர்கப் கரே

ஸோஹோக்$_3$

ரஸாலு காய்களை உருட்டியவாறே கூறினான்:

டல்$_4$ வே பாஸே டா$_4$ல்வே, இத்தே$_2$ ப$_3$ஸந்தா லோக்,
ஸிரா த$_4$டா$_3$ தீ$_3$ஆ பா$_3$ஜீஆ, ஜிஹ்ட$_3$ரப்$_3$ கரே ஸோ
ஹோக்

(காய்களே, உருளுங்கள். இங்கே மக்கள் வாழ்கிறார்கள். தலை, உடம்பு இரண்டும் பணயம் வைக்கப்பட்டுள்ளன. பரமாத்மா என்ன நினைக்கிறாரோ, அதே நடக்கும்.)

ராஜா ஸிர்கப், தனது தலையைப் பணயம் வைத்து ஆடிய ஆட்டத்தையும் தோற்றுவிட்டான். அதே நேரத்தில், ஒரு ஆள் அங்கு வந்து, ஸிர்கப்புக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருப்பதை அறிவித்தான். கேடு விளைவித்த அந்தக் குழந்தையை உடனே கொன்று விடும்படி, ஸிர்கப் ஆணையிட்டான். ஆனால் ரஸாலு அதைத் தடுத்து, "தன் தலையையே தோற்றவன், மற்றவர்கள் தலையைப் பற்றி எப்படி ஆணையிட முடியும்? இந்தக் குழந்தையை நான், என்னுடன் அழைத்துப் போறேன்," என்றான். அந்தச் சமயத்தில் கூட திருமண பந்தத்தில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள அவன் விரும்பவில்லை. அன்று பிறந்துள்ள பெண், பருவம் அடையும் வரை அவன் சுதந்திர புருஷனாக வாழ்க்கையைக் கழிக்க முடியும். ரஸாலு, ஸிர்கப்பின் உயிரை மாய்க்க விரும்பவில்லை— ஆனால் ஒரு நிபந்தனை இட்டான்: அதாவது ஸிர்கப் அதற்குப் பிறகு சொக்கட்டான் விளையாடக் கூடாது என்று.

அரண்மனையில் இத்தனை நேரம் உட்கார்ந்த ரஸாலுவுக்குக் கால்கள் வலிப்பதுபோலத் தோன்றியது. அவன் மறுபடியும் திறந்த வெளியில் வந்து நின்று கொண்டான். சிறிது நேரத்தில் சிறைச் சாலை வழியாக அவன் சென்று கொண்டிருந்தபோது, கைதிகள் குரல் கொடுத்தனர்:

ஹோர் ராஜே முர்கா$_3$பியா, தூ ராஜா ஷாஹபா$_3$ஜ்,
ப$_3$ந்தீ$_3$வானா தே$_3$ப$_3$ந்த்$_3$ க$_2$லாஸ்கர், தேரோ
உம்ரத$_3$ராஜ்

(மற்ற ராஜாக்களெல்லாம் வான் கோழிகள். நீ சக்ரவர்த்தி.

கைதிகளை விடுதலை பண்ணிவிடு, உனக்கு ஆயுள் விருத்தியாகும்.)

ராஜா ரஸாலு, தன் கைகளால், சிறைச் சாலையின் கதவுகளைத் திறந்து விட்டான். ரஸாலுவுக்கு ஆசி கூறியவாறே, கைதிகள் வெளியே வந்தனர். ராஜா அங்கிருந்து கிளம்பி கருப்பை போல் உருவம் கொண்ட மலையை வந்தடைந்தான். அங்கு ஒரு அரண்மனையை நிர்மாணித்தான். அரண்மனைக்கு முன்பாக மாங்கன்றை நட்டான்: "இது மரமாகிப் பூக்க ஆரம்பிக்கும்போது, ராஜகுமாரி கோகலாவும், பூரணயௌவனம் அடைவாள். அப்போது நான் அவளை மணந்து கொள்வேன்."

ராஜா ரஸாலுவினால் வீட்டிலே சில காலம் கூட இருக்க இயலவில்லை. அவனுக்கு வேட்டையாடுவதைத் தவிர எதற்கும் சிறிது நேரம் கூடக் கிடைக்கவில்லை. எப்போதாவது சிறிதளவு நேரம் கிடைத்தால், வேறு ஒரு பெரிய திட்டத்தில் இறங்கி விடுவான். மாமரம் எப்போது பூக்க ஆரம்பித்தது, கோகலா எப்போது பருவம் அடைந்தாள், இவை பற்றி அவன் கவனம் செலுத்தவில்லை. அவன் யோகியாகவே வாழ்ந்தான். அவனுடைய அரண்மனையில் கோகலாவைத் தவிர வேறு எந்த ஒரு ராணியும் வந்து சேரவில்லை. பாவம், கோகலா தன் வயதை உடைய ஆண் அல்லது பெண்ணிடம் பேச மிகவும் ஆவலாக இருந்தாள். ராஜாவின் ஒவ்வொரு நரம்பிலும் அளவற்ற சக்தி நிரம்பி வழிந்தது. தனது சக்திக்கு முன்னால் கோகலாவின் யௌவனம், குழந்தைத் தனமானதாக அவனுக்குத் தோன்றியது. ஆக, ராஜாவுக்கும் ராணிக்கும் இடையில் அன்பு ஏற்பட இயலாது போயிற்று. இருவரும் ஒருபொழுதும் சேர்ந்து உட்காரவோ, பரஸ்பரம் பேசிக் கொள்ளவோ இல்லை. ஒருவர் மற்றவருக்கு அந்நியராக ஆகியிருந்தனர்.

ஒரு நாள் ராஜா ரஸாலு வேட்டையாடப் போயிருந்தான். அச்சமயம் வேறொரு அரசன், வேட்டையாடிய வண்ணம், ரஸாலுவின் அரண்மனைப் பக்கம் வந்தான். கோகலா, அரண்மனையின் மாடியில் நின்று கொண்டு, கீழே இருந்த தோட்டங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கீழே

புதியதொரு மனிதனைக் கண்ட அவள் கூறினாள்:

மஹலா ஹோட்$_2$ ஃபிரந்தியா, ஸாத்$_4$ ஃபிரே கே சோர்

(அரண்மனைக்குக் கீழே உலாவுகிறவரே, நீர் சாதுவா, திருடனா?)

கீழே நின்றிருந்த அரசன் பதில் கூறினான்:

சோரா மைலே கப்டே$_3$ ஸாதா$_4$ நவே நகோர்।

(திருடர்களின் ஆடை அழுக்கடைந்திருக்கும்; சாதுக்களின் உடையோ புத்தம் புதியதாக இருக்கும்.)

கீழே நின்றிருந்த அரசனின் பெயர் ஹோாடீ. கோகலாவின் அன்றலர்ந்த மலர் போன்ற யௌவனத்தைக் கண்டு மையல் கொண்டான். திடீரென்று அவனது வாயிலிருந்து வார்த்தைகள் வந்தன:

அல்லியா தா$_3$கா$_2$ பக்கியா, சோசோ பைன் அனார்

(திராட்சை பழுத்து விட்டது; மாதுளம் பழம் சாறு நிரம்பியதாக இருக்கிறது.)

அப்போது கூட, கோகலா, தனது நெறியில் திடமாக நின்றாள். அவள் சொன்னாள்:

ஜஸா கோஈ ந ஜம்மியா ஜோ ஆவே ராஜே தே தர்பார்

(ராஜாவின் தர்பாருக்கு வரக் கூடியவன் யாரும் பிறக்கவில்லை.)

ராஜா ஹோாடி அரண்மனைக்குள் செல்ல விரும்பினான். அரண்மனை வாயிலில், மலைபோன்றதொரு பாறை இருந்தது. அதை நகர்த்திவிட்டு ரஸாலு உள்ளே போவது வழக்கம். ஹோாடி மிகவும் கஷ்டப்பட்டு முயற்சி செய்த பின்னரும், அவனால் அந்தப் பாறையை அசைக்கக் கூட முடியவில்லை. பறவையாக உருவெடுத்து, கோகலாவின் அருகில் போக அவனுக்கு ஆசைதான். ஆனால், அப்படிச் செய்வது அவனால் இயலாத காரியமாக இருந்தது. கீழே ஒரு கயிற்று ஏணியைப் போடும்படி அவன் கோகலாவை வேண்டினான். கடைசியில் அவளுக்கும் இரக்கம் வந்தது. தனியே இருந்து அலுத்துப் போய், அவளும் யாருடனாவது பேசுவதற்குத் துடித்துக் கொண்டிருந்தாள். அவள் கயிற்று ஏணியை எறியவே, ஹோாடியும் மேலே வந்தான். அதன் பிறகு கோகலாவால், பாவம், தனது நெறியில் திடமாக நிற்க

இயலவில்லை. ரஸாலு, காடுகளில் வேட்டையாடிக் கொண்டிருந்தான்; அதே சமயம் கோகலா அரண்மனையில் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

அடுத்த நாள் ஹோடி கிளம்பும்போது, கோகலா அழ ஆரம்பித்தாள். அவளுடைய கண்ணீரைத் துடைத்தபோது, கோகலாவின் கண்மை, ஹோடியின் கையில் ஒட்டிக் கொண்டது. ஹோடி வாக்குறுதி அளித்தான்: "நான் சீக்கிரமே திரும்பி வந்து விடுவேன்.எவ்வளவு நேரம் உன்னிடமிருந்து தூரத்தில் இருக்கேனோ, அதுவரை இந்த மையைக் கையிலிருந்து அகற்ற மாட்டேன்; இந்தக் கையாலே சாப்பிடமாட்டேன், எதுவும் குடிக்க மாட்டேன்.... எந்தக் காரியமும் செய்யமாட்டேன்."

வீடு திரும்பிய ராஜா ரஸாலு, ராணியின் போக்கு புதிய விதமாக இருக்கக் கண்டான். அவளுடைய பின்னல் பிரிந்து, மாலை பிய்ந்து இருந்தது. கட்டில் தொய்ந்து போய் இருந்தது. ரஸாலு கேட்டான்:

கின்ன மேரா கூ$_2$ஹறா கே$_3$டி$_3$யா, ரானீ கிஸ்னே அன்னீ நிஸார்,
க$_4$டியோ பானீ கிஸ் ல்யா, கிஸ் ஸுட்டே க$_2$ந்தா$_4$ர்,
கௌன் மஹலா விச் தெ$_3$ளடி$_3$யா, மஹலீ பயீ த$_4$ஸ்கார்,
ஸேஜ் மேரீ கௌன் லேடியா, டில்லீ பயீ நிவார்

(ராணீ, யார் என்னுடைய கிணற்றில் தண்ணீர் இறைத்தது? யார் என்னுடைய தியாகத்தைப் பயனற்றதாகச் செய்தது? பானையிலிருந்து யார் தண்ணீரை நிரப்பினார்கள்? அதில் எச்சில் உமிழ்ந்தது யார்? அரண்மனையில் யாரோ ஓடிய சத்தம் கேட்டதே, அது யார்? என்னுடைய கட்டிலில் யார் படுத்தது; நாடா தொய்ந்து போய்க் கிடக்கிறதே?)

ஓரிரண்டு நாட்களிலேயே ராணி மிகுந்த சாமர்த்தியசாலி ஆகிவிட்டாள். அவள் ஆச்சரியப்படும் வகையில் சாமர்த்திய மாகப் பதில் கூறினாள்:

மைனே ஹீ குஆ சலாயா, மைனே ஹீ நிஸார் தோடி$_3$
க$_4$டே மே ஸே பானீ மை நேஹீ லியா, மைநே ஹீ தூ$_2$க் டா$_3$லே
மைனா நே மேடி$_4$'யா கோ$_2$லீ ஹை, தோதே நே ஹார்

தோ$_3$டா ஹை,
மை பா$_3$வலீ ஹோகர் பா$_4$கீ$_3$ தீ$_2$, ஜிஸ்ஸே மஹல் கா
ஃபர்ஷ் த$_4$ஸ் க$_3$யா
ஷுமல் கீ ஸதாச மை ஹி ஸேஜ் பர் லேடீ தீ$_2$
ஜிஸ்ஸே நிவார் டீ$_4$லீ பட் க$_3$யீ

(நான்தான் கிணற்றை இறைத்தேன்; —— பானையிலிருந்து தண்ணீரை நான்தான் எடுத்தேன்; நான்தான் எச்சிலும் உமிழ்ந்தேன்; மைனா என் பின்னலைப் பிரித்தது; கிளி மாலையைப் பிரித்தது; நான்தான் பைத்தியக்காரி போல ஓடினேன்; அதனால் தரையும் அமுங்கிப் போனது; வலியினால் அவஸ்தைப்பட்ட நான்தான் கட்டிலில் படுத்துக் கொண்டேன்; அதனால் நாடா தொய்ந்து போய்விட்டது)

ரஸாலு அச்சமயம் சும்மா இருந்து விட்டான்; ஆனால் அவன் மனத்தில் சந்தேகம் முளைவிட ஆரம்பித்து விட்டது. அன்று அவனுக்குத் தன் ராணி தன் பிடியிலிருந்து விலகி வெளியே போவதுபோலத் தோன்றியது. அவளுடைய வாலிபப் பருவத்தில் அவளை ஒரு அசாதாரணமான நெருப்பு பற்றிக் கொண்டு விட்டிருந்தது. மறுநாள் காலை, பொழுது விடிந்த உடனேயே, ரஸாலு வேட்டையாடக் கிளம்பி விட்டான். ஆனால் அன்று அவன் மனது, ஒருமுனைப்படவில்லை. குறி நேரே செல்லவில்லை. அவனுடைய காலணியில் கல் மறைந்து இருப்பது போலவும், கண்ணால் காண முடியாத எதிரி ஒருவன் அவனுக்குள் வந்து அமர்ந்து விட்டது போலவும் அவன் உணர்ந்தான். அன்று பகலிலேயே வீட்டை நோக்கித் திரும்பினான். சாயங்காலம் அரண்மனையின் மாடியிலிருந்து ஒரு மனிதன் கயிற்று ஏணி வழியாக இறங்குவதையும், கோகலா அவனுக்கு மேலே நின்று கொண்டு விடை கொடுப்பதையும் ரஸாலு கண்டான். மிகுந்த கோபம் அடைந்தாலும், தன்னை நிதானப் படுத்திக் கொண்டு, அவனைப் போருக்கு அழைத்தான். ஹோடியும், ரஸாலுவும் ஒருவரை ஒருவர் நோக்கி நின்றனர். ரஸாலு சொன்னான்: ''நீயே, என்னைத் தாக்க ஆரம்பி.'' ஹோடி ஒரு அம்பு விட்டான். ஆனால் அப்போதுதான் இன்பம் துய்த்துவிட்டு வந்திருந்தபடியால், அவனது அம்பில் சக்தி

ஏதும் இருக்கவில்லை. ரஸாலு அதைப் பிடுங்கி தூர எறிந்தான். அவன் ஹோடியிடம் கூறினான்: "கொஞ்சம் மூச்சையடக்கி, இன்னொரு முறை முயற்சி செய்." ஹோடி மற்றொரு அம்பை எய்தான். ரஸாலு அதுவும் தன்னை அடையாமல் தடுத்துக் கொண்டான். அவனுடைய மன ஒருமுனைப்பாடு திடமாக இருந்தது. அவன் ஒரே தாக்குதலில் ஹோடியை இரண்டு துண்டுகளாக்கி வீழ்த்தினான்.

அரண்மனை மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்த கோகலாவிற்குத் தெரிந்து விட்டது இனித் தனது வாழ்வில் நிம்மதி இருக்காது என்று. அவள் அரண்மனையின் உச்சியிலிருந்து கீழே குதித்தாள். ரஸாலு, தன் கைகளால் ஹோடி, கோகலா இருவருடைய உடல்களையும் குதிரையின் மேல் வைத்துக் கட்டினான். பிறகு குதிரையைக் காட்டை நோக்கி விரட்டி விட்டான். குதிரையைப் பிரியும் சமயம் அதனிடம் கூறினான்: "நண்பனே, ஃபௌலாதி, நமக்குள் இருந்த சம்மந்தம் இத்துடன் முறிந்து விட்டது. இன்றிலிருந்து என் வாழ்க்கையை மாற்றிக் கொண்டாக வேண்டும்."

அச்சமயம் அவனுக்குத் தன்னுடைய பெற்றோர்களின் ஞாபகம் வந்தது. கூடவே, தான் ஸியால் கோட்டிலிருந்து திரும்பும்போது பிரிந்து வந்த பெண்ணின் ஞாபகமும் வந்தது. ஸியால்கோட் அவனை அழைப்பதை உணர்ந்தான். தனது வெற்று அரண்மனையின் பெரிய வாயில் முன் மலை போன்று கிடந்த பெரிய கல்லைத் தொலைவில் நகர்த்தினான். அதன் பிறகு திரும்பி தனது சொந்த ஊருக்குச் செல்ல ஆரம்பித்தான்.

# துல்லா பட்டி

**பல்வந்த் கார்கி**

அது, பாதுஷா அக்பரின் காலம். லாஹூர் நகருக்கு அருகில் ஸாந்தல்பார் வட்டத்தைச் சேர்ந்த முஸல்மான் ஆகியிருந்த பட்டி ராஜபுத்திர இனத்தவர்கள் அக்பருக்குக் கப்பம் கட்ட மறுத்து விட்டனர். கடையில் பொறுக்க முடியாமல் போய், முகலாய ராணுவத்தினர் படையெடுத்து வந்து ராஜபுத்திரர் களின் தலைவனான ஃபரீதையும் அவனுடைய தந்தையையும் கைது செய்தனர். அவர்களுடைய கைகளைச் சேர்த்துப் பின்புறம் கட்டி, அக்பருக்கு முன் கொண்டு வந்து நிறுத்தினர்.

ஃபரீதை அக்பர் கேள்விகள் கேட்டபோது, அவன் திமிராகப் பதில் சொன்னதுடன், முகலாயர்களைத் திட்டவும் செய்தான். பாதுஷா கோபத்தினால் கொதித்தெழுந்தார்: "இந்தப் புரட்சியாளர்களின் தலையை வெட்டி நகரின் முக்கிய வாசலில் தொங்க விடுங்கள்! இவர்களுடைய தோலை உரித்து, இவர்களுடைய உடற்கூடுகளில் வைக்கோலைத் திணியுங்கள்!" என்று உத்தரவிட்டார்.

தந்தை–மகன் இருவரும் கொலை செய்யப்பட்டனர், அச்சமயம், ஃபரீதின் மனைவி லத்தி, ஐந்து மாதக் கர்ப்பிணியாக இருந்தாள். நான்கு மாதங்களுக்குப் பிறகு ஒரு ஞாயிற்றுக் கிழமை அன்று அவளுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு துல்லா என்று பெயர் வைத்தனர்.

குழந்தை துல்லாவின் முகத்தில் ஒரு விசேஷமான பளபளப்பு இருந்தது. அகன்ற நெற்றி, மயக்கும் விழிகள். அதன் அழகையும் தேஜஸையும் கண்ட தாதி தயக்கத்துடன், "இவன் மிகப் பெரிய வீரனாக இருப்பான்;தன் தந்தையின் மறைவுக்குப் பழி வாங்குவான்," என்று சொன்னாள்.

குழந்தையின் தாயார் மகிழ்ச்சி அடைந்து, தங்க நாணயங்களினால் மகனுக்குத் திருஷ்டி சுற்றினாள். ஆனால் கூடவே பயத்தினால் அவளது இதயம் நடுங்கியது.

அதே நாளன்று அக்பர் சக்ரவர்த்தியின் வீட்டிலும் ஒரு குழந்தை பிறந்தது. ஷேகூ என்று பெயர் வைக்கப்பட்ட அந்தக் குழந்தைதான் பிற்காலத்தில் ஜஹாங்கீர் என்ற பெயரில் பெருமை பெற்று விளங்கினான். ஜோதிடர்கள் நட்சத்திரங் களைக் கணக்கிட்டு, மன்னனிடம் யோசனை கூறினர்: "மஹாராஜா! முதல்லே தான–தருமம் பண்ணுங்க; ஜனங் களுக்கு வாரிவாரிக் குடுங்க! அப்புறம், நம்ம ராஜ்யத்துக்குள்ளேயே இருக்கிற ஒரு பெண்மணியைத் தேடுங்க; அவளுக்கும் இதே நாளிலே ஆண் குழந்தை பிறந்திருக்கணும். அப்படிப்பட்ட தாயாரோட பாலைக்குடிச்சு நம்ம இளவரசர் வளர்ந்தார்னா, வீரனா, எப்போதும் ஜெயமே கிடைக்கறவரா இருப்பார் அவர்!"

சக்ரவர்த்தி அத்தகைய பெண்மணியைத் தேட ஏற்பாடு செய்தார். ஒரு முகம்மதிய ஸன்யாசி, அரச தர்பாரில் வந்து கூறினான்: "மன்னா! எந்த ஃபரீத் பட்டியை நீ கொலை பண்ணினியோ, அவனோட மனைவி லத்தி வாலிபமாகவும் பலசாலியாகவும் இருக்கா. ஆம்பளை மாதிரி தைரியம் அவளுக்கு. என்னிக்கு நம்ம இளவர்சர் பிறந்தாரோ, அதே ஞாயிற்றுக்கிழமைஅவளுக்கும் ஒரு மகன் பிறந்திருக்கான்!"

இதைக் கேட்ட மன்னர் பெரு மகிழ்ச்சி அடைந்தார். தனது அரண்மனைக்கு அந்த வீரத் தாயை வரச் செய்வதற்குப் பதிலாக, அவளிடம் ஷேகூவை அனுப்பி வைத்தார். இளவரசரை வளர்க்கும் பொறுப்பை அவளுக்கு அளித்து, அவளுக்கென ஒரு மாளிகையும் அமைத்துத் தந்தார். லத்தியின் பாலை, துல்லா, ஷேகூ இருவருமே குடித்து, சகோதரர்களைப் போல் வளர்ந்தனர். குஸ்திச் சண்டை போடுவது, வில் பயிற்சி, குதிரைச் சவாரி எல்லாவற்றிலும் இணைந்தே பங்கு கொண்டனர். ஆனால், எல்லா விளையாட்டுக்களிலும் துல்லா, ஷேகுவை எப்போதுமே மிஞ்சுபவனாக இருந்தான்.

இரு வாலிபர்களுக்கும் பன்னிரண்டு வயது நிரம்பியவுடன்,

அக்பர் அவர்களைத் தர்பாருக்கு அழைத்து வரச் செய்தார். மைதானத்தில் கொட்டகை அமைத்து, இரு பையன்களுக்கும் இடையே அம்பு எறியும் போட்டிக்கு ஏற்பாடு செய்தார். இந்தப் போட்டியைக் காண, நகரே திரண்டு வந்தது. குழப்பம் ஏதும் ஏற்படாமலிருக்கப் பயிற்சியளிப்பவர் ஒவ்வொரு இளைஞனுக்கும் வேறு வித வண்ணம் கொண்ட அம்புகளை அளித்தார். ஷேகூவின் குறிதவறி, இங்குமங்கும் அம்புகள் சென்றன. ஆனால், துல்லாவின் அம்புகள் நேராகச் சென்று இலக்கைத் துளைத்து நின்றன. பிறகு, குதிரைச் சவாரியிலும் வாள் போரிலும் கூட, துல்லாதான் ஒவ்வொரு முறையும் வெற்றி பெற்றான்.

சக்ரவர்த்தியின் முகத்தில் கவலைக்குறி படர்ந்தது. அவர் மனமொடிந்து போனார். லத்தியை விசாரணை செய்தார்: "உண்மையைச் சொல்லிவிடு; என் மகன் ஏன் தோல்வி அடையறான்? அவனுக்கு நீ பால் குடுத்தியா, இல்லையா? உண்மை பேசல்லேன்னா உன் உயிருக்கு ஆபத்துதான்!"

லத்தி கை கூப்பிக் கொண்டே பேசினாள்: "என் பிள்ளை மாதிரித்தான் இளவரசரையும் வளர்த்தேன். நான் பண்ணின துலே குத்தம் ஏதும் இருக்குன்னா, அது இதுதான்: என்னோட வலது மார்பாலே துல்லாவுக்கும், இடது மார்பாலே இளவரசருக்கும் பால் குடுத்ததுதான்!"

மன்னர் சிறிது நேரம் யோசித்த பின்னர் கூறினார்: "உன்னோட குத்தத்தை நான் மன்னிக்கிறேன்; ஏன்னா, என் மகனை நீ வளர்த்திருக்கே! உனக்குத் தங்க நாணயம் நிறையத் தரேன். போ; போய் துல்லாவை நல்லா வளர்த்து வா. அவனை நல்லா படிக்க வை. அவன் பெரியுவனானப்புறம் அவனைத் தர்பாருக்குக் கூப்பிட்டு, அவனுக்கு ஜாகீர் பரிசளிக்கறேன்!"

கிராமத்துக்குத் திரும்பிய லத்தி, துல்லாவை இஸ்லாமியச் சட்ட அதிகாரி(காஜி)யிடம் அழைத்துச் சென்றாள். அவருக்கு இனிப்புத் தின்பண்டங்கள் அளித்து, தனது மகனுக்கு இஸ்லாமியக் கல்வி அளித்து, அவனுக்கு நல்ல வழியில் செல்லும் வழியைக் காட்டுமாறு வேண்டிக் கொண்டாள்.

காஜியின் கடுமையான கல்வி முறையில் வெறுப்புற்ற

துல்லா அவரை அடித்து விட்டான். பிறகு தச்சன் ஒருவனிடம் சென்று, கவண் ஒன்று செய்யச் சொன்னான். அவனுடைய உடலில் துறுதுறுப்பு, பதட்டம், அலட்சிய மனோபாவம் எல்லாம் இருந்தன. கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு, அவர்களுக்குத் தலைவனானான். கிராமத்து ஸ்திரீகள் குளத்தில் நீர் எடுக்கச் செல்லும்போது, எல்லா இளைஞர்களும் சேர்ந்து அவர்களுடைய குடங்களின் மீது கவண் மூலம் கல்வீசி எறிந்து பெண்மணிகளின் பானைகளை உடைத்து வந்தனர். கிராமத்தில் துல்லாவும் அவனது தோழர்களும் புரிந்த விஷமங்களினால் பெண்மணிகள் மிகவும் வேதனை அடைந்தனர்.

ஒரு நாள் பாடகனின் மனைவி நந்தி, துல்லாவுக்குச் சவால் விட்டாள்: "அடே துல்லா! பொம்பளைங்களோட பானையை ஏன் உடைச்சுக்கிட்டுத் திரியறே? அவ்வளவு வீரனா நீ இருந்தா, உங்க அப்பா–தாத்தாவோட கொலைக்கு ஏன் பழி வாங்காமெ இருக்கே? போ, போயி அக்பர் பாதுஷாவோட மோதிப்பாரு. அவர்தான் உன்னோட அப்பா தலையை வெட்டி, ஊரோட முக்கிய வாசல்லே தொங்க விட்டார்!''

இதைக் கேட்ட துல்லாவின் நெஞ்சு கொதிக்க ஆரம்பித்தது. பெண்களின் உலகத்தை விலக்கி ஒதுக்கிய அவனது கை, தனது வாளின் மீது சென்றது. அரச குடும்பம் மீது அவனது ரத்தம் கொதித்தெழுந்தது. நேரே தனது தாயாரிடம் சென்று, தனது வாளை உருவி நின்றவாறே அவளிடம் கேட்டான்:

"உண்மையைச் சொல்லிரு–என் அப்பா எப்படி இறந்தார்? என் கிட்ட ஒருத்தர் சவால் விட்டிருக்காங்க!"

தாய் பயந்து போனாள். தனது மகனின் கொழுந்து விட்டெரியும் கண்களில், அவள் பழிவாங்கும் வெறியைக் கண்டாள். துல்லா மறுபடியும் பேசினான்: "நீ உண்மை பேசல்லே, நான் உன் தலையை வெட்டிருவேன். சொல்: எங்க அப்பா எப்படி இறந்தார்?"

விதவைத் தாய் அழுது கொண்டே எல்லா விவரங்களையும் கூறினாள். தனது மகனை அணைத்து, உச்சி மோந்தாள். "உன்னை நான் ரொம்பக் கஷ்டப்பட்டு

வளர்த்திருக்கேன்! பாதுஷாவோட மோதல் வச்சுக்காதே!''

துல்லாவின் முகம் கோபத்தினால் சிவந்தது: "நான் கோழை இல்லை. எங்கப்பாவோட கொலைக்குப் பழி வாங்குவேன். நீ எனக்கு அப்பாவோட அடையாளம் ஏதாவது கொடு!''

தாய், வீட்டின் பின்னே இருந்த சிறிய அறையைத் திறந்தாள். அவள் இதுவரை அந்த அறை இருப்பதை அவனிடமிருந்து மறைத்து வைத்திருந்தாள். உள்ளே சென்ற துல்லா, மூலையில் வைத்திருந்த ஈட்டியை எடுத்துக் கொண்டான். நெருப்பைப் போன்று பளபளத்த அந்த ஈட்டி அவன் தந்தையினுடையது. தன் மகன் அவசியம் பழிவாங்கப் போகிறான், என்பதைத் தாய் புரிந்து கொண்டாள். அவளுக்கு ஒரு புறம் பயம் இருந்தாலும், மறுபுறம் பெருமையினால் அவள் தலை நிமிர்ந்து நின்றாள். அங்கே வாட்களும், ஈட்டிகளும் வைக்கப்பட்டிருந்தன. ஒருபுறம் பெரியதொரு முரசு இருந்தது. தாய், பசும்பாலைக் கொண்டு வரச் செய்து, முரசின் மீது தெளித்தாள். துல்லா, முரசின் மீது ஒரு அடி வைத்தான். அதன் எதிரொலியில் வீடே அதிர்ந்தது. முரசின் ஒலி அந்தச் சுத்து கிராமம் மட்டுமல்லாமல் பன்னிரண்டு மைல் தூரம் வரை எதிரொலித்தது.

முரசின் ஒலி, கிளர்ந்தெழுந்த துல்லாவின் ஆண்மையின் ஒலியாகவும், கொந்தளிக்கும் ரத்த ஓட்டத்தின் ஒலியாகவும் இருந்தது. அது, அக்பருடைய அரண்மனையின் சுவர்களுடன் சென்று மோதியது. பதினாறு வருடங்களுக்குப் பிறகு ஸாந்தல்பாரில் முரசு ஒலித்துள்ள விஷயம் பாதுஷாவுக்குத் தெரிய வந்தது. முகலாய சாம்ராஜ்யத்திற்குள் இவ்விதம் கோபக் குரல் எழுப்ப வேண்டிய அவசியம் யாருக்கு ஏற்பட்டது, என்பதை ஆராய ஆரம்பித்தனர்.

ஐந்நூறு வாட்களையும் ஈட்டிகளையும் துல்லா, தனது தோழர்களிடையே வினியோகித்தான். முதலில், தனது தாய் வழிப்பாட்டன் குடும்பத்தினர் மீது தாக்குதல் நடத்தினான். துல்லாவுக்கு அவர்கள் மீது ஆத்திரம் ஏற்படக் காரணம், தனது தந்தை கொலை செய்யப்பட்ட பின்னர், அவனது மாமாக்கள், அவனது தாயின் உதவிக்கு வரவில்லை என்பதே.

கொள்ளயடித்த பொருள் எதையும் தன்னிடம் வைத்துக் கொள்ளப் போவதில்லை என்ற உறுதியுடன் தான், அவன் தாக்குதலில் இறங்கினான். தாய் வழிப் பாட்டனின் குடும்பத்தினரிடமிருந்து கொள்ளயடித்த கால்நடைகளை, துல்லா தனது கிராமத்தின் நாவிதர்கள், பிராமணர்கள் மற்றும் பாடகர்கள் ஆகியோரிடையே வினியோகித்தான்.

இதன் பின் துல்லா, பயமற்றவனாகி விட்டான். அந்தப் பிரதேசம் வழியாக வரும் கொள்ளைக்காரர்களுடன் மோதி, அவர்களுடைய பொருளையும் ஆயுதங்களையும் துல்லா பிடுங்கிக் கொண்டான். அவனுடைய வீரம், இளகிய மனம் ஆகியவை அவனது பெருமையை வெகு தூரம் பரவச் செய்தன. அந்தப் பிரதேசத்தில் இருந்த பெண்கள் அனைவரும் அவன் மீது மோகம் கொண்டனர்.

துல்லாவின் மனத்தில் ஒரு விசித்திரமான அமைதியின்மை கோபம் இரண்டும் குடி கொண்டிருந்தன. அவன் தாக்குதல்கள் நடத்தியதன் நோக்கம் திருடுவதல்ல; தனது பலத்தை மற்றவர்கள் ஒப்புக் கொள்ளும்படிச் செய்வதே ஆகும். கிளர்ச்சிக் கொடியை அவன் பறக்க விட்டதன் நோக்கம், முகலாய தர்பார் வேறு வழியின்றி அவனுடன் மோத வேண்டும் என்பதே.

அவனுக்குப் பரிசு அளிக்காமல் அந்தப் பிரதேசம் வழியாக எவரும் பயணம் செய்ய இயலாது போயிற்று. அவன் வியாபாரி அலியிடமிருந்து ஐந்நூறு குதிரைகளைக் கொள்ளையடித்தான்; தவிர மைதா வியாபாரியிடமிருந்து பொதி சுமக்கும் கோவேறு கழுதைகளைப் பிடுங்கிக் கொண்டான். அக்பரின் அரண்மனைக்கு, துல்லாவை பற்றிய புகார்கள் தினந்தோறும் அனுப்பப்பட்டன. சங்கடத்துக்கு உள்ளான அக்பர், தேர்ந்த துப்பறிபவன் ஒருவனை உண்மை நிலையை அறிந்து வர அனுப்பினார்.

துப்பறிபவன், ஜோதிடன் வேடம் பூண்டு துல்லாவின் கிராமத்தை அடைந்தான். துல்லா, பிராம்மணனுக்கு மரியாதை அளித்து வரவேற்றான். ஆனால் வந்தவன் உண்மையில் துப்பறிபவன் என்று அறிந்தவுடன் அவனுடைய தாடியையும், மீசையையும் பிடுங்கி விட்டு, அவனைத் திருப்பி

அனுப்பினான். துப்பறிபவன், எல்லா விவரங்களையும் பாதுஷாவிடம் கூறினான். அக்பருக்கு ஆத்திரம் பொங்கியது. துல்லாவுக்கு இவ்வளவு திமிரா என்று. யார் துல்லாவை உயிருடனோ, பிணமாகவோ தன் முன் கொண்டு வருகிறார்களோ, அவர்களுக்கு முத்துக்களும் வைரங்களும் பரிசாகத் தரப்படும் என்று அறிவித்தார்.

மிர்ஜா நிஜாமுத்தீன், சேனையுடன் துல்லாவின் கிராமத்தை நோக்கிக் கிளம்பினான். சிப்பாய்கள், சாந்தல்பார் கிராமத்தின் எல்லையில் முகாமிட்டனர். கிராமத்தில் பால் வியாபாரம் செய்யும் சுந்தரியும், மற்றக் கன்னிப் பெண்களைப் போல, துல்லா மீது உயிரையே வைத்திருந்தாள். அவள் மிகுந்த சாமர்த்திய சாலியாகவும் அழகியாகவும் இருந்தாள். பால் வியாபாரம் செய்யும் சாக்கில் அவள் சேனையின் முகாமிற்குள் நுழைந்து, மிர்ஜா நிஜாமுத்தீன், துல்லாவைச் "சரி செய்ய" வந்திருக்கும் ரகசியத்தை அறிந்து, துல்லாவிடம் அதைத் தெரிவித்தாள்.

விவரமறிந்த துல்லா, தனது தோழர்களைச் சேர்த்துக் கொண்டு போரைத் தொடங்கினான். முகலாயரின் சேனையுடன் மோத வேண்டாம், என்று அவனது தாய் வேண்டினாள். ஆனால், சுயமரியாதை கொண்ட துல்லா, சாந்தல்பார் கிராமத்து, பட்டி–ராஜபுத்திரர்கள் யார் முன்னும் தலைவணங்கமாட்டார்கள் என்பதை அக்பருக்குக் காட்டி விட விரும்பினான்.

போர் வெகு நாட்கள் நடந்தது; நிஜாமுத்தீனின் சேனை சோர்வடைய ஆரம்பித்தது. இதை அறிந்த அக்பர், பெரியதொரு சேனையுடன் ஷேகூவை அனுப்பி, துல்லாவின் தலையை வெட்டி எடுத்து வரும்படிக் கூறினார்.

ஷேகூவின் சைன்யம் திரண்டு வந்தது. சாந்தல்பாரில், முகலாயர்களின் முரசுகள் ஒலிக்க ஆரம்பித்தன. லத்தி பயத்தினால் நடுங்கினாள். அவள் ஷேகூவை வளர்த்தவள். ஒரு பக்கம் அவள் வயிற்றில் பிறந்த மகன்; மறுபக்கம் அவளது பாலைக் குடித்து வளர்ந்த ஷேகூ. இருவரிடமும் தன்மானம் மிகுந்த ராஜபுத்திரரின் அம்சம் இருந்தது. அது தான் ஒருவரை மற்றவருக்கு முன்பு பணிந்து போக

விடாமலும் தடுத்தது.

லத்தி கரிய நிற உடை அணிந்து, ஷேகூவிடம் தன் மகனுடைய உயிரை யாசிப்பதற்காகச் சென்றாள். அவளைக் கண்ட ஷேகூவின் மனம் இளகியது. துல்லா அப்போதாவது கிளர்ச்சியைக் கைவிட்டானானால், பாதுஷாவிடம் கூறி துல்லாவின் உயிரைக் காப்பாற்றுவதாகத் தாயிடம் உறுதி கூறினான் ஷேகூ.

லத்தி, துல்லாவிடம் சமாதானம் செய்து கொள்ளும் படி வேண்டினாள். ஆனால் அச்சமயம், துல்லா–ஷேகூ இருவருக்கும் இடையில் அவரவர் தந்தை வழி மூதாதையினரின் ரத்த வெள்ளம் குறுக்கே நின்றது. துல்லா, தனது தாயின் வேண்டுகோளை ஏற்கவில்லை. மாறாக, ஷேகூவிடம் அறைகூவினான்: "நீ அக்பரின் மகன் என்பதும், நான் ஃபரீதின் மகன் என்பதும் உண்மையானால், கோதாவில் இறங்கு; தனியே என்னோட மோத வா!" என்று.

சண்டை ஆரம்பித்தது. துல்லாவின் வாளுக்கு மின்னலைப் போன்ற சக்தி இருந்தது. ஷேகூவிடமும் முகலாய ரத்தத்தின் கொதிப்பு இருந்தது. வாழ்நாள் முழுதும் அடக்கி வைத்திருந்த ஆத்திரம் கிளர்ந்தெழுந்தது. இதற்கு முன் நூற்றுக் கணக்கான முறை ஷேகூ, விளையாட்டாக துல்லாவுடன் வாள் சண்டை செய்திருக்கிறான். அப்போதெல்லாம் துல்லா அவனை மிஞ்சியிருக்கிறான். அந்த வழக்கத்தை முறியடிப்பதற்காக ஷேகூ, மிகுந்த வேகமாக போரிட்டான். வாட்கள் பளபளத்தன; ரத்தமும்தான். ஆனால் ஷேகூ தோல்வி அடைவதைக் கண்ட மிர்ஜா நிஜாமுத்தீனும் அவனது சிப்பாய்களும் துல்லாவின் மீது பாய்ந்தனர். கடைசி அடி ஷேகூவினுடையதாக ஆயிற்று. அவனது வாள், துல்லாவின் நெஞ்சில் இறங்கியது. துல்லாவின் ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது.

சாந்தல்பாரின், சுய கௌரவம் மிக்க கிளர்ச்சிக்காரன் துல்லா, மரணத்தைத் தழுவினான்.

போரில் துல்லா தோற்றுவிட்டாலும் மக்களின் இதயத்தில் அவன் நிலையான இடம் பெற்றதால், அமரத்துவமும் பெற்று விட்டான். அவனுடைய தன்மானம் பற்றிய பாடல்கள்

துவங்கின. அவனது வீரம் பற்றிய கதைகள் எங்கும் பரவின. அந்த தினத்திலிருந்து அவனுடைய கிராமத்திற்கும் துல்லே வால் என்ற பெயர் ஏற்பட்டது.

# ஜீவுணா மௌட்

**தலீப் கௌர் டிவாணா**

"க₄ர் க₄ர் புத் ஜம்மதே₃
மௌட்₃ நா கிஸே ப₃ன் ஜாணா|' '

இதன் பொருள்: "ஒவ்வொரு வீட்டிலும்தான் ஆண் பிள்ளைகள் பிறக்கிறார்கள்; ஆனால் ஜீவுணா மௌட் மாதிரி யாரும் ஆகி விட முடியாது."

இது பண்டைய காலத்திய கதையும் அல்ல; கற்பனைக் கதையும் அல்ல. இருபதாம் நூற்றாண்டில் துவக்கத்தில் ஒரு நாள். கோடைக்காலம். உச்சி வெய்யில் தகித்துக் கொண்டிருந்தது.

ஸங்க்ரூர் ஜில்லா, மௌட் என்ற பெயர் கொண்ட கிராமத்தில், வெளியூர்க்காரன் ஒருவன், ஜமீந்தார் கட்க சிங்கின் வீட்டைத் தேடி அடைந்தான். வீடு என்னவோ, கட்க சிங்கின் வீடுதான். ஆனால், அப்போது வீட்டில் அவர் இல்லை. அவரது மகன் ஜீவுண் சிங் இருந்தான். முன்பின் அறியாத அந்த ஆள் ஸத் ஸ்ரீ அகால் என்று வணக்கம் சொல்லிக் கட்டிலில் அமர்ந்தான்.

"அந்தமானிலிருந்து வந்திருக்கேன்!—" என்றான் புதியவன்; ஜீவுண், வந்தவனுக்குப் பால் கொண்டு வந்தான், நிறையச் சர்க்கரை போட்டு.

"கிஷணா சொல்லியனுப்பியிருக்கான், உனக்கு. நீயும் அவனும் ஒரு தாய்ப் பிள்ளைங்கங்கறது உண்மையானா, டோகரை நீ உயிரோட விடக் கூடாதுங்குறான். டோகர் அவனை ஏமாத்தி போலீசிலே பிடிச்சுக் கொடுத்து, 'காலா பானி'க்கு (அந்தமானுக்கு) அனுப்பிச்சிருக்கான். அவனை நீ அவசியம் பழி வாங்கணுமாம்."

சகோதரன் அனுப்பிய செய்தியைக் கேட்ட ஜீவுண், புல்லினால் தரையைச் சுரண்டியவாறே மனத்துக்குள் திட்டமிட ஆரம்பித்தான்.

விருந்தாளி சொன்னான்: "உங்க அண்ணனை எல்லா விதத்திலும் ஏமாத்திட்டு, இந்தப் பய சௌக்கியமா இருக்கிறதாவது? தன் கூடப் பிறந்தவனைக் கெடுத்ததுக்குப் பழி வாங்கல்லேங்கற களங்கத்தை ஆயுசு பூறா நீ ஏன் சுமந்துகிட்டு இருக்கணும்?மனுஷனுக்கு மானம் இல்லேன்னா, அவன் நாலுகால் பிராணிக்குச் சமம். இந்த உலகத்திலேருந்து நாம எதை எடுத்துக்கிட்டுப் போகப்போறோம்? ஆனா ஒண்ணு: தப்பித் தவறி கூட வீட்டுப் பொம்பளைங்களுக்கு விஷயம் தெரிஞ்சுடக் கூடாது. பொம்பளைங்க அழுதழுதே நம்மைக் கோழையாக்கிருவாங்க......''

விருந்தாளி மேலே பேசினான். ''கிஷுணா ரொம்பக் கவலையுடன் உட்கார்ந்திருந்தான். அப்போ நான் அவன் கிட்டே சொன்னேன், முதல்லே உன்னோட சமாசாரத்திடம் சொல்லிட்டு அப்புறம் என் வீட்டுக்குப் போறேன்னு. என் கதையைத்தான் பாரேன்! இத்தனைக்கும் அவன் எனக்கு சொந்த சித்தப்பா; எங்க அப்பாவைக் கூட்டத்துக்கு நடுவிலே திட்டினான். பன்னண்டே மணி நேரத்திலே அதே கட்டிடத்திலே அவன் தலையைக் கொண்டு வந்து மாட்டினேன். "காலாபானி"லே இருபது வருஷம் கழிச்சிட்டு வந்திருக்கேன்; எனக்கென்ன குறைஞ்சு போயிருச்சு? ஆனா, ஒரு பய சொல்ல முடியாதே; அப்பனை ஒர்த்தன் திட்டினான்; பசங்க நீங்க, வீட்டுக்குள்ளே நிம்மதியாக உட்கார்ந்துகிட்டிருந்தீங்கன்னு?......"

விருந்தாளி சொல்லிக் கொண்டே போனான்.

அதே நாள் இரவு ஜீவுணா, வீட்டை விட்டு வெளியேறி, கொள்ளைக் கூட்டத்தினருடன் சேர்ந்து கொண்டான்.

அவனுடைய தாய், இதயமே வெடித்து விடுவது போல அழுதாள். தந்தை தலையில் கை வைத்து உட்கார்ந்து விட்டார். கிஷுனாவைப் பற்றிய துக்கத்தையே அவரால் இதுவரை மறக்க முடியவில்லை. "சிங்கத்தைப் போல பிள்ளை அவன். காலாபானிக்கு அவனை அனுப்பிச்சாச்சு; இனிமே

அவனைப் பார்க்கப்போறோமோ, இல்லையோ" என்கிற ஏக்கம் இருந்தாலும், இனிமேயாவது கொஞ்சம் நிம்மதியா இருப்போம், என்று எண்ணிக் கொண்டிருந்தார் அந்நாள் வரை.

கிஷனா, அப்போதெல்லாம் செய்து கொண்டிருந்த காரியங்கள் காரணமாக, போலீஸ்காரர்கள் அவரையும், ஜீவுணையும் எத்தனை முறை, தாணா (போலீஸ் ஸ்டேஷன்)வுக்கு அழைத்துச் சென்று உதைத்திருக்கிறார்கள்? கிஷனா எங்கே இருக்கிறான் என்று கேட்பார்கள். அவருக்கு எங்கே தெரிந்திருந்தது, அவன் இருந்த இடம்? அவர் எப்படிச் சொல்வார்?

குளத்துக்குப் பக்கத்திலே. சிறிய அறையிலே கண்ட கண்ட ஆள்களெல்லாம் கிஷனைத் தேடி வர ஆரம்பித்தபோதே அவர், அவனைக் கண்டித்தார். அப்போது அவன் அந்த இடத்தில்தான் பானைகளைப் பூமியில் புதைத்துச் சாராயம் தயார் செய்து கொண்டிருந்தான். கிஷனா, குடும்பத் தலைவனாக பெண்டு–பிள்ளைகளுக்கு அப்பனா லட்சணமா இருப்பதை விட்டுவிட்டு கூத்தாடிபோல, சொகுசாச் சுற்றிக் கொண்டிருந்தது. அவருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஒரு வேளை, அவருடைய தொந்தரவினாலேயே அவன் வீட்டை விட்டு வெளியேறி, டோகர், மற்றும் கடியாலைச் சேர்ந்த ஜைமலுடன் சேர்ந்து கொண்டு, அடிதடிச் சண்டைகளில் இறங்கினானோ என்னவோ?

கிராமத்தைச் சேர்ந்த வியாபாரி வீட்டுக் கல்யாணத் திலேயே, கிஷனும் அவனுடைய தோழர்களும் கொள்ளயடித்தபோது, அவருக்கு மிகுந்த துக்கமும், தலைகுனிவும் ஏற்பட்டது. கிராமத்து ஜனங்கள் அவரைப் பொது மன்றத்துக்கு வரச் சொல்லி, அவர் மகன் செய்த காரியம் சரியல்ல, என்று அவரிடம் கூறினர். வாசுதேவ் சர்தார், அந்த நிகழ்ச்சியைப் போலீசில் தெரிவித்து வர வேண்டும் என்ற கருத்தை அவரும் ஆமோதிக்கும்படி ஆயிற்று. அதே காரணமாகத்தான் மௌட் கிராமத்தில் போலீஸ் நிலையம் ஒன்றும் ஏற்பட்டது.

விஷயம் கிஷனுக்கு எட்டியவுடன், அவன் தனது

தோழர்களுடன் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். பொது மன்றத்தில் நின்று கொண்டு வாசுவைக் கண்டபடி திட்டினான்; துப்பாக்கியால் சுட்டான். போலீஸ் நிலையத்துச் சிப்பாய்கள் பயந்து போய் ஓடி விட்டனர். கிஷனாவும் அவனது தோழர்களும் வாசுதேவைக் கொலை செய்தனர்.

அரசு, கடுமையான நடவடிக்கை எடுத்தது. போலீஸார், கிஷனுடைய தந்தையையும் ஜீவுனையும் பிடித்துச் சென்று செம்மையாக உதைத்தனர். கிஷனைப் பிடித்து வருவோருக்கு இனாம் கிடைக்கும் என்று அறிவிக்கப்பட்டது. அவனுடைய வீட்டைப் பூட்டி, சீல் வைத்தனர்.

கிஷனா, தனது தோழன் ஜைமலிடம் சொன்னான்: "நீ என்னோட கூடப் பிறந்தவன் மாதிரி. போலீஸுக்கு வாய்க்கரிசி போட்டு, அவங்க என்னைத் தொந்தரவு பண்றதை நிறுத்தச் சொல்லு!" ஜைமல் சொன்னான்: "எங்கிட்டே ஏது பைசா?"

"நாம எத்தனை இடத்திலே கொள்ளயடிச்சிருக்கோம்; எத்தனை கல்யாணக் கோஷ்டிகள்லேருந்து பிடுங்கியிருக்கோம்! தீயோம் ஊரிலே எவ்வளவு நகை கிடைச்சது; சுனாம் கிராமத்து ஜைனர் வீட்டிலேருந்து எவ்வளவு சாமான் கிடைச்சுது; கடாம்லே சௌகார் வீட்டிலேருந்து ரொக்கம் வேறே ஏராளமாகக் கிடைச்சுதே! இது எல்லாத்திலியும் என்னோட பங்கைக் கூட நான் இதுவரை எடுத்துக்கலியே"— கிஷனா சொன்னான்.

"எங்கிட்ட எவ்வளவு இருந்ததோ, அவ்வளவும் தீர்ந்து போச்சு." ஜைமல் இப்படிச் சொன்ன பிறகு, கிஷனா வேறு ஏதும் பேசாமல், அங்கிருந்து சென்று விட்டான். ஆனால், ஜைமலின் துரோகம் அவனது மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது.

ஜைமலின் மனைவி, தனது கணவனிடம் மிகவும் சொல்லிப் பார்த்தாள், நம்பிக்கையுடன் உன்னிடம் கொடுத்து வைத்துள்ள பொருளை அபகரிப்பது, தவறான விஷயம் என்று. "கஷ்டம் வர்ற சமயத்துலே எல்லா மனுஷங்களும் சினேகிதங்களுக்காக உசிரையே கொடுப்பாங்க. ஆனா, நீ பேராசைக்காரனாயிட்டே. சினேகிதத் துரோகம் பண்ற

வனுக்கு இந்த லோகத்திலும், பரலோகத்திலும் கூட இடம் கிடைக்காது. நான் உன்னெக் கை எடுத்துக் கும்பிடறேன். கிஷனா உன் மேலே பகைமையும் வன்மமும் வைச்சுட்டான்னா, உன் உயிருக்கு ஆபத்து வந்துரும்'' என்றெல்லாம் கெஞ்சிப் பார்த்தாள் அவள்.

ஜைமல் சிறிதும் அசையவில்லை. "வாயை மூடுடீ; நான் இந்த மாதிரி தடிப்பயல்கள் ரொம்பப் பேரைப் பார்த்திருக்கேன்!" என்றான்.

சில நாட்களுக்குப் பிறகு, கிஷனா, ஜைமலிடம் வந்தான். "ஒரு கல்யாண கோஷ்டியைக் கொள்ளயடிக்கனும்; என்னோட கிளம்பு" என்றான். பேராசை பிடித்த ஜைமல், அவனுடன் கிளம்பி விட்டான். கிராமத்தின் எல்லையைத் தாண்டியவுடன் கிஷனா அவனிடம் சொன்னான்: "நீ எனக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ணியிருக்கே. ஆனாலும் உன்னை நான் ஏமாத்திக் கொல்லப் போறதில்லே. எனக்கு எதிரே வந்து சண்டை போடு; நான் உன்னைக் கொல்லறேன்."

ஜைமல் சுட்டான்; ஆனால் கிஷனா, தன்னைக் காத்துக் கொண்டு விட்டான். அடுத்து ஜைமலை நோக்கிச் சுட்ட கிஷனின் குறி, எதிரியின் நெஞ்சைக் கிழித்துக் கொண்டு சென்றது.

ஜைமலைக் கொன்ற பின், கிஷன், ஜைமலின் மனைவியிடம் தான் செய்த காரியத்தைத் தெரிவித்தான்.

டோகருக்கு இந்த விஷயம் தெரிந்தவுடன் அவன் சொன்னான்: "இது ரொம்பக் கெட்ட காரியம். எப்போ ஒரு தரம் ஒருத்தனை சினேகிதன்னு ஏத்துக்கறோமோ, அப்புறம் அவனுக்கு விரோதமாகப் போகக் கூடாது. இனிமே, கிஷன் மேலே நம்பிக்கை வைக்க முடியாது!"

சத்தர் மூலமாகச் செய்தி அனுப்பி, டோகர் கிஷனை வரச் செய்து அவனிடம் சொன்னான்: "நீ தப்பிக்கறதுக்கு என்ன வழிங்கறதை நாம யோசனை பண்ணுவோம்!" கிஷனுக்கு அவன் ரொம்பவும் மரியாதை காட்டினான். கிஷனுக்காக ஆடு வெட்டிச் சமைத்தான். சாராயம் குடிக்கத் தந்தான். கிஷன், வயிறு முட்டச் சாப்பிட்டுச் சாராயமும் குடித்த பின், தூங்கிப் போனான். உடனே, டோகர் வீட்டுக்கு வெளியே சென்று

பூட்டி விட்டு, நேரே பலாட் என்ற இடத்திலிருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று சொல்லி விட்டான். ஏகப்பட்ட போலீஸ்காரர்கள் வந்து வீட்டைச் சூழ்ந்து கொண்டனர். இந்த விதமாகத்தான் கிஷன் பிடிபட்டான்.

இங்கிலாந்து ராணிக்குத் தந்தி போயிற்று. கொள்ளைக் காரன் கிஷனாவைப் பிடித்தாயிற்று என்று. அவனுக்கு ஆயுள் தண்டனை அளித்து "காலாபானி"க்கு அனுப்பும்படி உத்தரவு வந்தது.

அதே கிஷன் அண்ணாதான் இப்போது, ஜீவுணாவுக்குத் தகவல் அனுப்பியிருக்கிறான். ஜீவுணின் மனத்தில் முன்னமே சந்தேகம் இருந்தது; இப்போது சந்தேகமில்லாமல், டோகர்தான் மித்ரத் துரோகம் செய்து கிஷனைப் பிடித்துக் கொடுத்தான் என்பது ஊர்ஜிதமாகிவிட்டது.

அன்று இரவே, தூங்கிக் கொண்டிருந்த வயோதிகத் தந்தையை விட்டுவிட்டு, தோளில் அரிவாள் ஏந்தியவனாக, கிராமத்தை விட்டுக் கிளம்பினான் ஜீவுண்.

ஜீவுணுக்குக் காலைப் பொழுது, காட்டில் விடிந்தது, அவனுக்கு எதிரே ஒரு ஆங்கிலேயன் வேட்டையாடிக் கொண்டிருந்தான். ஆங்கிலேயன் துப்பாக்கியை ஒருபுறம் வைத்து விட்டு நீர் அருந்தச் சென்றவுடன், ஜீவுண் குதித்தெழுந்து துப்பாக்கியை எடுத்துக் கொண்டான். அடுத்த வினாடி, அந்த ஆங்கிலேயனையே வேட்டையாடுவ தற்காகக் குறி வைத்தான். வெள்ளையன் கையெடுத்துக் கும்பிட்டான். கெஞ்சினான். அவன் உடல் எல்லாம் நடுங்கியது. ஜீவணுக்கு இரக்கம் பிறந்தது. "ஓடிப்போ, குரங்கே!" வெள்ளையன் குதிரைமீது ஏறி ஓட்டமாக மறைந்து விட்டான்.

கொள்ளைக் கூட்டத்தினர், ஜீவுணைத் திறந்த நெஞ்சத் துடன் வர வேற்றனர். தலையில் தூக்கி வைத்துக் கொண்ட னர். அதற்குப் பல காரணங்கள்; ஒன்று, அவன் கிஷனின் சகோதரன் என்பது; அடுத்தது அவனிடம் மிக உயர்ந்த துப்பாக்கி இருந்தது. மேலும் அவன் கட்டுமஸ்தான உடல் கொண்ட இளைஞன்; வேறு என்ன வேண்டும்.

ஜீவுண், அவர்களிடம் ஒரே நிபந்தனைதான் வைத்தான்.

தனது கிராமத்தின் மீது அவர்களுக்குக் கெட்ட எண்ணம் இருக்கக் கூடாது. தன் கிராமத்துப் பெண்மணிகளைச் சகோதரிகளாகவும் தாய்மார்களாகவும் பாவிக்க வேண்டும் என்பதுதான் அந்த நிபந்தனை. மற்றபடி, ஜீவுண் மற்ற நான்கு ஜில்லாக்களிலும், கொள்ளைக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு, ஒரு பூகம்பத்தையே விளைவித்து விட்டான். பல்வேறு இடங்களில் கொள்ளையடித்தனர்; சீமான்களைச் சூறையாடினர், கல்யாணக் கோஷ்டியினரை வழிமறித்தனர், தங்க வியாபாரிகளுக்குச் சர்வநாசம் ஏற்படுத்தினர். ஜீவுணா மௌட்டின் படையெடுப்புகள் பற்றிப் பல இடங்களிலிருந்தும் போலீஸுக்குப் புகார்கள் வந்தன. போலீஸ் அவனைப் பிடிக்க முயற்சி பலவும் செய்து பார்த்தது. ஆனால் அவன் பிடிபடுகிற வழியாக இல்லை. கடைசியில் அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு பரிசு உண்டு என்று அறிவிக்கப்பட்டது. அவன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அனைவரும் நடுங்கினர், ஆனால், அவனுடைய சொந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும், "ஜீவுணா, நீ நாங்க பெத்த பிள்ளை. உன் இஷ்டப்படி கிராமத்துக்கு வந்து போய்க்கோ. போலீஸ் வந்தா மாத்திரம் கண்ணிலே படாமே மறைஞ்சுக்கோ" என்று கூறி விட்டனர்.

கொள்ளை அடித்த பொருட்களையெல்லாம் அவன், கடியால் கிராமத்து வியாபாரி, காசிராமிடம் கொடுத்து வைத்திருந்தான். சில நாட்களுக்குப் பிறகு, காசிராமின் மனத்தில் நீசத்தனமான எண்ணம் தோன்றியது. ஒரு குறிப்பிட்ட தினத்தன்று, ஜீவுணா தன் வீட்டுக்கு வரப் போவதாக அவன் போலீஸாரிடம் சென்று அறிவித்து விட்டான்; போலீஸும் அங்கு போய்ச் சேர்ந்து விட்டது. ஜீவுணும் காசிராமின் வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். கிராமத்துக்கு வெளியே ஒரு கிழவி அவனைச் சந்தித்தாள்: "மகனே, ஜீவுணா, எந்தப் பய மேலே நீ நம்பிக்கை வைச்சிருக்கே தெரியுமா? ஒரு எட்டணாக் காசுக்காக உயிரையே விட்டுடுவானுங்களே இந்தப் பனியாப் (வியாபாரி) பசங்க! கிராமத்திலே போலீஸுல்ல வந்து உட்கார்ந்திருக்கு?"

அப்பொழுதென்னவோ ஜீவுணா திரும்பிச் சென்று விட்டான்; ஆனால் போலீஸ் கிளம்பிய பிறகு வந்து, காசிராமைச் செம்மையாக உதைத்தான். காசிராம் மிகவும் கெஞ்சிக் கதறி, கை-கால்களைப் பிடித்ததனால்தான், தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது.

ஒருநாள் லோங்காவால் வழியே ஜீவுண் சென்று கொண்டிருந்தான். அன்று திரிதியை திதியைக் கொண்டாடிக் கொண்டிருந்தனர், அக்கிராமத்தின் அருகே. அவர்களைச் சென்று தாக்கினான், ஜீவுண். தரையில் துணியை விரித்து, எல்லோரையும் அதில் தமது நகைகளைக் கழற்றிப் போடும்படி கூறினான். முரட்டு அதிகாரத்துக்கு முன் யார் பேச்சு எடுபடும்? ஒரு பெண் பேசினாள்: "வீரனே! என் மாமியார் வீட்டுக்காரங்க ரொம்பச் சண்டைக்காரங்க. எங்க அப்பன் வீட்டுக்கு விரட்டி, நகை பண்ணிப் போட்டுக்கிட்டுத் திரும்பி வரச் சொல்லுவாங்க! எங்க அப்பா, என் கலியாணத்தின் போதே நிலத்தை அடகு வச்சு, எப்படியோ காரியத்தை நடத்தினாரு. என்னை உன் கூடப் பிறந்தவ மாதிரி நினைச்சுக்கோ!"

ஜீவுணாவின் மனத்தில் என்ன தோன்றிற்றோ. எல்லாச் சகோதரிகளிடமும், பெண்மணிகளிடமும் தத்தம் நகைகளைத் திருப்பி எடுத்துக் கொள்ளும்படி சொன்னான். காலி விரிப்பை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

அடுத்த கிராமம் வழியாகச் சென்று கொண்டிருக்கும் போது, தனக்கு மிகவும் பசி எடுத்துக் கொண்டிருப்பதை உணர்ந்தான். நாற்புறமும் பார்த்தபோது ஒரு பெண் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு வயலை நோக்கிச் செல்வது தெரிந்தது. அருகில் சென்று கேட்டான்: "தங்கச்சீ, எனக்குச் சாப்பாடு போடுவியா?"

"வா, அண்ணே!" என்ற அப்பெண் தலையிலிருந்த மோர்ப் பாத்திரத்தைக் கீழே இறக்கினாள். துணியில் சுற்றி வைத்திருந்த ரொட்டியைப் பிரித்து, ரொட்டியுடன் இலையில் ஊறுகாயையும் வைத்தாள். மரத்தின் நிழலில் உட்கார்ந்து, ஜீவுணா மௌட்டுக்கு அவள் உணவிட்டாள்.

"நல்லாயிருக்கணும் தங்கச்சி" என்று கூறி எழுந்திருந்த

ஜீவுண் அவளுக்கு இருபத்தி ஐந்து ரூபாய் கொடுத்து விட்டுத் தன் வழியே சென்றான்.

சில நாட்களுக்குப் பிறகு அவன் தௌலேவால் கிராமத்துக்குச் சென்று, ஒருவனுடைய நல்ல குதிரையைத் திருடினான். குதிரையைப் பின்னேயிருந்து இழுத்ததனால் அதைக் கட்டியிருந்த முளைக் கட்டை கழன்று, ஜீவுணின் மூக்கில் சென்று தாக்கியது. மூக்கு புண்ணாகிப் பிறகு அங்கே அடையாளமும் ஏற்பட்டுவிட்டது.

குதிரையின் மீதேறி அவன் டோகரின் கிராமத்தை அடைந்தான். கிராமத்தின் எல்லையில் இருந்து கொண்டு டோகருக்குச் செய்தி அனுப்பினான்: "ஏமாத்து வித்தையினாலே எங்கண்ணனைப் பிடிச்சுக் கொடுத்தே, இல்லே? உங்க அப்பனுக்குப் பிள்ளையானா, இப்ப எனக்கு முன்னாலே வா. எங்கிட்டேயிருந்து தப்பிச்சு எங்கே போயிருவே?"

டோகரின் ரத்தம் ஆத்திரத்தினால் கொதித்தது. தனது துப்பாக்கியை நிரப்பிக் கொண்டான். தோட்டா நிறைந்த பெட்டியைத் தோளில் போட்டுக் கொண்டு, குதிரையின் சேணத்தை இறுக்கக் கட்டினான். "சாக வேண்டிய காலம் ஜீவுணுக்கு வந்து விட்டது. அதுதான் அவனை இங்கே கொண்டு வந்திருக்கு!"

டோகர் கிளம்பும் போது அவனுடைய மனைவி அவனைத் தடுத்தாள்: "ராத்திரி எனக்கு ரொம்பக் கெட்ட சொப்பங்களெல்லாம் வந்தது; நீ போகாதே. கிராமத்திலே நெருப்புப் பிடிச்சு, நடுவிலே நீ மாட்டிக்கிட்டு எரிந்து போற மாதிரி சொப்பனம். யாரோ என் சட்டையிலிருந்து சங்கிலியைக் கழட்டிட்ட மாதிரி வேறே!"

ஆனால் டோகர் இதற்கெல்லாம் அயரவில்லை. "நீ வெறுமே கவலைப்படாம இரு! ஜீவுணா எனக்குச் சுண்டைக்காய் மாதிரி. கிஷனைக் காலாபானிக்கு அனுப்பிச்சவனாக்கும் நான். இவனையும் பாதாளத்துக்கு அனுப்பல்லேன்னா என் பேர் என்ன ஆகிறது?"

டோகர் வீட்டை விட்டுக் கிளம்பியபோது எதிரே ஒரு நாய், தனது காதுகளை வேகமாக உதறியது. சிறிது தூரம் சென்ற

பிறகு, பிணம் ஒன்று எதிர்ப்பட்டது. அவனுடைய நெற்றியில் கடுமையான வலி ஏற்பட்டது. ஆனால் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. அதிக தூரம் போவதற்குள் எதிரே ஒற்றைப் பிராம்மணன் வந்தான். வயலில் இடது புறம் கிளி பேசியது. அதன் பின்னர் ஒரு விதவை, தும்மிக் கொண்டிருந்தாள். சகுனங்கள் எல்லாமே கெட்டவையாக இருந்தன.

தன்னுடைய நிஜார்ப்பையிலிருந்து சாராயப் புட்டியை எடுத்து, வாயில் கவிழ்த்துக் கொண்டான். காலிப் புட்டியை வெகு தூரம் வீசி எறிந்தான். மீசையை முறுக்கியவாறே, கோதாவில் இறங்கினான்.

ஜீவுணா சொன்னான்: "வீரம் இருக்கறவன் யாரும் சூழ்ச்சியினாலே மத்தவனைக் கொலை பண்ண மாட்டான். சரி, சரி; முதல்லே நீயே ஆரம்பி."

டோகர் சுட்டான். ஜீவுணாவின் குதிரை கீழே விழுந்து விட்டது. குண்டு, ஜீவுணாவின் தலைக்குச் சிறிது மேலாகச் சென்று, வெளியே விழுந்தது. டோகர் மறுபடி சுட்டான். ஜீவுணா அதிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொண்ட மறுகணமே, குறிபார்த்துச் சுட்டு, டோகரைக் குதிரையிலிருந்து கீழே விழச் செய்தான்.

டோகரின் வீட்டில் எல்லோரும் அழுது புலம்ப ஆரம்பித்தனர். மௌட் கிராமத்திற்கும் ஒருவன் சென்று, ஜீவுணா, டோகரைக் கொன்று கிஷனாவை அவன் காட்டிக் கொடுத்ததற்குப் வழிவாங்கிவிட்டதைச் தெரிவித்தான். "கூடப் பிறந்தவன்னா இப்படித்தான் இருக்கணும்?" என்று பாராட்டினர் கிராம மக்கள்.

பலாடாவிலிருந்து போலீஸார் கிளம்பினர், ஜீவுணாவைப் பிடிக்க. ஆனால் அவ்வளவு எளிதில் அவன் அவர்களிடம் பிடிபடுவதாக இல்லை.

டோகரைக் கொன்ற பிறகு ஒரு நாள் ஜீவுணா, இரவு நேரத்தில் தன் வீட்டுக்குச் சென்று தன் தந்தையை வணங்கினான்.

அவனது அப்பா சொன்னார்: "ஏண்டா இப்படி வயசு காலத்திலே என்னோட மானத்தை வாங்கறே! இப்படி

யெல்லாம் நடக்கறதைவிட, நீ பிறக்காமயே இருந்திருந்தா, நல்லாயிருக்கும். பிள்ளையில்லாதவனாக இருக்கிறதே தேவலை. பொழுது விடிஞ்சா, போலீஸுங்க வந்து அட்டகாசம் பண்றாங்க. பொம்பளைங்க வெளியே கிளம்பறதே கஷ்டமாப் போச்சு!"

"ஏனப்பா கோவிச்சுக்கறே? நான் என் காரியத்தை முடிச்சுட்டேன். வேணுண்ணா, போலீஸ் ஸ்டேஷன்லே போய்ச் சரணடைஞ்சுடுறேன்!''

''தாணாவுக்கா?— வேண்டாம்ப்பா; அங்கே உன் ரத்தத்தைக் குடிக்கறதுக்கு எல்லாரும் தயாரா இருக்காங்க. உன்னைச் சுட்டுப்பிடுவாங்க. உன்னை எப்படியாவது பிடிக்கறவங்களுக்கு ஐந்நூறு ரூபாய் இனாம்னு சொல்லி யிருக்காங்க. நம்ம கிராமத்து ஜனங்க நல்லவங்க. இல்லேன்னா, என்னிக்கோ உன்னைப் பத்தித் தகவல் குடுத்திருப்பாங்க. நாளைப் பொழுது விடியறதுக்கு முன்னாலே இங்கேயிருந்து கிளம்பிரு. இரு; இப்பொ உனக்குச் சாப்பாடு கொண்டுவர்றேன். இந்தக் குடும்பத்து ஆம்பிளை இனிமே நீதான். நான் இன்னிக்கோ, நாளைக்கோ சாகப்போறவன்!''

சில நாட்களுக்குப் பிறகு, ஜீவுணாவும் அவனது தோழர்களும் ஒரு கல்யாண வீட்டாரைக் கொள்ளையடித் தனர். மணமகளின் எல்லா நகைகளையும் பிடுங்கிக் கொண்டனர். பிள்ளை வீட்டுக்காரர்களிடமிருந்த பணம் முழுவதையும் அபகரித்துக் கொண்டனர். ஜீவுணாவின் மூக்கில் இருந்த வடுவைக் கண்ட ஜாட் அவனை அடையாளம் கண்டு கொண்டான். கைகூப்பி அவனை வேண்டினான்: "நிலத்தையெல்லாம் அடகு வைச்சு, இந்தப் பையனுக்குக் கல்யாணம் பண்ணியிருக்கேன். நாலு பேர்கிட்டே பணம் வாங்கி, மருமகளுக்கு நகை, மோதிரம் போட்டிருக்கேன். அல்லா பேரைச் சொல்லி உன்னைக் கெஞ்சிக் கேக்கறேன். நீயும் ஒரு ஜாட் ஜாதியைச் சேர்ந்தவன்தான். உனக்குக் கொள்ளையடிக்கணும்னா, நம்மளையெல்லாம் சுரண்டிக்கிட்டு இருக்கிற பணக்காரப் பசங்களைக் கொள்ளையடிப்பா!"

இதைக் கேட்ட ஜீவுணா மௌட், நகைகள்-மோதிரம் எல்லாவற்றையும் திருப்பிக் கொடுத்து விட்டான். பிறகு தன்

சொந்தப் பணம் ஆயிரம் ரூபாயும் அந்த மனிதனுக்குக் கொடுத்து "ஸத் ஸ்ரீ அகால்" சொல்லி விட்டுக் கிளம்பினான். "நம்ம ஜீவுண் தம்பி நீடூழி வாழட்டும்" என்று வாழ்த்தினர் அந்த ஜாட் குடும்பத்தினர்.

ஒரு நாள், ஜீவுணுக்கு என்ன தோன்றிற்றோ, தெரிய வில்லை; நாபாவின் அரசனான ஹீரா சிங்கின் அரண் மனைக்குச் சென்று அரசனுடைய குதிரையை அபகரித்தான். துப்பாக்கியைக் காட்டிக் :காவலனைப் பயமுறுத்திய அவன் திரும்பும்போது சொன்னான்: "மஹாராஜா கிட்டே சொல் லிரு, உன்னோட குதிரையை ஜீவுணா மௌட் எடுத்துட்டுப் போயிட்டான்னு!"

மக்கள் குழும்பினர், ஜீவுணா அரசனின் குதிரையை ஏன் திருடினான், என்பது புரியாமல். மிகப் பெரிய போலீஸ் படையை ராஜா, ஜீவுணாவைப் பிடிக்க அனுப்பினான். கடைசியில், ஒரு இடத்தில் தூங்கிக் கொண்டிருந்த ஜீவுணை முற்றுகையிட்டுப் பிடித்துக் கொண்டனர். அப்போது அவன் கூறிய பதிலைக் கவி கூறுகிறார்:

"ஹஸ் கே ஜீவுணா ஆக்$_2$தா$_3$ கோ$_4$டா$_3$ படீ$_3$ கமால்,
ப$_3$க்கீ ஸாம்ப்$_4$ லவோ ஆபதீ$_3$ மை தேகீ$_2$ ஸீ சால்

(அர்த்தம்: "ஜீவுணா சிரித்தவாறே கூறினான்:உன் குதிரையை எடுத்துக்கோ. இது ரொம்ப ஒசந்த குதிரை. நான் இதோட ஒட்டத்தைத்தான் பாத்துக்கிட்டு இருந்தேன்.")

அடுத்த நாள் அரசன், ஜீவுணாவைச் சந்திக்க ஜெயிலுக்கு வந்து, அவனைக் குசலம் விசாரித்தான். ஜீவுணா சொன்னான்: "கைதிகளுக்கு இரும்பாலான கூண்டுகளுக்கு ஏற்பாடு பண்ணுங்க, மஹாராஜா! இங்கேயிருந்து அவங்க தப்பி ஒடிட முடியுமே!" அரசன் சிரித்தவாறே பதில் சொன்னான்: "அப்படியா? தப்பி ஓடிக் காட்டு, பார்க்கலாம்!" ராஜா நினைத்தான், இவ்வளவு கடுமையான காவல், கூர்மையான கம்பிகள் இருக்கிற கதவுகள் இருக்கும்போது, உயரமான சுவர்களையும் தாண்டி, யார் தப்பி ஓட முடியும்?

ஆனால் அதே நாள் இரவு, ஜீவுணா ஜெயிலிருந்து தப்பி ஓடிவிட்டான்.

ஜீவுணா மௌட்டின் பெயரைச் சொல்லிப் பலர், பல்வேறு

இடங்களில் கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். போலீஸாரும் பீதியடைந்து விட்டதனால், சரியான நேரத்தில் குறிப்பிட்ட இடங்களுக்குப் போய்ச் சேர முடியவில்லை.

ஒரு நாள் பிராம்மணன் ஒருவன், தனது மகளை அவளது கணவன் வீட்டிலிருந்து அழைத்து வந்து கொண்டிருந்தான். காட்டில் கொள்ளைக்காரர்கள் அவளைச் சூழ்ந்து கொண்டனர். அறுபது வயது பிராம்மணனின் விண்ணப்பங்களுக்கு கொள்ளைக்காரர்கள் செவி சாய்க்கப் போவதில்லை என்பதை உணர்ந்த அவன் மகள் பீதியுற்று அலறினாள். தெய்வாதீனமாக, அவ்வழியே சென்று கொண்டிருந்த ஜீவுணா மௌட், அங்கு வந்து கொள்ளைக்காரர்களை முற்றுகையிட்டான்.

"நீ யார், எங்கள் காரியத்தில் குறுக்கிட?"

"நான் உங்க அப்பன் ஜீவுணா மௌட்டாக்கும்" என்று கர்ஜித்தான், ஜீவுண்.

கொள்ளைக்காரர்கள் நடுநடுங்கியவாறே, ஜீவுணின் கால்களில் விழுந்தனர். அவர்களை அடித்து விரட்டிய பின்னர், ஜீவுண், பிராமணனையும் அவனது மகளையும் அவர்களது இருப்பிடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்த்தான். அந்தணன் அவனுக்கு ஆயிரமாயிரம் ஆசிகள் கூறி, அவனை பிராம்மணர்களையும், பசுக்களையும் ரட்சிப்பவன் என்று கூறி, அவன் புகழை, எல்லா இடங்களிலும் பாட ஆரம்பித்தான். அந்தக் காலத்துக் கவிகளும் பாடியிருக்கின்றனர்:

"ஜீவுணா மௌட்$_3$ ஸாத்$_4$ க$_3$உ க$_3$ரீப்$_3$ தீ$_3$ கரே ஸேவா,
க$_2$ப்$_3$ பீ$_3$ கா$_2$ணா தீ$_3$ அலக்$_2$ முகாஊந்தா$_3$ ஜீ
ஜேடே$_3$பா$_3$த்ஷா தே$_3$ க$_3$ர் கரே சோரீ,
பர்சா சா$_2$ப் கே பஹலா லகா$_3$வந்தா$_3$ ஜீ
ஷீஹனீ மா நே ஜம்மேயா ஷேர் ஜீவுணா,
நஹீ லுக் கே வக்த் லங்கா$_3$வதா$_3$ ஜீ

(அர்த்தம்: ஜீவுணா மௌட், சாதுக்கள், பசுக்கள் மற்றும் ஏழைகளுக்குச் சேவை செய்கிறான். பெரிய பெரிய முரடர்களுடைய கர்வத்தைப் பங்கம் செய்கிறான். பெரிய பெரிய வீட்டில் திருடுவதற்கு முன்னால், அவர்களுடைய

அரண்மனையில் நோட்டீஸ் ஒட்டிவிட்டுப் பிறகே திருடுகிறான். சிங்கம் போன்ற அவனது தாய், சிங்கக் குட்டி ஜீவுணாவைப் பெற்றெடுத்திருக்கிறாள். அந்தச் சிங்கக் குட்டி ஒளிந்திருந்தே தனது வாழ்நாளைக் கழிப்பதில்லை.)

"நைனாதேவித் தாயார் என்னை எப்போதும் காப் பாத்திக்கிட்டு வர்றா; அவளைத் தரிசனம் செய்யப் போகணும்" என்ற எண்ணம், ஜீவுணா மௌட்டின் மனத்தில் ஒரு நாள் தோன்றியது. எல்லா அரசர்களுக்கும் செய்தி அனுப்பினான் அவன்: "நைனாதேவியின் கோவிலுக்கு நான் போகப் போறேன். எந்தத் தேவியோட உதவி யினாலே, என்னாலே சேனைகளையெல்லாம் அவ மானப்படுத்த முடிஞ்சதோ, அவளுக்கு தங்கத்தினாலே குடை சாத்தப் போறேன். உங்க பலத்தையெல்லாம் சேர்த்துகிட்டு, என்னைப் பிடிக்க வாங்க; சாவுக்குப் பயப்படப் போறதில்லே, நான்!"

நைனாதேவியைத் தரிசிக்க கிளம்பிய ஜீவுணா, படியாலா நகரத்தை அடைந்தவுடன், போலீஸ் உடை அணிந்து, ஹவில்தாராக மாறிவிட்டான். தவிர அவன் கோட்டையின் சுவற்றில் நோட்டீஸ் ஒட்டி வைத்தான்; "ஜீவுணா, கோர்ட் பஜாரில் சுற்றிக் கொண்டிருக்கிறான்; யாரால் முடியுமோ, அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்று. மாலை ஏழு மணிக்கு, அவன் ஸ்டேஷனில் நைனாதேவிக்குச் செல்ல வண்டியேறினான்.

போலீஸும் கூடவே சென்றது. வண்டி முழுதும் தேடியது. ஆனால், அவர்களால் ஜீவுணா மௌட்டை எங்கும் கண்டுபிடிக்க இயலவில்லை.

வண்டியிலிருது இறங்கிய ஜீவுணா, முதலில் சீக்கியர்களின் பத்தாவது குருவுக்கு நூற்று இருபத்து ஐந்து ரூபாய் காணிக்கை செலுத்துவதற்காக, ஆனந்தபூர் குருத்வாராவுக்குச் சென்றான். ஹிந்து மதத்தைக் காப்பாற்றுவதற்காகத தனது நான்கு குழந்தைகளைப் பலி கொடுத்தவர், அந்தப் பத்தாவது குரு.

பிறகு அவன் நைனா தேவியின் கோயிலை அடைந்தான், நான்கு புறமும் போலீஸ், கோயிலைச் சுற்றிக் காத்திருந்தது. ஜீவுண், கோயிலில் தேவிக்குத் தங்கக் குடை சமர்ப்பித்தான்.

தேவியை நமஸ்கரித்தான். தேவி அவன் முன் பிரத்தியட்ச மாகி, பிறப்பு-இறப்புகளிலிருந்து அவனுக்கு முக்தி அளித் தாள்.

போலீஸார் தங்களது பிடியை இறுக்கினர். மூக்கில் இருந்த வடு அவனைக் காட்டிக் கொடுத்துவிட்டது. போலீஸார் அவனைப் பிடிக்க வந்த போது, சாது வேடத்திலிருந்த ஜீவுண், தன்னிடமிருந்த "சிம்டா"வினால் தாக்கி, நாலைந்து போலீஸ் காரர்களை அடித்து விரட்டினான். துப்பாக்கிகள் இயங்கின. ஆனால் ஜீவுணாவிடம் துப்பாக்கி ஏதும் இருக்கவில்லை.

கடைசியில் ஜீவுணா கைது செய்யப்பட்டான். தேவியை மறுபடி வணங்கிவிட்டு, போலீஸாருடன் சென்றான் அவன். ஃபிரோஸ்பூர் ஜெயிலுக்கு அவனைக் கொண்டு வந்து, நூற்றுக்கணக்கான போலீஸ் சிப்பாய்களின் கண்காணிப் பில் அவனை வைத்தனர்.

வெளிநாட்டிலிருந்த ராணிக்குத் தந்தி அனுப்பினர். கொள்ளைக்காரன் கிஷனாவின் தம்பி ஜீவுணாவைப் பிடித்துவிட்டோம் என்று. அவனைத் தூக்கிலிடுங்கள், என்று ராணியிடமிருந்து உத்தரவு வந்தது.

எட்டு தினங்களுக்குப் பிறகு ஜீவுணாவைத் தூக்கிலிடுவது, என்று நிச்சயம் செய்தனர். "உனக்கு எது சாப்பிடணும்; குடிக்கணும்னு தோணுதோ, அதை எல்லாம் சாப்பிட்டுக்கோ; யாரைப் பார்க்கணுமோ, பார்த்துக்கோ" என்றார், அதிகாரி.

"சாப்பிடறதுக்கும், குடிக்கிறதுக்கும் மட்டும் நாம இந்த உலகத்திலே பிறக்கலே! அண்ணன்-தம்பி ஒர்த்தருக்கு ஒர்த்தர், தோள் மாதிரி இருந்து உதவி பண்ணினா, உலகம் அவங்களை வாழ்த்தும். அது தவிர, யாருக்காவது என்னைப் பார்க்கணும்னு தோணினா, தானாகவே வருவாங்க!" என்று பதில் கூறிவிட்டான் ஜீவுண்.

ஜீவுணுக்கு ஒரு தங்கை இருந்தாள்-கோவிந்தி என்ற பெயரில். ஜீவுணை விடுவிக்க அவள் மிகவும் முயற்சி செய்தாள். 'கேஸ்' நடத்தி, கவர்னர்-ஜெனரல் வரை சென்று பார்த்தாள். ஆனால், அவளுடைய கோரிக்கைக்கு யாரும் செவி சாய்க்கவில்லை.

எட்டாவது நாளும் வந்தது.

எல்லோருக்கும் "ஸத் ஸ்ரீ அகால்" (வணக்கம்) சொல்லி விட்டு, தூக்கு மேடை ஏறினான் ஜீவுண்.

கோவிந்தி இதயம் வெடித்துவிடுவது போல அழுதாள்:

"வே தீயா தே$_3$ தி$_3$ன் கீனூ உடீ$_3$கா கி$_3$

கௌன் பே$_4$ஜூகா$_3$ சந்தா$_4$ரே வே மேரேயா வீரா

(அர்த்தம்: "தீஜ்" விழாவின் போது யாருக்காக இனிமேல் காத்திருக்கப் போகிறேன், என் அண்ணா! யார் எனக்கு "ஸந்தாரா" அனுப்பப் போகிறார்கள்?")

இந்த விதமாக உலகில் தன் பெயரை நிலை நாட்டினான், ஜீவுணா மௌட் உலகம் உள்ளளவும், மக்கள் அவனை நினைவில் கொண்டிருப்பர்.

பா$_3$வே க$_4$ர்–க$_4$ர் புத் ஜம்மதே$_3$

ஜீவுணா மௌட்$_3$ நா கிஸே ப$_3$ண்ஜாணா

"ஒவ்வொரு வீட்டிலும் தான் ஆண் பிள்ளைகள் பிறக்கிறார்கள்; ஆனால் ஜீவுணா மௌட் மாதிரி யாரும் ஆக முடியாது."

# கைமா மல்கீ

## குல்ஜார் சிங் சந்தூ

கட்முகலானா ஊரைச் சேர்ந்த பெண்கள் ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தனர். தீஜ் விழாக் கொண்டாடும் நாட்டியம் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. அரச மரத்து நிழலில், நாட்டியக் குழுவைச் சேர்ந்த பெண்கள், தமக்கே உரித்தான கூத்தின் தாளத்தில் பெண்களை ஆட்டிவிட்டுக் கொண்டிருந்தனர். முகலானாகட்டில் இருந்த இத்தகைய அரச மரத்து ஊஞ்சல்கள், ஸர்ஹறிப் பிரதேசத்தில் வெகு தூரம் வரை பிரசித்தி பெற்றிருந்தன. இந்த அரச மரம், எத்தனை தலைமுறைகளாகப் பெண்கள் ஊஞ்சல் ஆடுவதற்குப் பயன்பட்டு வந்திருக்கிறதோ தெரியவில்லை. அதன் கிளைகள் மிகவும் உறுதியாக இருந்தன. இலைகள் அடர்ந்து வளர்ந்திருந்தன. 'நம்பர்தார்' (கிராமத்து ஜமீன்தார்) பெண் மல்கி, ஆடும் குழுவுக்குத் தலைவியாக இருந்தாள். அவள் ஊஞ்சலில் ஏறி ஆடும்போது, அந்த வயோதிக அரச மரத்தின் வேர்கள் கூட ஆட்டம் கண்டுவிடும்.

மல்கியின் தகப்பன் ராய் முபாரக், கிராமத்தின் நம்பர்தாராக மட்டுமல்லாமல், அந்தப் பிரதேசத்தில் செல்வாக்கு பெற்ற பெரிய மனிதனாகவும் இருந்தான். அவனுக்கு இரு பிள்ளைகள் இருந்தனர். இருவரும் வலுவான மரத்தைப் போல பலசாலிகளாகவும், வேகமாக இயங்கும் கழிகளைப் போன்று வாலிப மிடுக்கு உடையவர்களாகவும் இருந்தனர். ராய் முபாரக்கின் தம்பி தரியா, தில்லியில் அக்பரின் தர்பாரில் ஸூபேதாராக இருந்தான். அரசாங்கத் தொடர்பு இருந்ததன் காரணமாக, இந்தக் குடும்பத்தின் பெருமை மேலும் அதிகரித்தது. ராய் முபாரக், தரியா மற்றும்

ராயின் புதல்வர்களான ராஹூன், மஹரூன் ஆகியோர் ஒருவர் மற்றொருவரை விட நான்கு அல்லது ஆறு வயதே சிறியவர்களாக இருந்தனர். சேர்ந்தாற் போல அமர்ந்திருக்கும் பொழுது அவர்களைப் பார்த்தால், எல்லோரும் சகோதரர்கள் போலவே காணப்பட்டனர். நால்வரும் அந்த ஊரின் தூண்களாகக் கருதப்பட்டனர். கையில் கழிகளை எடுத்துக் கொண்டு அவர்கள் நின்றுவிட்டால், காற்று கூட நின்று, தான் செல்லும் திசையை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்.

தாய்-தந்தையரின் செல்வாக்கு காரணமாக, மல்கியும் தைரியசாலியாக இருந்தாள். பூரண சந்திரனைப் போலப் பிரகாசித்தது அவள் முகம். எந்த ஒரு ஹீரை விடவோ, ஸஸ்ஸியை விடவோ, அழகில் குறைந்தவளாக இல்லை அவள். கிராமத்தில் மதிப்புக்குரியவளாகவும், அந்தப் பிரதேசத்திற்கே பெருமை அளிப்பவளாகவும் விளங்கினாள். பூரணமான இளமை கொண்டவளாக இருந்ததனால் அவளிடம் வாலிபப் பருவத்தின் ஆசைகள் இருந்தன; ஆனால் அலட்சிய மனோபாவம் இல்லை. வாலிபத்தின் கயிறு அறுந்து போகக் கூடும் என்றோ, அவள் ஆடிவந்த ஊஞ்சல் மாட்டப்பட்டிருந்த மரக்கிளைகள் அறுந்து அவள் தரையில் விழக்கூடும் என்றோ, அவள் கனவுகூட கண்டதில்லை.

மல்கியின் தாய் கோந்தலாவுக்கு, மகளின் இளமை, முள்ளைப் போலக் குத்துவதாக இருந்தது. வீட்டிலே வயது வந்த பெண்ணை வைத்துக் கொண்டு, எந்தத் தாய்தான் நிம்மதியாக உறங்க முடியும்? சின்ன விஷயம் ஏதேனும் நடந்து விட்டால் கூட, முகலானா குடும்பத்தினரின் மானம், மண்ணோடு மண்ணாகி விடும். மகளை அலங்கரித்து அவளது புருஷன் வீட்டுக்கு அனுப்பாத வரை தாய்க்கு நிம்மதி இல்லை. மல்கியின் தகப்பனோ, எதையும் காதில் போட்டுக் கொள்வதில்லை. அவனைப் பொறுத்தவரை, மல்கி, நேற்றுப் பிறந்த குழந்தை போலத்தான். கோந்தலா ஏன் பிரளயம் வந்து விட்டது போலக் குதிக்கிறாள்? மல்கி பெரியவளாகிவிட்டால் என்னவாம்? இளமை, யாருக்குத்தான் வருவதில்லை?

தொந்தரவு பொறுக்க முடியாமல், ராய் முபாரக் தன் தம்பி

தரியாவுக்குக் கடிதம் எழுதி அனுப்பினான். முபாரக்குக்கு எப்படி மல்கி மகளோ, அதே போலத்தான் தரியாவுக்கும். மகளின் கௌரவத்தில் எல்லோருக்கும் பங்கு இருக்கிறது. அரசாங்க தர்பாரில், நல்லதொரு பையனை, தரியா தேர்ந்தெடுக்க இயலும். முபாரக் கடிதம் எழுதியதால், வேறு பல்ன் இருந்ததோ, இல்லையோ, வீட்டுக்குள் இந்த விஷயம் பற்றிப் பேசுவதைக் கோந்தலா நிறுத்திக் கொண்டாள்.

கோந்தலாவுக்கு ஒருபுறம் சந்தோஷம்; மறுபுறம் துக்கம் வேறு. தனது மகளுக்கு வரன் தேடும் படலம் துவங்கிவிட்டது பற்றி மகிழ்ச்சி. ஆனால் அதேசமயம், தரியாவின் மூலம், சரியானதொரு வரன் கிடைத்து விட்டால், கோந்தலா வேறு பேச்சுப் பேச முடியாமல் போய்விடுமே, என்பது பற்றித் துக்கம் ஏற்பட்டது. காரணம் இதுதான்: அவளுக்கு ஒரு சகோதரி இருந்தாள். தக்த்ஹஜாரில் இருந்த துலாருக்கு அந்தச் சகோதரி லாலோ வாழ்க்கைப்பட்டிருந்தாள். லாலோவின் முதல் பிரசவத்தின்போது கோந்தலா, சகோதரி வீட்டிற்குச் சென்றிருந்தாள். லாலோவிற்குப் பிறந்த ஆண் குழந்தை சூரியனை விட அதிக ஒளியுடன் விளங்கியது. கோந்தலா, தன் சொந்தப் பிள்ளைகளின் மீது கொண்டதைவிட அதிகப் பாசத்தை, அந்தக் குழந்தை கைமா மீது கொண்டிருந்தாள். அந்தப் பையன் பொறுமைசாலியாகவும் அதிகம் சண்டை போடாத சுபாவம் கொண்டவனாகவும் இருந்தான். கோந்தலா, அவன் பெரியவனாகும்போது இரக்க சுபாவம் கொண்டவனாக இருப்பான் என்று அனுமானித்தாள். படபடப்புக் கொண்டவர்களின் குடும்பம் அவளை அலுப்படையச் செய்துவிட்டிருந்தது. அல்லாவின் கருணை இருந்தால் முகலானா குடும்பத்திற்கும், தக்த் ஹஜாரா குடும்பத்தினருக்கும் உள்ள உறவு பரம்பரை பரம்பரையாக நீடித்திருக்கும்' என்று கோந்தலா, லாலோவிடம் கூறினாள். கோந்தலாவின் ஆசை, தனக்கு ஒரு மகள் பிறப்பதன் மூலம் அந்தச் சம்பந்தம் ஏற்பட வேண்டும் என்பதுதான். இரண்டு பிள்ளைகளைப் பெற்றெடுத்த பிறகு, தனக்கு ஒரு பெண் குழந்தை வேண்டுமென்று அவள் பீர்களிடம் (இஸ்லாமிய மத குருக்கள்) வேண்டினாள். பீர்கள் எப்போதுமே எவருடைய

வேண்டுகோளையும் நிராகரிப்பதில்லை. தனக்கு மகள் பிறந்தால், அதைக் கைமாவுக்கு மணம் செய்து வைப்பதாக அவள் லாலோவுக்கு வாக்குக் கொடுத்திருந்தாள். கைமாவின் தந்தைக்கோ, கோந்தலாவின் கணவனுக்கோ அதில் ஆட்சேபணை என்ன இருக்க முடியும்?

ஆட்சேபணை ஒன்றும் இருக்க முடியாது என்றாலும், கோந்தலா தன் கணவனின் முரட்டு சுபாவத்தை அறிந்துதான் இருந்தாள். அவள் சொல்வதற்கு மாறாகவே நடப்பதில் அவனுக்கு என்ன சந்தோஷம் கிடைக்கிறதோ, தெரியவில்லை. அதனால், சரியான சந்தர்ப்பம் வரும்போதுதான், கணவனிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணி, அந்த விஷயத்தைத் தன் மனதுக்குள்ளேயே அமுக்கி வைத்திருந்தாள் அவள். தரியா எப்போது, தன்னால் வரன் கண்டுபிடிக்க முடியவில்லை என்று கூறுவான்; தான் தனது சிபார்சையும் எண்ணத்தையும் கணவனிடம் கூறலாம், என்று காத்திருந்தாள் கோந்தலா.

ஆனால், கடிதம் கிடைத்தவுடன் தரியா உடனேயே கிளம்பி, முகலானா வந்து சேர்ந்தான். மல்கிக்கு வரன் கிடைப்பதா கஷ்டம்? இந்தப் பொறுப்பை நிறைவேற்றுவதற்குத் துடித்துக் கொண்டிருப்பவனாக, தரியா காணப்பட்டான். தரியா வந்து சேர்ந்ததைக் கண்ட புருஷர்களுக்கு மகவும் மகிழ்ச்சி; பெண்களுக்கோ பதட்டம். என்ன நடக்கப் போகிறதென்று தெரியவில்லை. சமையல் செய்து கொண்டே, புருஷர்களின் பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்தாள் கோந்தலா. மல்கி, சுவரருகே அமர்ந்து கொண்டிருந்தாள்.

தரியா, ராய் முபாரக்கிடம் என்ன சொன்னானோ தெரியவில்லை; வீடு முழுதும் ஒருவிதமான நிசப்தத்தில் ஆழ்ந்து விட்டது; சூழ்நிலையைக் கொண்டு ஆராய்ந்ததில், தரியாவின் கருத்து ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்பது தெளிவாகியது கோந்தலாவுக்கு; மல்கிக்கும் கூட ஆனால் தரியாவின் யோசனை என்ன என்பது பற்றி ஆண் பிள்ளைகள் தவிர, வேறு யாருக்கும் தெரியவில்லை. தரியாவுக்கு என்ன வந்து விட்டது? என்று எண்ணியவாறே, ஆண்கள் துக்கப்பட்டனர். "யோசிக்கலாம்!" என்று

கூறியவாறு, ராய் முபாரக் பேச்சை மாற்றினான். அதன் பிறகு அவர்கள் விவசாயம் பற்றிப் பேசியவாறே உறங்கிப் போயினர்.

ஆனால் தூங்கினர் என்பது பேச்சளவில்தான். தன் அண்ணன் தன் பேச்சைக் கேட்கவில்லையே, என்று தரியாவுக்கு வருத்தம். தரியா, எந்தக் காரியத்துக்குத் தன்னை இணங்கச் செய்ய முயற்சி செய்கிறான், என்று எண்ணி அண்ணன் வருத்தப்பட்டான். அண்ணனின் புதல்வர்களும், தமது தந்தையின் கருத்தையே ஆதரித்தனர்.

முற்றத்தில் படுத்திருந்த தாய், மகள் இருவரும் தத்தம் இதயத் துடிப்புகளை பரஸ்பரம் பரிமாறிக் கொண்டிருந்தனர். தரியாவின் யோசனை ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்பதை அவர்கள் புரிந்து கொண்டிருந்தாலும், அந்த யோசனை என்ன என்பதையோ, அது நிராகரிக்கப்பட்ட பிறகு மேற்கொண்டு என்ன நடக்கப் போகிறது என்பதையோ, அவர்கள் அறியவில்லை.

நிலைமை தனக்குச் சாதகமாகத்தான் இருக்கிறது, என்று கோந்தலாவுக்குத் தோன்றியது. ஆனால், பூரா விஷயமும் தெளிவாகாத வரை, கோணல் சுபாவம் படைத்த அவளது கணவன் மீதும், அதைவிடக் கோணல் சுபாவம் கொண்ட பையன்கள் மீதும் அவள் எவ்வாறு நம்பிக்கை வைக்க முடியும்? தன் தாய் தன் மனத்தில் கைமா பற்றி வரைந்திருந்த சித்திரம் அழிக்கப்படுவதை, மல்கியால் பொறுத்துக் கொள்ள முடியாது. பெண்கள் எல்லோரும் தமது சகோதரர்கள் முரட்டு சுபாவம் கொண்டு இருப்பதையே விரும்புகிறார்கள். ஆனால் தம் கண்வன்மார் நல்ல குணசாலியாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். மல்கியின் எண்ணமெல்லாம் தான் கைமாவின் வீட்டில் நிம்மதியாக, கொந்தளிப்பே இல்லாமல், காதல் என்னும் ஊஞ்சலில் ஆடிக் கொண்டே வாழப் போகிறோம் என்பதுதான்.

உறவுமுறையின் படி, கைமா, ரான்ஜாவுக்கு மருமான் ஆக வேண்டும். ரான்ஜாவின் காதல் கதை, இன்னும் பசுமையாக நினைவில் நிற்கிறது. அந்த உறவின் காரணமாக காதல் சரித்திரம் கைமாவின் பெயருடன் இணைந்திருந்தது;

அவனுடைய இந்தக் காதல் சரித்திர வடிவம் மல்கியின் யௌவன பருவத்து ஆத்மாவை ஈர்த்துத் தழுவிற்று. அவள் மாய மந்திரத்தால் கட்டுண்டவள் போல் ஆனாள். ரான்ஜா வளர்ந்து பெரியவனான காட்டுப் பிரதேசங்கள், பசும் புல் வெளிகள் முதலியவை பற்றியெல்லாம் அவள் கனவு கண்டிருந்தாள். கைமா, ரான்ஜாவைப் போல ரூப சௌந்தரியம் கொண்டவனாக இல்லாமல் இருக்கலாம்; ஆனால் மல்கியைப் பொறுத்த வரை அவன் எந்த விதத்திலும் ரான்ஜாவை விடக் குறைந்தவனாக இருக்க முடியாது. மல்கியின் தாய் வேறு, அவளிடம் கைமா மிகுந்த மென்மையான சுபாவம் கொண்டவன், ஆனால் திடசித்தம் கொண்டவன், என்றெல்லாம் வர்ணித்திருந்தாள்.

தக்ஹஜாரா குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்வதில் பலவிதமான நன்மைகள் இருப்பதாக கோந்தலாவுக்குத் தோன்றியது. லாலோ, அவளது சகோதரி–சுகதுக்கங்களில் தோள் கொடுப்பவள். மல்கியைப் போன்ற பெண் லாலோவுக்கும் இருந்ததுடன், கைமாவைப் போன்ற பையனும் கோந்தலாவுக்கு இருந்தான். தவிரவும், ரத்த சம்பந்தம் உள்ள இடம், எப்போதுமே அந்நியக் குடும்பத்தை விட உயர்ந்ததுதான்.

ஆனால் ரத்த சம்மந்தத்தை வெறும் தண்ணீருக்குச் சமமாக நினைத்து, அந்நியர் உறவை உயர்வாக்க தரியா எண்ணினான் என்பது, மறுநாள் பொழுது விடிந்தவுடன் எல்லோருக்கும் தெரிந்து விட்டது.

தரியாவின் எண்ணம், மல்கியை அக்பரின் அரண்மனையில் அமரச் செய்வது என்பது தெரிய வந்தது. கிழவன் அக்பர், மல்கியின் அழகிலும் இளமையிலும் மயங்கி, தரியாவுக்கு மிகுந்த மரியாதையும், பதவியும் அளித்து விடுவான். தரியாவினால் தனது உறவினர்கள் கஷ்டப் படுவதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. அவர்கள் ராஜபுத்திரர்களாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. சுபேதார் பதவியிலிருந்து ஜெனரலாக தரியாவுக்குப் பதவி உயர்வு கிடைக்கக் கூடும். ஏன் கூடாது? அவன்தான் அக்பரின் சம்பந்தியாகப் போகிறானே? யாராவது தனது சம்பந்தியைத்

தன்னை விடத் தாழ்வாகக் கருதுவார்களா என்ன? தரியா, தான் ஜெனரல் ஆகப் போவது பற்றியே கனவு கண்டு கொண்டிருந்தான். இந்த விஷயமெல்லாம் பாதுஷா அக்பருக்குத் தெரியுமோ தெரியாதோ. ஆனால் தரியாவுக்கு, பாதுஷாவின் பலவீனங்கள் தெரிந்திருந்தன. தன் சகோதரன் சரியென்று சொல்ல வேண்டியதுதான் தாமதம்; தரியாவுக்கென அரச தர்பாரின் கதவுகள் யாவும் திறந்து கொள்ள ஆரம்பிக்கும். சமீபத்தில்தான், தனது பேச்சைக் கேட்காமல், தனது மகன் ஸலீமைக் காதலித்த அனார்கலியைக் கொலை செய்ய உத்தரவிட்டான் அக்பர். தவிர, தனது மருமகள் மல்கி, அனார்கலியைவிட எந்த விதத்திலும் குறைந்தவள் அல்ல, என்ற நம்பிக்கை தரியாவுக்கு இருந்தது.

தரியாவின் இத்தகைய எண்ணங்களை, முகலானா குடும்பத்தினர் அனைவரும் உணர்ந்திருந்தனர். வீட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் இந்தச் செய்தி, மறுநாள் காலைக்குள் பரவிவிட்டது. காலையில், விஷம் போன்ற இந்தச் செய்தி, கோந்தலாவையும் மல்கியையும் சென்று தாக்கிய பின், அவர்களும் அதை முறியடிக்கத் திட்டம் தீட்ட ஆரம்பித்தனர். கோந்தலா வளர்த்த தரியா, தனது மருமகளை எந்த வழியில் அழைத்துச் செல்ல விரும்பியிருக்கிறான்? நேற்று வரை அண்ணியிடம் சாப்பிட்டு வளர்ந்த அவன், ராஜதர்பாரில் தனது செல்வாக்கைப் பற்றி எவ்வளவு ஜம்பம் அடித்துக் கொள்கிறான்?

மறுநாள் காலை, தரியா தில்லிக்குக் கிளம்பிய சமயம், யாரும் அவனுக்கு அன்புடன் விடை கொடுக்கவில்லை. தன்னை விடப் பெரிய இடத்துச் சம்பந்தத்தில் ராய் முபாரக்குக்கு இஷ்டமில்லை. பெரிய மனிதர்கள், தமது பணப் பெருமையை அவர்கள் வீட்டைப் புகுந்த வீடாக அடையும் பெண்களிடம் காட்டுவார்கள். அவனைப் போலவே அந்தஸ்துள்ள ஜமீன்தார்கள் குறைந்தா போய்விட்டனர்? தவிரவும், செல்லமாக வளர்த்த பெண்ணை, அவ்வளவு தூரத்தில் எப்படிக் கொடுப்பது? ஆயிரம் மைல் தொலைவில் வாழும் மகள், இருப்பதும் ஒன்றுதான்; இல்லாததும்

ஒன்றுதான். பெண்ணானாலும், பிள்ளையானாலும் சுகதுக்கங்களில் பங்கு கொள்ள முடியவில்லையானால், அவர்களால் என்ன பயன்?

ஆனால், தரியாவுக்கோ தன் நலத்திலேயே நோக்கம். அண்ணன் ராய் முபாரக் அவனுடைய யோசனையை ஏற்காததனால், அவனது நம்பிக்கைகள் சிதறிப் போயின. ஜெனரல் பதவி கிடைப்பது கிடக்கட்டும்; அவன் பார்த்து வந்த சுபேதார் வேலைக்கே ஆபத்து வந்துவிட்டது என்று எண்ணினான் அவன். பதவி உயர்வுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்த சமயம், யாரோ அவனை இருக்கும் இடத்திலிருந்தே கையைப் பற்றி இழுத்து இறக்கி விட்டது போல அவனுக்குத் தோன்றியது. கோபத்தினால் அவன் உடல் நடுங்கியது. இந்த ஏமாற்றத்துக்குப் பழிவாங்காமல் விடப் போவதில்லை, என்று அவன் தன் மனத்துக்குள்ளேயே நிச்சயம் செய்து கொண்டான்.

குடும்பத்திற்குள் பிளவு ஏற்பட்டு விட்டது. துறுதுறுப்பான இயல்பு கொண்ட மல்கியின் மனத்தில் கவலை குடிகொண்டது. ஜமீந்தார் குடும்பத்து சகோதரர்கள் விரோதம் கொண்டால், யாராவது ஒருவருடைய உயிரை வாங்காத வரை, நிம்மதி அடைய ம்ாட்டார்கள். சகோதரர்களுக்குள் ஏற்படும் பிளவைப் போல தீமையானது வேறு எதுவுமே இருக்க முடியாது. ஒருவரின் ரகசியங்களை மற்றவர் அறிவார்கள். சொந்த வீட்டுக்குத் துரோகம் செய்பவர்களைப் போல, மிகப் பயங்கரமான எதிரிகள் இருக்க முடியாது. மல்கி ஊஞ்சல் ஆடப்போனால் அவளுக்கு இப்போதெல்லாம் ஊஞ்சல் பலகையில் கால் வைக்கவே மனம் வருவதில்லை. எப்படியோ சமாளித்துக் கொண்டு ஏறிவிட்டாலும், இரண்டு மூன்று வீச்சுக்கள் ஆடிய உடனேயே அவளுக்கு மூச்சு வாங்க ஆரம்பித்தது. பக்கத்தில் நிற்கும் தோழிகள், சிறிதளவு உயரமாக ஆட்டிவிட்டால் கூட, மல்கிக்கு பயத்தினால் இதயத்துடிப்பு நின்று விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. மரங்களை வேருடன் ஆட வைக்கும் மல்கி, இலைகளின் அசைவைக் கண்டு பயப்பட ஆரம்பித்தாள். அரசாங்கத்தின் கோபம், அவளுடைய தாய்-தந்தையின்ரின் கைகளைக்

கட்டிப் போட்டு விட முடியும். கைமா தக்த்ஹஜாராவில் உட்கார்ந்திருந்தான். இங்கோ, மல்கி, கவலையில் மூழ்கியவளாகப் பைத்தியம் பிடித்து விடும் நிலையில் இருந்தாள். அரச மரமும் அதன் உச்சியும் அவளைத் தாக்க வருவது போல அவளுக்குத் தோன்றியது. அவளது மனமே உல்லாசத்தை விரும்பாதபோது, உடலை மட்டும் அவள் எங்கே கவனிக்கப் போகிறாள்?

சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, கோந்தலா தன் கணவனிடம், மல்கியைக் கைமாவுக்குத் திருமணம் செய்து கொடுக்கும் விஷயத்தைப் பிரஸ்தாபித்தாள். தக்த்ஹஜாரா துடும்பத் தலைவன் துலாரா, சம அந்தஸ்து கொண்ட ஜமீன்தார். ஷட்டகனுக்கு சம்பந்தி ஆகும் உரிமை இருந்தது. ராய் முபாரக்கின் மைத்துனி லாலோவும், மிகுந்த சாந்த சுபாவம் கொண்டவள்.

அதிகமான அளவு போக்குவரத்து இரு குடும்பங்களுக்கு இடையில் இல்லாவிட்டாலும், தக்த்ஹஜாரா குடும்பத்தினரின் இயல்பு, ராய் முபாரக்குக்குத் தெரிந்திருந்தது. துலாராவும், ராய் முபாரக்கும் சேர்ந்து வேட்டையாடப் போனபோது, இருவரும் நெருங்கிப் பழகியதுண்டு. கொஞ்ச நேரம் பழகினால், மனிதர்களுடைய குணம் தெரிந்து விடாதா என்ன? இந்தச் சம்பந்தத்திற்கு வாய்ப்பு இருப்பது பற்றி, ராய் முபாரக்குக்கு ஞாபகம் இருக்கவில்லை. இருந்திருந்தால், மற்றவர் தயவை நாடியிருக்க வேண்டாம். மகளும் சந்தோஷமாக இருந்திருப்பாள். சகோதரர்களுக்குள் விரோதமும் ஏற்பட்டிருக்காது. அவனுக்குத் தன் மீதே கோபம் கோபமாக வந்தது. கோந்தலாவுக்கும் இந்த விஷயத்தை வீட்டில் இது வரை பிரஸ்தாபிக்காமல் போனோமே, என்ற வருத்தம் ஏற்பட்டது. தனது தங்கை லாலோவுக்கு இது விஷயமாக வெகு காலம் முன்பு வாக்குறுதி தொடுத்திருந்ததையும், அவள் இதுவரை மறைத்து வைத்திருந்தாள்.

கைமாவுடன் திருமணம் செய்வதற்கான பேச்சு வார்த்தையை ஆரம்பித்தவுடன், எல்லோருமே மகிழ்ச்சியுற்றனர். குடும்பத்திலும் நம்பிக்கையற்ற தன்மை எனும் வெப்பக் காற்று வீசி தகித்துக் கொண்டிருந்தது நீங்கி,

நம்பிக்கை எனும் குளிர் காற்று வீசத் தொடங்கியிருந்தது. மல்கியின் மனத்தில் நாளுக்கு நாள் கைமாவின் உருவம் தெளிவாய்த் துலங்க ஆரம்பித்திருந்தது. அவள் மனத்தில் கைமா இடம்பெற்று நிலைத்தபோது, சக்கரவர்த்தி அக்பரின் மீது அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. தரியா கூறிய யோசனை, அவனுடைய மூளையில் சுயமாக உதித்ததாக இருக்கலாம்; ஆனால் ஒரு கண நேரத்துக்குக் கூட, தன் பெயர் அக்பருடன் இணைத்துப் பேசப்பட்டது அவளுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. பாதுஷாவுக்கு அவளுடனும், அவளுக்கு பாதுஷாவுடனும் என்ன உறவு இருக்க முடியும்? அழகின் தேவதை கைமா, கிழவன் அக்பர்–இருவருடைய உருவங்களும் அவளுடைய மனக்கண் முன்னால் சுற்றிக் கொண்டிருந்தன.

கைமாவுடன் நிச்சயதார்த்தம் ஆன பிறகு, மல்கியின் அழகைப் பற்றிய புகழ் தக்த்ஹஜாராவிலும் பரவ ஆரம்பித்தது. கைமாவின் மனத்தில், கட் முகலானாவின் பேரழகியை விரைவில் அடைய வேண்டும் என்ற ஆவல், பெருகிக் கொண்டே வந்தது. தவிர, ராய் முபாரக், தனது மகளுக்கு வரவிருந்த அக்பரின் சம்பந்தத்தை உதறிவிட்டு, தக்த்ஹஜாரா குடும்பத்தைத் தேர்ந்தெடுத்ததும் அவர்களுக்குத் தெரிய வந்தது. பாதுஷாவுக்குச் சமமாக மதிக்கப்பட்டதில், பெருமை பிடிபடவில்லை கைமாவுக்கு. ஆனால் திருமணச் சடங்கு நிறைவேறும் வரை, அவனுடைய மனம் அமைதி கொள்ள இயலாது. நிக்காஹ் நடக்கும் வரை அவன் மல்கியின் பெற்றோர்களின் தயவை நாட வேண்டியிருந்தது. அவர்களுடைய விருப்பத்துக்கு இடையூறாக, தரியாவின் விருப்பம் இருந்தது. தரியாவின் விருப்பம் வெறும் சாமானியமானதல்ல. அந்த விருப்பத்திற்குப் பலமளிப்பதாக, அக்பரின் கீர்த்தியும், அரசாங்கச் செல்வாக்கும் இருந்தன. உடனே சென்று, மல்கியோடு சேர்ந்து விட வேண்டும், என்று கைமா துடித்தான். ஆனால் சமூகத்தின் கட்டுத்திட்டங்களுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் அவனும் அடிமைதானே; அதனால் அவனுக்குத் துணிச்சல் தோன்றவில்லை.

பறந்து போய் மல்கியை அடைந்து விடுவது மட்டும்

லேசான காரியமா, என்ன? இரண்டு ஊர்களுக்கும் இடையே இரண்டு நதிகளைக் கடந்து செல்ல வேண்டிய தூரம் இருந்தது. ஜேலம் நதிக்கரையில் இருப்பது தக்த்ஹஜாரா; கட்முகலானா சிந்து நதிக்கரையில் இருக்கும் கிராமம்.

இருவருடைய பெற்றோர்களுக்கும், தரியா மீது நம்பிக்கை இல்லை. நல்ல நாளைத் தள்ளிப் போடுவதை இருவருமே விரும்பவில்லை, ராய்முபாரக், துலாரா-இருவரிடையே போக்குவரத்து அதிகமாகியது. தாம் இருவரும் சேர்ந்து வேட்டையாடச் செல்லப் போகும் நாட்களை அவர்கள் எதிர்பார்த்திருந்தனர். ஜேலத்திலிருந்து சிந்து நதி வரையிலிருந்த பூமியெல்லாம் அவர்களுக்குச் சொந்தமாகப் போகிறது. அவ்விருவருடைய விருப்பப்படி, அவர்கள் எங்கு வேண்டுமானாலும் சுற்றலாம். இரண்டு நதி தீரங்களிலும் இருந்த சிங்கம், புலி, மான், கவுதாரி, வான்கோழி, சேவல், சேவல், ஜாதிப் பறவைகள் எல்லாமே தம்முடையதாக ஆகிவிட்டதாக அவர்களுக்குத் தோன்றியது. தங்களது வேட்டை நாய்களைக் காட்டுமான்களுக்குப் பின்னால் விரட்டிக் கொண்டு செல்வது போன்ற கற்பனை உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தனர் அவ்விருவரும்.

கல்யாணத் தேதியைக் குறிப்பிட்டு விட்டான் ராய் முபாரக்.

கோந்தலா தன் கணவனிடம், "என் பேச்சைக் கேட்பதாக இருந்தால் சொல்கிறேன்; தரியாவைக் கூப்பிடாமெ இருந்தாத் தேவலை'' என்றாள்.

"அடீ அசடே! அப்படிக் கூடப் பண்ணுவாங்களா, என்ன? தரியா ஒண்ணும் சொல்லமாட்டான். ஏதோ, திடீர்னு அப்பொ அவனுக்குப் பேராசை பிடிச்சுது. அதெல்லாம் இப்ப, பழைய கதையாயிட்டுது." என்று சமாதானப்படுத்தினான் ராய் முபாரக்.

"பேராசைக்கார மனுஷங்களை எப்போதுமே நம்பறதுக் கில்லே. ஆனா, உங்க இஷ்டம்; எப்படியோ செய்யுங்க!'' என்று பொறுப்பைக் கணவனிடமே விட்டுவிட்டாள் கோந்தலா. அவளுடைய பிள்ளைகளும், தந்தையின் பேச்சுக்குத் தலையாட்டினர். யாரையும் மனக் கஷ்டத்துக்கு உள்ளாக்குவது சரியாகத் தோன்றவில்லை. தரியாவுக்கும் அழைப்பிதழ்

அனுப்பியாயிற்று.

திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் விரைவாக நடந்தன. இரு பக்கத்தாரின் வீடுகளும் சுத்தம் செய்யப்பட்டு, அழகுபடுத்தப்பட்டன. மல்கியின் வீட்டார், சீர்வரிசைகளைத் தயார் செய்தனர். பெண்ணுக்கு அளிக்கப் போகும் பொருட்களை, கைமாவின் வீட்டார் தயார் செய்தனர். கைமா வீட்டில் குதிரைகளைத் தயார் செய்தனர். அவரவர் வீட்டில் இருந்த கைமா, மல்கி இருவர் இதயங்களும் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தன.

திருமண தினத்தன்று, தரியாவும் வந்து சேர்ந்தான். அவன் கோவேறு கழுதைகளின் மீது ஒயின் நிறைந்த பாட்டில்களை நிறைய ஏற்றிக் கொண்டு வந்திருந்தான். அவனிடம் அரண்மனையில் உபயோகப்படும் வாண வெடிகளும், அரச குடும்பத்து இரத்தின கம்பளங்களும் இ:நந்தன. முன்பு நிகழ்ந்த சம்பவங்கள் பற்றிய சாயல் சிறிது கூட அவன் முகத்தில் காணப்படவில்லை. மகள் எல்லோருக்குமே அணிகல னாகத்திகழ்பவள். மகளை வெறுப்பவன் நரகத்துக்குத்தான் போவான்.

கல்யாணத்தன்று இரவு, கட்முகலானாவின் "நம்பர்தாரின்" (குத்தகை வசூலிக்கும் மிராசுதார்) வீட்டில், சாராய வகைகள் வழங்கப்பட்டன. பெரியவர்களடங்கிய குழு, வீட்டுக்குள் ளேயே அமர்ந்து குடித்துக் கொண்டிருந்தது, சிறுமிகள் தமது புதிய 'அத்தானைச்' சூழ்ந்து அமர்ந்திருந்தனர். கேலிப் பாடல்கள் பாடப்பட்டன. மாமியார், தனது மாப்பிள்ளையை லட்டுகள் சாப்பிடும்படி வற்புறுத்திக் கொண்டிருந்தாள். மைத்துனிகள், அவனைச் சீண்டுவதில் மும்முரமாக இருந்தனர்.

திருமணம் நடந்தேறியது. மல்கி, கைமா இருவரும் பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உரிமையாயினர். யாருக்கும் எந்த விதமான பயமும் ஏற்படவில்லை. திராட்சை ரசத்தில் செய்த சாராயம் கொண்டுவந்திருந்த காரணத்தால், இரண்டு வீட்டினருக்கும் வேண்டிய முக்கியமான மனிதனாக ஆகிவிட்டான் தரியா. அவன் சாராயம் வழங்கினான்; மற்றவர்கள் குடித்தனர். ராய் முபாரக்கின் வீட்டில், சாராய

பாட்டில்கள் தொடர்ந்து காலியான வண்ணம் இருந்தன. பஞ்சாபிக் கிராமிய நடனங்களின் ஓசையும் கேட்ட வண்ணம் இருந்தது.

மைத்துனிகளிடமிருந்து விடைபெற்று, கைமா வீடு வந்தவுடனே, பலகோப்பை சாராயம் பருகிவிட்டான். ஒரு பக்கம் திருமண உற்சாகம்; மற்றொரு பக்கம் அயர்ச்சி. முக்காட்டின் வழியே கணப்பொழுதே தெரிந்த மல்கியின் முகலாவண்யக் காட்சி ஏற்படுத்திய போதையும் குறைவான தாக இல்லை. சிறிது நேரத்தில் அவனும் மற்றவர்களுடன் சென்று கலந்து கொண்டான். சிறிது நேரத்தில் எல்லோருமே தள்ளாட ஆரம்பித்தனர். பிள்ளை வீட்டுக்காரர், பெண் வீட்டுக்காரர், என்ற வித்தியாசமே இல்லை. தரியா மட்டும்தான் சுய நினைவுடன் இருந்தான். சாதாரணமாக அவன் குடிப்பதே இல்லை; குடித்தாலும் குறைவாகவே குடிப்பான்; அவன் கீழே கொட்டுவதுதான் அதிகமாக இருக்கும். மற்றவர்களை விழச் செய்வது அதைவிட அதிகமாக இருந்தது.

சரியான சந்தர்ப்பம் பார்த்து ராய் முபாரக், ராஹூன். மஹரூன், துலாரா, கைமா, எல்லோரையுமே கைது செய்தான் தரியா. கிராமத்துக்கு வெளியே அவன் நிறுத்தி வைத்திருந்த சிப்பாய்கள், அவனது உத்தரவு பிறந்தவுடன் ஐவரையும் கட்டி, தம்முடன் அழைத்துச் சென்றனர். கைது செய்யப்பட்டவர் களுக்கோ, மற்றவர்களுக்கோ சுய நினைவே இல்லை.

தில்லியை நோக்கி வெற்றி நடை போட்டான் தரியா.

நாட்டியச் சத்தம், சாராயக் கோப்பைகள் எழுப்பிய ஓசை, வாண வெடிகளின் சப்தம் அவற்றின் நடுவே எத்தகைய கொடுமை நிகழ்ந்து விட்டது என்று மறுநாள் பொழுது விடிந்தவுடன்தான் மக்களுக்குப் புரிந்தது. கிராமத்தின் நம்பர்தாருடன் மணமகனுடைய தந்தையும் சகோதரர்களும் கைது செய்து கொண்டு போகப்பட்டிருந்தனர்.

யார் எங்கு செல்வது என்று யாருக்குமே புரியவில்லை. தறிகெட்டு நின்றவர்களைச் சமாளிப்பதற்கேற்றவர் யாரும் அங்கு மிஞ்சியிருக்கவில்லை. பாதுஷா என்ன செய்வாரோ, என்ற பயமும், அரச தர்பாரைப் பற்றிய பீதியும் நிலவின.

அவமானத்தைப் பொறுத்துக் கொள்ள ஒவ்வொரு மனிதனும் தயாராக இருந்தான். முதல் முறையாக, கட்முகலானா குடும்பத்தினர், அவமானத்தை, வெட்கம் சிறிதுமில்லாமல் சகித்துக் கொள்ளத் தயாராக் இருந்தனர். நகரம் முழுவதுமே மௌனமாக இருந்தது. தக்த்ஹஜாராவைச் சேர்ந்த பிள்ளை வீட்டார் சிலர் மட்டும் என்ன செய்து விடமுடியும்? தரியாவிடம் எவ்வளவு பெரிய படை இருந்தது என்பது யாருக்கும் தெரியாது.

தோந்தலா, அழுது அழுது தன் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டாள். மல்கியின் கதறல், கேட்கச் சகிக்காததாக இருந்தது. ஆனால், மக்கள் அதைப் பார்த்துக் கொண்டும். கேட்டுக் கொண்டும்தான் இருந்தனர். கட்முகலானா கிராம மும், பிள்ளை வீட்டுக்காரர்களும் பார்த்துக் கொண்டுதான் இருந்தனர்.

கைமா அங்கிருந்து செல்லும்போது அவன் முகத்தைக் கூடப் பார்க்கவில்லை மல்கி; அவன் உயிருடன் இருக்கும்போதே அவள் விதவையாகி விட்டாள்.

ஆனால், மல்கியின் தீர்மானம், கல்லில் செதுக்கிய கோட்டைப் போல உறுதியானதாக இருந்தது. கைமாவின் உரிமையாகிவிட்ட அவளை, எந்தப் பயலும் அவனிடமிருந்து பிரிக்க முடியாது. தரியா மட்டுமென்ன, தரியாவின் பாதுஷாவைப் பற்றியும் கூட அவளுக்கு அக்கறையில்லை. உடல் வலிமையால் சாதிக்க முடியாத காரியத்தை, சாமர்த்தியத்தினால் சாதிக்க முடியும். ரான்ஜா உபயோகப்படுத்தியது போல ஒரு பிட்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்தி, சந்நியாஸி வேடம் அணிந்து, கைமாவைத் தேடிப் புறப்பட்டாள் அவள். வீட்டை விட்டுக் கிளம்பும் சமயம், தனது தாயாரிடம் கூடச் சொல்லிக் கொள்ளவில்லை. ஒரு வேளை தாய், அவளை இந்தக் கடினமான காரியத்தை ஏற்றுக் கிளம்புவதைத் தடுக்கவும் கூடும். மல்கியின் தீர்மானம் அசைக்க இயலாததாக இருந்தது.

தரியாவின் பட்டாளம் மிகவும் பெரிது, கைதிகள் ஒவ்வொருவரையும் இரும்புச் சங்கிலிகளினால் கால்–கைகளைப் பிணைத்திருந்தான். இருந்தும், ஒவ்வொரு

கைதிக்கும் மூன்று சிப்பாய்கள் காவலாகச் சென்றனர். வழியில் வரும் யாத்திரீகர்கள் மூலம் இந்தச் செய்திகள் மல்கிக்குக் கிடைத்தன. ஒவ்வொரு யாத்திரீகனின் மனத்திலும் அவளுடைய தந்தை மற்றும் சகோதரர்களின் சிங்கம் போன்ற கம்பீரமான முகங்களும், கைமாவின் மனத்தை மயக்கும் ரூபலாவண்யமும் ஆழமாகப் பதிந்திருந்தன. எல்லோரும் உயிருடன் இருக்கிறார்கள் என்பதைக் கேட்க, மல்கிக்கு மிகவும் நிம்மதி ஏற்பட்டது. கஷ்டம் வருவது பற்றிப் பராவாயில்லை; இன்று வருவது நாளைக்குப் போய்விடலாம்.

மல்கியின் பாதங்கள் காய்ப்பினால் வெடித்திருந்தன. நூற்றுக்கணக்கான மைல் தூரத்தை அவள் வெறும் கால்களாலேயே கடக்கத் தீர்மானித்திருந்தாள். அடிக்கடி, செல்ல வேண்டிய வழியை மற்றவரிடம் கேட்பதற்கு அவசியமில்லாமல், ஆங்காங்கே மைல்-கற்கள் இருந்ததுடன், குளங்களும், இரவில் தங்குவதற்கான சாவடிகளும் இருந்தன. மரங்கள் இல்லாத இடங்களில், சூடு ஏறிய மணல், வெடிப்புக்கள் நிறைந்த அவளது பாதங்களை எரித்தது; அச்சமயம் அவள் புல் வளர்ந்திருந்த சிறு குன்றுகளுக்கு ஓடிச் சென்று, நின்று கொள்வாள். பாதங்களுக்குச் சிறிது ஓய்வு கொடுத்தபின் மறுபடி நடக்க ஆரம்பித்தாள். சில இடங்களில் சாப்பிடுவதற்கு ஏதேனும் கிடைக்கும்; மற்ற இடங்களில் அதுவும் இல்லை. நம்பிக்கை வைப்பதற்குக் காரணமே இல்லாத இந்தச் சூழ்நிலையில் அவளுக்கு இருந்த ஒரே ஒளிக் கதிர், கைமா உயிருடன் இருப்பதுதான். தரியாவின் குணம் பற்றி அவள் எப்படி நிச்சயமாக இருக்க முடியும்? அவனைக் கொன்று போட்டிருக்கலாமே! சில சமயம் அவள் யாத்திரீகர் கூட்டத்துடன் சேர்ந்து கொள்வாள்; மற்ற நேரங்களில் பின் தங்கி விடுவாள். ஓரிரு முறை அவ்ள் ஒளிந்து நின்று கைமாவைப் பார்த்தும் விட்டாள். அவன் பலமிழந்து, கவனிப்பாரற்றுக் காணப்பட்டான். மல்கியின் தந்தை, சகோதரர்களின் நிலையும் அதே போலத்தான் இருந்தது.

மல்கியின் இந்தப் பயணம் ஹஜ்யாத்திரையை விடக் கடினமானதாக இருந்தது. ஹஜ் போகும் போதாவது, பயணிகளின் நம்பிக்கை நிறைவேறும் வாய்ப்பு உண்டு.

மல்கிக்கு அதுவும் இருக்கிறதென்று கூற முடியாது.

சென்று அடைய வேண்டிய இடத்தை நிச்சயம் செய்து கொண்டிருந்த யாத்திரீகர் கூட்டம், குருக்ஷேத்திரத்துக்குப் பக்கத்தில் உள்ள தானேசரை அடைந்தது. மல்கியும் அவர்கள் பின்னே சென்று அந்த இடத்தை அடைந்தாள்.

தானேசரில் மல்கிக்கு பக்தர் கூட்டத்தில் ஒரு சினேகிதி கிடைத்தாள். அவள் இருந்த கூடாரத்திற்கு, விபூதிப் பிரசாதம் வாங்கிக் கொள்வதற்காக, மல்கி சென்றிருந்தாள். பேச்சுவாக்கில் அந்தப் பக்தை மல்கியின் துயருக்கான காரணத்தை அறிந்து கொண்டாள். துயரக் கதை முழுவதையும் கேட்டுக் கொண்ட பின், அவள் மல்கிக்கு ஒரு யோசனை கூறினாள். மல்கி, அக்பர் பாதுஷாவின் ராஜபுத்திர ராணியின் மகள் ஜமுனாவைச் சந்திக்க வேண்டும் என்று. அரச குமாரி ஜமுனா மனது வைத்தாளானால் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியும், என்ற நம்பிக்கை அந்த பக்தைக்கு இருந்தது.

ஜமுனாவின் அரண்மனைக்கு, மல்கி பிட்சை வாங்கச் சென்ற சமயம், அவளது இளமையும் அழகும் அரச குமாரியைக் கவர்ந்தன. இவ்வளவு இளம் வயதில் சாதுவாக மாறுவதென்றால் இந்தப் பெண்ணின் வாழ்க்கையில் ஏதோ ரகசியம் உள்ளது என்று ஜமுனாவுக்குத் தோன்றியது. மல்கியை உள்ளே அழைத்து விசாரித்தாள். மல்கியின் கண்களுக்கு, ஜமுனா ஒரு தேவதை போலத் தோன்றினாள். ஆகவே மனம் திறந்து கைமாவைத் தான் மணந்து கொண்ட பிறகு நிகழ்ந்த துக்ககரமான சம்பவங்களைக் கூறியதுடன், தனது சித்தப்பன், தன்னை அக்பரின் அந்தப்புரத்தில் கொண்டு வைப்பதன் மூலம், பதவி உயர்வு தேட முயற்சிப்பதையும் மறைக்கவில்லை.

அந்தப்புரத்திற்கு மல்கி வர வாய்ப்பு இருப்பதை அறிந்த ஜமுனாவுக்கு உடம்பெல்லாம் எரிவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அதாவது, யாரோ ஒருவர் மல்கியைத் தன் தாயாருக்குச் சக்களத்தியாகக் கொண்டுவரப் போகிறார்கள்! ஜமுனா தனது வயோதிகத் தந்தையின் மோக வெறிச் செயல்களை மறக்கவில்லை. பாதுஷாவின் ஆணையின்

பேரில், அனார்கலி கொலை செய்யப்பட்டதைக் கண்ணால் கண்டவள் அவள். அந்தக் கொலைக்குக் காரணம், அக்பரைக் காதலிக்காமல், அனார்கலி அவரது மகன், இளைஞன் ஸலீமைக் காதலித்ததுதான். அப்படிப்பட்ட தந்தை, மல்கி அந்தப்புரத்தில் சேர்ந்த பிறகு, தனது தாய்க்கு எந்த விதத்தில் நல்லது செய்யப் போகிறார்? மல்கியின் கதையைக் கேட்ட ஜமுனாவுக்கு, தனது தாய் சாதுவேடம் பூண்டு, பிட்சைப் பாத்திரம் ஏந்தி நிற்பதாகவும், அவள் ஸ்தானத்தில் மல்கி அரச தர்பாரில் இடம் பெற்று விட்டது போன்றும் ஒரு காட்சி, அவளது மனக் கண்முன்னே தெரிந்தது. மல்கியைப் பார்த்தால் அவ்வாறு செய்யக் கூடியவளாகத் தோன்றவில்லை. ஆனால் அவ்வாறு நிகழச் செய்வது மல்கியின் கைகளில் இல்லையே? பாதுஷாவின் கைகளில் அல்லவா இருக்கிறது?

இதுவரை பாதுஷாவுக்கு, தரியாவின் சூழ்ச்சி தெரியாது என்பதை அறிந்த ஜமுனாவுக்கு ஓரளவு நிம்மதி ஏற்பட்டது. கலகக்காரர்களை அடக்குவதற்காகச் சிப்பாய்களை தரியா அழைத்துச் சென்றிருக்கிறான் என்பது மட்டும் அக்பருக்குத் தெரியும். மல்கியின் சகோதரர்களைக் கலகக்காரர்களாகக் கருதுவதற்குக் காரணம், மல்கி பேரழகியாக இருப்பதுதான் என்பது பாதுஷாவுக்குத் தெரிந்திருந்தால், அவர் மல்கியையும் கைது செய்து அழைத்து வருமாறு உத்தரவிட்டிருப்பார். மல்கியைப் பலி கொடுப்பதில் தரியா காலம் தாழ்த்துவதற்குக் காரணம் இருந்தது. கலகக்காரர்களை இழுத்து வரும் சமயம் ஒரு பதவி உயர்வும், மல்கியைப் பாதுஷாவின் அந்தப்புரத்திற்குக் கொண்டு வரும் சமயம் மற்றொரு பதவி உயர்வும் பெற வேண்டும் என்று திட்டமிட்டிருந்தான் தரியா. அத்தகைய நிலை வந்துவிடக் கூடாது என்று அரச குமாரி விரும்பினாள். அவள் தரியாவை அழைத்து, குற்றமற்ற அந்தக் கைதிகளை விடுதலை செய்து, தனது அரண்மனைக்கு அனுப்பும்படி உத்தரவிட்டாள்.

அரசகுமாரியின் உத்தரவைப் பெற்றுத் திரும்பிய தரியாவுக்கு, கலகக்காரர்கள் விஷயத்தில் அவளுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிய வேண்டிய அவசியம் இல்லை என்று

தோன்றியது. உத்தரவை அவன் நிறைவேற்றாததற்கான சமாதானங்களை, பாதுஷா, தனது மகளுக்கு எடுத்துச் சொல்லிவிடுவார். அவன் இரவோடு இரவாக, கைதிகளை வேறு இடத்திற்கு அழைத்துச் செல்வதென முடிவு செய்துவிட்டான்.

மல்கியும் ஜமுனாவும் அடிக்கடி சந்தித்துக் கொண்டனர். ஜமுனா, மல்கியின் சந்நியாசி உடையை மாற்றிக் கொள்ளச் சொல்லி, அரச குடும்பத்து உடைகளைக் கொடுத்தாள். அன்று இரவு முழுவதும் அக்பரின் அசைக்க முடியாத நீதி உணர்வைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தனர். ஆனால் மல்கியின் மனம் மட்டும், கைமாவைப் பற்றிய எண்ணங்களிலேயே திளைத்துக் கொண்டிருந்தது. மறுநாள் காலையில் சிப்பாய்கள், கைமாவை அழைத்து வரப் போகிறார்களல்லவா!

காலையில் வாயிற்காப்போன் கதவைத் தட்டிய போது, கைமாவைச் சந்திக்கும் ஆவலுடன் ஓடினாள் மல்கி. ஆனால் வாசலில் கைமா இல்லை. வாயிற்காப்போன் செய்தி கொண்டு வந்திருந்தான், தரியா இரவோடு இரவாகக் கைமாவையும் அவனுடன் கூட இருந்தவர்களையும் வேறு இடத்துக்கு அழைத்துச் சென்று விட்டான் என்று. தர்பாரில் வேலை செய்யும் சுபேதாருக்கு இத்தனை ஆணவமா? ஜமுனாவினால் தன்னுடைய ஆத்திரத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. எதிரே வாயிற்காப்போன் நடுங்கியவாறே நின்றிருந்தான்.

ஜமுனா, தில்லிக்குக் கிளம்பினாள். மல்கியையும் தன்னுடனே அழைத்துக் கொண்டு. இந்த சம்பவத்தைத் தனது வயோதிகத் தந்தைக்கு எவ்வாறு கூற வேண்டும் என்பது பற்றியே வழி நெடுக யோசித்துக் கொண்டு வந்தாள், அவள். தில்லியை அடைந்த பிறகு, மல்கிக்கு வாயைத் திறக்கவோ, பாதுஷாவுக்கு எதிரே செல்லவோ அனுமதி கிடையாது; அந்த வேலை ஜமுனாவினுடையது; விஷயம் அவளுடைய கௌரவப் பிரச்சினையாக மாறிவிட்டது.

முதன் முதலில் ஜமுனா, தனது தாயாரைச் சந்தித்தாள். தவிர, அவளுக்குச் சக்களத்தியாக ஒரு நாள் வர வாய்ப்புக்

கொண்ட மல்கியையும் அழைத்துச் சென்று காண்பித்தாள். தரியாவின் சூழ்ச்சியையும் விரிவாக எடுத்துரைத்தாள். ராணியும் மகளும் யோசித்து முடிவு செய்தனர்–மல்கியுடன் பாதுஷாவுக்கு உறவு ஏற்படுத்தும் விஷயத்தைப் பிரஸ்தாபிக்காமலேயே தரியாவை முடித்து விட வேண்டும், என்று.

வயோதிகத் தாயின் இதயம் துக்கத்தினால் வெடித்து விடும்போல் இருந்தது. பாதுஷாவின் பலவீனங்களினாலும் திறந்த மனதினாலும் அவளுக்கு சுகமும் கிட்டியிருக்கிறது; நிறைய துக்கத்தையும் அனுபவிக்க வேண்டி இருந்திருக்கிறது. எவளாவது ஒருத்தியின் இளமையில் மயங்கிய பாதுஷா பல இரவுகள், அவசியமான வேலைகள் இருப்பதாகக் காரணம் கூறி, அரண்மனைக்கே வராமல் இருந்ததை அவள் மறக்கவில்லை. இரவு நேரங்களில் வெளியே பொழுதைக் கழிக்கச் செய்யும் அந்த அவசிய வேலைகள் என்ன என்பதை அவள் அறிவாள். அவளுக்கு வயதாக ஆரம்பத்திலிருந்து, பாதுஷாவின் இத்தகைய நடவடிக்கைகள் அதிகரித்து வருவதையும் அவள் நன்றாக உணர்ந்து தானிருந்தாள். தன்னுடைய பிரச்னைகளை அதிகப்படுத்திக் கொள்ள ராணி விரும்பவில்லை. அவளுக்குச் சக்களத்தியாக வரக் கூடிய பெண், அவள் எதிரே உட்கார்ந்து கொண்டிருந்தாள். வயதில், ராணியின் மகளை விடச் சிறியவள் அவள்.

ராணிக்குத் தரியாவின் சூழ்ச்சி நன்கு புரிந்தது. அவனை நிர்மூலமாக்கிவிட்டுத்தான் மறுவேலை என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

பாதுஷா அரண்மனைக்கு வர வேண்டிய நேரம் நெருங்கிய உடன், மஹலில் உள்ள எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டன ராணியின் உத்தரவின் பேரில். விளக்குக் கூடுகள் உடைக்கப்பட்டிருந்தன. ராணி தனது அலங்காரங்களைக் கலைத்து எறிந்தாள். பாதுஷா வந்தபோது, ராணி தனது கட்டிலில் படுத்துக் கிடந்தாள்.

இதைக் கண்ட பாதுஷாவுக்கு வியப்பும் வருத்தமும் ஏற்பட்டன. ராணி கோபப்படும் வகையில் ஒரு

காரியத்தையும், அன்று அவர் செய்யவில்லையே! அவரது மனத்தில் இந்த விஷயத்தில் சந்தேகம் ஏதுமில்லை. தவிரவும் அவருடைய மண வாழ்வில் முதன் முறையாக இந்த ராணி ஏதோ ஒரு விஷயம் காரணமாகத் தனது கோபத்தை வெளிக்காட்டியிருக்கிறாள். அவள் அம்மாதிரிச் செய்யும் படியாக அவர் இதுவரை விட்டதில்லை. இன்று மட்டும் என்ன நேர்ந்து விட்டது? பாதுஷா மிகவும் வேதனைப்பட்டார்.

தனது ராணியின் முன்னால் பாதுஷா பணிந்து போனார். அதைக் கண்ட ராணி, ராய் முபாரக் மற்றும் அவனுடைய தோழர்களின் விடுதலையைக் கோரினாள். ஆனால், கலகக்காரர்களை விடுதலை செய்வது, பாதுஷாவை மட்டும் பொறுத்த காரியமல்ல. இத்தகைய முடிவை அரசவைக் குழுவினர்தான் எடுக்க வேண்டும். கலகக்காரனும் ஒற்றனும் நாட்டு விரோதிகள். கலகக்காரர்களை விடுதலை செய்வதற்குத் தகுந்த ருஜு அவசியம் வேண்டும். அந்த ருஜு, ராணியிடம் இல்லை. தரியா, தனது சகோதரனைக் கலகக்காரன் என்று கூறிக் கொண்டிருக்கிறான்; அது பொய், என்பதை அவள் எவ்விதம் நிரூபணம் செய்ய முடியும்?

விஷயம் மிகுந்த சங்கடமானதாக இருந்தது. அக்பர் பாதுஷாவின் நீதி நெறிமுறை, உலகிலேயே பெயர் பெற்றதாக இருந்தது. மல்கியை, பாதுஷாவின் அந்தப்புரத்தில் இடம் பெறச் செய்ய வேண்டுமென்ற தரியாவின் திட்டத்தைக் காரணமாகக் காட்ட முடியுமா? அதைச் சொன்னால், தானே தன் கால்களைக் கோடரியால் வெட்டிக் கொள்வதாக அல்லவா முடியும்? பாதுஷா, மல்கியின் மீது மையல் கொண்டுவிட்டால்?

ராணி, தனது துக்கத்தைத் தனது சகோதரன் பீர்பல்லிடம் பகிர்ந்து கொண்டாள். பீர்பல்லிடம் எந்தப் பிரச்னைக்குத் தான் தீர்வு இல்லை? அவன் சொன்னான்: ஜாட் குல ஜமீன்தார்களிடையே கூடப் பிறந்தவர்களையே கொன்று குவிப்பது, சாதாரணமான செயல். ராய் முபாரக்கைக் கலகக்காரன் என்று தரியா கூறுவதற்கும் இதுவே காரணமாக இருக்கலாமே! ராய் முபாரக்கும் அவனுடைய வாரிசுகளும் இறந்துவிட்டால், அவர்களுடைய நிலங்களும், கிராமத்து

"நம்பர்தார்" பதவியும் தரியாவுக்குத்தான் சொந்தமாகும். இந்த அளவுக்கு இழிந்த எண்ணம் கொண்ட தரியாவைத் தூக்கிலிட வேண்டியது எவ்வளவு முக்கியமோ, அதே அளவுக்கு இயல்பான செய்கை, கைமாவையும் அவன் கூட்டாளிகளையும் விடுதலை செய்வது, என்றான் பீர்பல்.

பாதுஷாவுக்கு இதைவிட அதிகமான ருஜுவுக்கு அவசியம் என்ன இருந்தது? அவர் தனது முடிவைத் தெரிவித்து விட்டார்.

தூக்கிலேற்றப்படுவதற்கு முன் தரியாவின் கடைசி ஆசை என்ன என்று கேட்கப்பட்டது. ஆனால், தரியாவின் எல்லா ஆசைகளும்தான் மடிந்துவிட்டனவே! உயர்ந்த பதவி ஆசையும், பழிவாங்கும் உணர்வும் அவனிடம் ஏற்படுத்தி யிருந்த களங்கம், தற்போது மறைய ஆரம்பித்தது. அவனுடைய கடைசி விருப்பம் என்று என்ன இருக்க முடியும்? அவன் கைமாவையும் மல்கியையும் அழைத்து, மல்கியின் கரத்தை கைமாவின் கைக்குள் வைத்தான். இதைக் கண்ட ராய் முபாரக், மற்றும் குடும்பத்தினரின் கண்களில் நீர் சுரந்தது. தரியாவின் கண்களிலும் நீர் பெருகலாயிற்று. அண்ணனிடம் மன்னிப்புக் கோரியபின், அவன் தூக்கு மேடை ஏறினான்.

கைமாவும் மல்கியும் முதன் முறையாக, அன்றிரவு, யமுனை நதிக் கரையில் தனியே சந்தித்தனர். நிலவொளி, நதிக் கரையின் தனிமை, அமைதியாக ஓடும் ஆறு, தனது கடைசி நேரத்தில் தரியா தன் தவறுக்காக வருந்தியது— எல்லாம் சேர்ந்து கைமாவையும் மல்கியையும் ஒருவர்க்கொருவர் மேலும் நெருங்கி வர வழி செய்தன.

கைமா, மல்கியை ஆரத் தழுவிக் கொண்டபோது, மல்கியின் கண்கள் மகிழ்ச்சியினால் குளமாயின.

# பூரன் பகத்

## சிவ குமார்

பஞ்சாபில் உள்ள சியால்கோட் நகரைப் பற்றிய கதை இது. ஒரு காலத்தில் அங்கே ஸல்வான் என்ற பெயர் கொண்ட அரசன் இருந்தான். அவனுடைய ராணி இச்சரா, ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தபோது, அவனுடைய அபிலாஷைகள் எல்லாம் பூர்த்தியடைந்து விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது அவனுக்கு. அந்தக் குழந்தைக்கு பூரன் என்று பெயர் வைத்தான், அவன்.

அந்தக் காலத்தில், உலக வாழ்வில் அக்கறை கொண்ட யோகிகளுக்கு அதிக செல்வாக்கு இருந்தது. நாத் யோகி என்பவர், பெண் இனத்தையே மிகவும் பழிப்பவராகவும், ஆண்களை பெண்களது வலையில் விழாதபடி இருக்கச் செய்வதில் விருப்பம் உள்ளவராகவும் இருந்தார். திருமணம் செய்து வைப்பதன் நோக்கம், ஈரக் கட்டையைப் புழு நாசம் செய்ய ஏற்பாடு செய்வதைப் போன்றதுதான், என்பது அவர் கருத்து. குடும்ப வாழ்வில் பிணைப்பு ஏற்படுத்திக் கொள்வதும், மனிதனின் இயல்பான வளர்ச்சிக்குக் குந்தகம் விளைவிக்கும் என்று கருதப்பட்டது. ராஜா ஸல்வானும், நாத் யோகியின் சிஷ்யனாகவே இருந்தான் என்று குழந்தை பூரன் பிறந்த வயது முடியும் வரை அவனைக் குடும்பத்திலிருந்து விலக்கி வைத்து, கடுமையான கட்டுத்திட்டங்களின் அடிப்படையில் வளர்க்க வேண்டும். என்று பூரன் பிறந்த உடனே நிச்சயம் செய்து விட்டான். அவ்விதம் செய்தால், பூரனின் மன வளர்ச்சி, நல்ல முறையில் நிகழக்கூடும் என்று அவன் நம்பினான். இரக்கமற்ற முடிவுதான் அது; என்றாலும், தனது மகனின் நன்மையை உத்தேசித்த அரசன் தன் மனத்தைக் கல்

ஆக்கிக் கொண்டான் என்று கவி கூறுகிறார்:

"பூரன் இக் ஹனேரியோ பா$_{3}$ஹர் ஆயா,
தூ$_{3}$ஜீ கோட$_{2}$ரீ தே$_{3}$ விச் பாதித்தா
காத$_{3}$ர் யார் மோயா பூரன் ப$_{4}$க$_{3}$த் தாயீ,
பா$_{3}$ப் ஜம்மிதி$_{3}$யா கைத்$_{3}$ கரா தி$_{3}$த்தா

"ஒரு வகை இருட்டிலிருந்து பூரன் வெளிவந்த உடன், மற்றொரு விதமான இருட்டறைக்கு அனுப்பப்பட்டான். பூரன் பிறந்தவுடனேயே அவனைச் சிறைப்படுத்தி விட்டான் அவனது தந்தை," என்பதுதான் இதன் பொருள்.

நாத் யோகியின் கொள்கைப்படி இந்த முடிவு சரியானதாக இருந்திருக்கலாம்; ஆனால் யோகிகளின் சாதனைகள், இயற்கையின் நியதிகளை மீறுவதாக உள்ளன. தாயும் மகனும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திருந்தால், பரஸ்பரம் ஆண்–பெண் என்ற உறவைத் தவிர வேறு எந்த விதமான உறவும் அவர்களிடையே ஏற்பட இயலாது. எந்த விஷயத்திலிருந்து நமது மனத்தை விலக்கி வைக்க விசேஷமான நடவடிக்கை எடுக்கிறோமோ, அதன் பேரில்தான் மனம் அதிகமாக ஈடுபாடு கொள்கிறது.

தனது மகனை அவனுடைய தாயிடமிருந்து பிரித்து வைத்த அரசன் ஸல்வான், தான் மட்டும், மேலும் ஒரு திருமணம் செய்து கொண்டான். அவனுடைய யௌவனம் தேய்ந்து கொண்டு வந்தது. அவனது புது மனைவியோ, பூரண இளமையுடன் விளங்கினாள். ஆக, அரசன் தனது புது மனைவியின் கைப்பிடிக்குள் அடங்கிவிட்டதில், ஆச்சரியப்பட ஏதுமில்லை. கவி கூறுகிறார்:

"ஜோம் ஜாயே ராஜே ஸல்வான் ஆந்தீ$_{3}$
இக் ஸ்திரீ ஹோார் வியாஹ்ற கே ஜீ
ஒஹதீ$_{3}$ ஜாத் சமியாரோ தே நா லூணா,
க$_{4}$ர் ஆயீ ஸோ ஈன் மனாகே ஜோ"

(ராஜா ஸல்வான் புதிதாக மணம் செய்து கொண்ட லூணா என்ற பெயர் கொண்ட ஸ்திரீ, சக்கிலிய குலத்துடன் தொடர்பு கொண்டவள்; தனது கோரிக்கைகளுக்கு அரசனைச் சம்மதிக்கச் செய்த பிறகே, அரசனின் இல்லத்தில் நுழைந்தாள் அவள்.)

தனது குகையில் வாழ்ந்து வந்த பூரன், வளர்ந்து கொண்டிருந்தான். ஸல்வானோ, தனது மனைவியே கதி என்று கிடந்தான். தந்தை-மகன், இருவருக்குமிடையே அன்போ, மரியாதையோ உருவாகவில்லை. ஒருவருக்கொருவர் அந்நியராக இருந்தனர். இருவருடைய ஈடுபாடுகளும் வெவ்வேறாக இருந்தன. பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு சிறையிலிருந்து வெளிவந்த பூரன், அரச தர்பாருக்குச் சென்று, தந்தையை வணங்கினான். நீண்ட கால இடைவெளிக்குப் பின் சந்தித்துக் கொண்ட தந்தையும் தனயனும், ஒருவருக்கொருவர், தமது நிலைகளை விளக்கிக் கொண்டனர். பெண் சுகத்திற்கு அடிமையாகிப்போன அரசன், தனது மகனுக்கு உடனே திருமணம் நிகழ்த்திவிட வேண்டும் என்று விரும்பினான். ஆனால் ஸத்தியம், சமய வாழ்வு ஆகியவற்றில் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்த பூரன், திருமணம் என்ற சங்கிலியினால் தன்னைப் பிணைத்து ஆண்டவன் மீது பக்தி செலுத்த இயலாதவனாகத் தன்னை ஆக்க வேண்டாம், என்று தந்தையிடம் கூறினான். பக்தர்களும், குடும்ப வாழ்வில் ஈடுபட்டவர்களும் ஒன்று சேர்வது கடினமானது. ஆக, வாழ்வின் குறிக்கோள் பற்றி இரண்டு மாறுபட்ட கொள்கைகளுக்கு இடையே மோதல் ஏற்பட்டது.

அரச பதவியில் இருக்கும் தந்தைக்கும், பக்தனான மகன் பூரனுக்கும் இடையே, அரச தர்பாரிலேயே சிக்கல் உருவாகிவிட்டது. தனது ஆணை அலட்சியம் செய்யப்படுவதைச் சகித்துக் கொள்ளும் வழக்கம் இல்லை அரசனுக்கு. தனது மகன் பூரனுக்கு விரோதமாக அரசர் ஏதேனும் உத்தரவு பிறப்பித்து விடுவாரோ, என்று பதறினார் மந்திரி. அரசகுமாரர் விவரம் அறியாதவர், என்று கூறி மன்னனைச் சாந்தப்படுத்தினார் அவர். பின்னர், சில வேலையாட்களைத் தனது மகனுடன் அனுப்பி, அவன் தனது தாய்மார் இருவரையும் வணங்கிவிட்டு வர வேண்டும் என்று உத்தரவிட்டான் ஸல்வான்.

யோக சிட்சையில் தேர்ந்த பூரனுக்கு, ராஜ தர்பாரின் விதிகளைப் பற்றியோ, அரண்மனையில் கோலாகலங்கள்

பற்றியோ தெரிந்திருக்கவில்லை. அவன் சென்ற வழியில் முதலில் எதிர்ப்பட்டது, லூணாவின் மாளிகைதான். உடல் உறவு தவிர, இல்லற வாழ்வின் வேறு எந்த ஒரு அம்சத்தைப் பற்றியும் லூணா அறிந்தவளில்லை. தாயாகும் பேற்றையும் அவள் இதுவரை பெறவில்லை. கணவனின் மோக வெறியைத் தவிர வேறு எதையும் அவள் அனுபவித்த தில்லை. கணவனைத் தவிர வேறு எந்த ஒரு ஆணும் அவளது மாளிகையில் நுழைந்ததில்லை. லூணாவைப் பொறுத்த வரை, எல்லா ஆண்களும் ஒரே விதமானவர்கள்தாம். அவள் அதிகமாகப் படித்ததில்லை. தர்மம், கடமை ஆகியவை பற்றியும் ஒன்றும் அறியாதவளாக இருந்தாள், அவள். அரச குமாரன் பூரனைக் கண்ட அவள் புளகாங்கிதம் கொண்டாள். ஆனால், தன்னை "அம்மா" என்று அவன் அழைத்ததைக் கேட்ட அவளது உடல், ஆத்திரத்தினால் துடித்தது. தானே இதுவரை தாய்மை அடையாமல் இருக்கும்போது, சக்களத்தியின் மகனைத் தன் மகனாக எவ்வாறு அவள் ஏற்றுக் கொள்வாள்? பூரன் அவளை "அம்மா" என்று அழைத்தது, மிகவும் கொடுமையான செயலாக அவளுக்குத் தோன்றியது. தன்னைப் பரிகசிக்கும் செயலாக அதை அவள் கருதினாள்.

அரசனின் மீது அதிகாரம் செலுத்தியே பழகியவள் லூணா. அவள் தன் மனத்தில் தோன்றிய ஆசையை வெளியிட்டாள். கவி சொல்கிறார்:

"ஜோயே ஜாஹரா ஆக்தீ$_3$ ஷர்ம்கேஹா,
மாயீ மாயீ நா ராஜியா ஆக்$_2$ மைநூ
குக்கோ$_2$ ரக்$_2$நா ஜமியோ ஜாயியோ வே
மாயீ ஆக்$_2$தா யே கேஹடே$_3$ ஸாக் மைநூ "

லூணாவும் பூரனும் அடிப்படையில் மாறுபட்ட எண்ணங்களை வெளியிட்டனர். ஒருவரைப் பொறுத்தவரை, வாழ்வின் குறிக்கோள், விஷய சுகம் அனுபவிப்பதுதான். மற்றவருக்கோ வாழ்க்கையில் இருக்கக் கூடிய ஒரே மனோரதம், யோக நிலையை அடைவதே. இருவருக்குமே, ஒருவரையொருவர் புரிந்து கொள்வது இயலாத காரியமாக இருந்தது. அரண்மனை வாழ்வின் பழக்கவழக்கங்கள்,

பூரன்–லூணா இருவரையுமே முறையான வாழ்க்கையிலிருந்து, பிரித்து விட்டிருந்தன. முறையான வாழ்க்கையை அறியாத இரு ஜீவன்கள், பரஸ்பரம் அந்நியர் போல நடந்து கொண்டன. லூணாவுக்குப் பூரன் பதில் சொல்வதாகக் கவி கூறுகிறார்:

"ஜிஸ்தீ$_3$ ஸ்திரீ தூ ஓஹ்றைு பா$_3$ப் மேரா,
தேரா ஷிகம் ஹோ ஜமியா ஜான் மாயே "

பூரனின் பதிலைக் கேட்ட லூணாவின் மயிர்க் கால்கள் குத்திட்டு நின்றன. ஒரே சமயத்தில் அவளுக்குப் பிரியமாகவும், விஷம் போன்றும் விளங்கினான் பூரன். அவனை அடைய வேண்டும், என்று அவள் விரும்பினாள்; அந்த் விருப்பம் நிறைவேறாவிட்டால் அவனுடைய உயிரையே பலி வாங்கவும் அவள் தயாராக இருந்தாள். தனது மோகத்தையும், வெறுப்பையும் ஒரே சமயத்தில் வெளிப்படுத்தினாள் அவள்.

அவள் சொல்லுவதாகக் கவி கூறுகிறார்:

"காஃப்$_2$ கத்ல் கராவூங்$_3$கீ பூரணா வே,
ஆகே$_2$ லக்$_3$ ஜாஜே ப$_4$லா சாஹுணா யே
ஜோ$_4$லீ அட்$_3$ட்$_3$ கே க$_2$டீ$_3$ மை பாஸ் தேரே,
ஹைஸியாரியா கை$_2$ர் நா பாவுனா யே "

பூரனுக்குத் தன் உயிர் மேல் ஆசையிருந்தால், அவன் அவளுடைய விருப்பத்துக்கு ஏற்றபடி நடந்து கொள்ள வேண்டும்; இல்லையானால் தனது உயிரை இழக்கச் சித்தமாக இருக்க வேண்டும், என்பதைத் தெளிவுபடுத்தி விட்டாள் லூணா. ஆனால், தனது உடல் மீது இருந்த பற்றை விட, தனது தர்மத்தையே உயர்வாகக் கருதினான் பூரன். தர்மத்தின் பாதையிலேயே செல்லத்தான் அவன் விரும்பினானே அல்லாமல், அந்தப் பாதையிலிருந்து விலகி அல்ல. கவி கூறுகிறார்:

"அகோ$_2$ பரத் கே நஜுர் நமூல் கர்ஸா,
ஐபர் ஸூலோ தே சத$_3$ன் கபூ$_3$ல் கர்ஸா
கன்னீ கிச்$_2$ச$_2$ கே அந்த$_3$ரோ பா$_3$ஹர் ஆயா,
ஆகே$_2$ த$_3$ர்ம க$_3$வாயே கே நாஹ் மர்ஸா "

தர்மத்தையும் சாவையும் யார் முதன் முதலில் இணைத்துப்

பேசினார்களோ, அவர்கள் நிச்சயம் தூரதிருஷ்டி உடையவர்களாகத்தான் இருந்திருக்க வேண்டும். தர்மத்தின் பாதையில் சாவு குறுக்கிடவில்லையானால், அந்தத் தர்மம் வெறும் ஆடம்பரத் தன்மையும், பெருமையும் கொண்டது, என்று கூறிவிடலாம். "முடியாது" என்ற பதிலை அளித்து விட்டு எந்த மாளிகையை விட்டு அவன் வெளி யேறினானோ, அதே மாளிகையில் அவனுடைய சாவுக்கான உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. தனது மாளிகையை விட்டுப் பூரன் வெளியேறிய உடன், லூணா, தனது அலங்காரத்தைக் கலைத்துக் கொண்டாள். அழுக்கடைந்த துணிகளை உடுத்துக் கொண்டாள். இரவு வந்ததும், அந்த மாளிகைக்கு வந்த அரசன், அதன் தோற்றத்தைக் கண்டு வியப்படைந்தான். மெழுகுவர்த்திகள் ஏற்றப்பட்டு இருக்கவில்லை. லூணா, இருட்டறை ஒன்றில் படுத்திருந்தாள். அவளுடைய நகைகளும் ஆடைகளும் இங்குமங்குமாகச் சிதறிக் கிடந்தன. அரசன் இவற்றுக்கான காரணத்தை வினவிய உடன், லூணா பெரிதாக அழ ஆரம்பித்தாள். தனது உடைந்த வளையல்களையும் கிழிந்த மேல் துணியையும் காட்டி, அரசனிடம் பூரனைப் பற்றிக் கூறினாள். அவளுடைய வார்த்தைகளைக் கேட்ட அரசனின் உடல் ஆத்திரத்தில் நடுங்கியது. தர்பாரில் மகனைச் சந்தித்த போதே, அவனுடைய பேச்சுக்கள் பிடிக்கவில்லை அரசனுக்கு. அரண்மனையில் மட்டுமல்ல; அரசனுடைய மனத்திலும் இருள் சூழ்ந்து கொண்டது. அவனது மனதுக்கு உள்ளேயும், வெளியிலும் ஒளி ஏதும் காணப்படவில்லை. மரண தண்டனையை நிறைவேற்றும் பணியாளர்களுக்கும் செய்தி அனுப்பி வைத்தான் அரசன்; இருட்டில் உட்கார்ந்தவாறே, தனது மகனுக்கு மரண தண்டனை அளிக்கும் உத்தரவைப் பிறப்பித்தான். ஐசுவர்யத்திற்கும், ஈரமற்ற நெஞ்சத்திற்கும் மிக நெருங்கிய நட்பு உள்ளது. தனது மகனைக் கொலை செய்ய உத்தரவிட்டதன் மூலம், தனது ஐசுவர்யம் குறையாமல் இருக்க வழி செய்ததாக அரசன் நினைத்திருக்கலாம்.

மறு நாள் உயிர்ப் பலி வாங்கும் நாளாக உதயமாகியது. சூரியனுக்கு நீரை அர்க்கியம் செய்யும்போது,

அரண்மனைப் புரோகிதரின் கைகள் நடுங்கின. ஊரில் கடைகள் மூடி இருந்தன. மக்கள் தம் வீட்டுக் கதவுகளையும் ஜன்னல்களையும் மூடி வைத்திருந்தனர். பூரன் மரணத்தை நோக்கிச் சந்து பொந்துகள், கடைத் தெருக்கள் வழியே சென்று கொண்டிருந்தான். சிறிதும் பயம் இல்லாதவனாக பூரன் முன்னே சென்று கொண்டிருக்க, அவன் பின்னே பயந்து நடுங்கும் மரண தண்டனையை நிறைவேற்றும் பணியாளர்கள் சென்று கொண்டிருந்தனர். அவர்களுக்கும் பின்னே தலையிலும் கால்களிலும் ஏதும் அணியாத இச்சரா கதறி அழுதவாறே சென்றாள். இச்செய்கையை எதிர்த்துக் குரல் எழுப்புவதற்கு, நகரில் யாருக்குமே துணிவு இருக்கவில்லை. அரசாட்சி ஒவ்வொருவனையும் வாயை மூடிக் கொண்டிருக்கச் செய்துவிடும் அன்றோ!

பூரன் துடிதுடித்துச் சாக வேண்டும், என்பது அரசனின் ஆணை. பூரனுடைய கைகளும் கால்களும் வெட்டப்பட்டு, அவன் கிணற்றில் தொங்கவிடப் பட வேண்டும், என்று அரசன் ஆணையிட்டிருந்தான். பூரனுடைய நிலை, பார்ப்பவருக்குப் படிப்பினையாக இருப்பதுடன், அவனும் கதறிக் கதறி உயிர் விட வேண்டும், என்பதுதான் அரசனுடைய எண்ணம். அரசர்கள், தண்டனை அளிப்பதுடன் நின்று விடாமல், அதைத் தமக்கான ஒரு விநோதமான பொழுதுபோக்காகவும் கருதினர். குற்ற வாளிக்கு எத்தனைக் கெத்தனை துன்பம் அதிகமாகக் கொடுக்க முடியுமோ அத்தனைக்கத்தனை அரசர்களுக்குச் சந்தோஷம் அதிகம்.

கொலையாளிகள் திரும்பிச் சென்று, பூரனின் கைகளை யும், கால்களையும் வெட்டி, அவனை ஒரு பாழும் கிணற்றில் தொங்கவிட்டு இருப்பதாக அறிவித்தனர். இதை அறிந்த நகரம் முழுதும் கதறி அழுதது. ஆனால் யாரும் பூரனைக் காப்பாற்றிவிடக் கூடிய நிலையில் இல்லை. அதனல்தானோ என்னவோ, துடித்துக் கொண்டிருந்த அவனைக் காண, ஒருவரும் செல்லவில்லை. பூரனின் தலைவிதிதான் என்ன! முதலில் தாயின் கர்ப்பவாசம்; பிறகு தந்தை அளித்த சிறைவாசம்; தற்சமயம் இளைய தாயாரின் தயவினால்

கிடைத்துள்ள பரிசு, கிணற்று வாசம். ஒரு இருட்டிலிருந்து, இரண்டாவது இருட்டு; மறுபடியும் மூன்றாவது இருட்டில் வாசம். மூன்றாவது இருட்டானது, அவனது இதயத்தில் விளங்கிய ஜோதியை, மிக அதிகப் பிரகாசம் உள்ளதாக ஆக்கியது.

சிறிது நேரத்திற்குப் பிறகு, நாத் யோகிகளின் குழுவினர், அதே கிணற்றுக்கருகில் முகாமிட்டனர். வருடக் கணக்காக மூடிக் கிடந்த, நாற்றம் கொண்ட தண்ணீரில் வாளியை விட்டவுடன், மனிதக் குரல் ஒன்று கிணற்றின் உள்ளேயிருந்து பேசுவது தெரிய வந்தது. "இவ்வளவு நேரத்துக்குப் பிறகாவது யாரோ என்னைக் கவனிக்க வந்துவிட்டார்களே!" யோகிகள் முதலில் பயந்து விட்டனர். இது கிணறு அல்ல; பூதங்கள் வசிக்கும் இடம் போல இருக்கிறது என்று எண்ணினர். ஆனால் யோகிகளின் தலைவர், குரு கோரக்நாத், கிணற்றுக்குள் கவனமாகப் பார்த்தார். உள்ளே இருப்பது பிசாசல்ல; ஒரு மனிதன் தொங்கிக் கொண்டிருக்கிறான், என்பதை அறிந்து கொண்டார். குருவின் ஆணையின்படி மற்ற யோகிகள், உள்ளே தொங்கிக் கொண்டிருந்த மனிதனை வெளியே கொண்டு வந்தனர். பூரனுடைய கைகள் அவற்றிற்கு உரிய இடத்திலேயே இருந்தன, என்று கூறப்படுகிறது. குருகோரக் நாத்தின் அருளினால் அவற்றைப் பூரன் திரும்பப் பெற்றானா? அல்லது கொலையாளிகள் அரசனது ஆணையைச் சரியாக நிறைவேற்றவில்லையா? பூரனைப் பொறுத்த வரையில் அவனுடைய கைகள் மட்டுமல்ல உடல் உறுப்புகள் எல்லாமே செயலிழந்து விட்டிருந்தன. தேங்கிக் கிடந்த, நாற்றமெடுத்த நீரைப் போலவே, தனது சரீரமும் ஊறிக்கிடந்ததாக அவனுக்குத் தோன்றியது. தனது சரீரத்தை எப்போதுமே அவன் எந்த ஒரு வேலையிலும் ஈடுபடுத்தியதில்லை. கிணற்றிலிருந்து வெளி வந்த பூரன், குரு கோரக்நாத்தின் சரணங்களில் வீழ்ந்து, தனக்கு தீட்சை அளிக்கும்படி வேண்டினான்.

சிஷ்யர்கள் மிகவும் சிரமப்பட்ட பிறகுதான், குரு தீட்சை அளிப்பது வழக்கம். தீட்சைக்கு முன்னர், சிஷ்யனுக்குப் பரீட்சைகள் வைப்பதும் வழக்கமாக இருந்தது. ஆனால்

பூரனோ ஏற்கனவே, மிகவும் கடுமையான சோதனைக்கு உட்பட்டுவிட்டிருந்தான். பெற்றோர்கள் பாசம், உலகப் பற்று இரண்டுமே அவனைப் பொறுத்தவரையில் நசிந்து விட்டிருந் தன. குரு அவனுக்குத் தீட்சை அளித்தார். அவனுடைய காதுகளில் ஓட்டைகள் போடப்பட்டு, குண்டலங்கள் மாட்டப்பட்டன. ஆனால், இன்னும் ஒரு சோதனை பாக்கி இருந்தது. ஆசை வெறி கொண்ட பெண்ணிடமிருந்து அவன் தப்பித்து விட்டான். ஆனால் அவன் மீது காதல் கொண்ட ஸ்திரீ அவன் மீது வீசக் கூடிய வலையிலிருந்து அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிறானா, என்று சோதிப்பது மீதமிருந்தது.

மறுநாள் தனது கழுத்தில் பை ஒன்றைத் தொங்க விட்டுக் கொண்டு, பிட்சைக்குக் கிளம்பினான் பூரன். ஒருபுறம் அவனது தந்தையின் நகரம் இருந்தது. ஆனால் அதற்குள் அவன் செல்வது இயலாத காரியம். மறுபுறம், ராணி சுந்தராவின் தலைநகரம் இருந்தது. அந்நகரத்தின் எல்லாப் பொறுப்புகளையும் பெண்களே நிர்வகித்து வந்தனர். ஏற்கனவே ஒருமுறை, ஸ்திரீ ஒருத்தியின் சூழ்ச்சிக்குப் பலியாகிவிட்டிருந்தான் பூரன். ஆனாலும் பிட்சை எடுத்தாக வேண்டுமே! தனது தந்தையின் ஊர்ப் பக்கம் செல்வதை விடப் பழக்கமில்லாத ஒரு ஸ்திரீயின் நகரத்துக்குச் செல்வதே மேல், என்று பூரன் கருதினான். ஸ்திரீயும் யோகிக்கு ஒரு சோதனைதானே;

ராணி சுந்தரா, மிகுந்த ரூபவதியாகவும் வாலிபப் பருவத்தினளாகவும் இருந்தாள். ஆனால் தனது நேர்மையில் அவளுக்கு இருந்த ஈடுபாடு தனது இளமை குறித்து அவள் கொண்டிருந்த கர்வத்தை விட அதிகமாக இருந்தது. பூரன், அந்த ராணியின் மாளிகை வாசலுக்குச் சென்று, ஆண்டவனின் பெயரைச் சொல்லிப் பிட்சை கேட்டான். இது, சுந்தரா, பூரன் இருவருக்குமே வைக்கப்பட்ட சோதனை யாயிற்று. ராணியின் பணிப் பெண்கள் பூரனின் ரூப சௌந்தரியத்தைக் கண்டு அதிசயித்து நின்றனர். பிறகு சுந்தராவிடம் திரும்பிச் சென்று, இத்தனை அழகு வாய்ந்த யோகிக்கு, ராணியே நேரிடையாகப் பிட்சை அளிக்க

வேண்டும் என்று கூறினர். அதுவரை கடுமையான கட்டுக் கோப்புக்குள் அடங்கி இருந்து, அவர்களுக்கும் அலுத்து விட்டது போலும். தன்னைச் சோதனைக்கு உள்ளாக்கத் தனது பணிப் பெண்களும் விரும்புகின்றனர், என்பதை ராணி புரிந்து கொண்டாள். மேல் மாடத்தில் நின்றவாறே, கீழே காத்து நின்ற யோகியைப் பார்த்த அவளது கண்கள், வியப்பினால் மலர்ந்தன. தட்டு ஒன்றில் வைரங்களையும் முத்துக்களையும் எடுத்துக் கொண்டு, தானே வாசலுக்குச் சென்றாள் அவள். ஆனால் பூரனோ, அவளையோ அவள் கையிலிருந்த வைரம்–முத்துக்கள் நிரம்பிய தட்டையோ பார்க்கவில்லை. தனது பையில் ராணி இட்டதை எடுத்துக் கொண்டு, மலைக்குத் திரும்பி வந்து சேர்ந்தான், பூரன்.

அவன் பெற்று வந்த பிட்சையான வைரங்களையும், முத்துக்களையும் கண்ட குரு என்ன கூறினார், என்பதைக் கவி சொல்கிறார்:

"நூன் நஹீ ஏஹ தெ₃ளலதா கம் ஸாடே₃,
கு₃ரா ஆஷிகியா மோட்₃ கே ஆ பூதா
ஏஹ லைண் ஃபகீரா தா₃ கம் நாஹீ
பக்கா போ₄ஜன் ஜா மங்லியா பூதா"

முதல் பரீட்சையில் பூரன் தேறிவிட்டான். ஆனால் குரு, அவனை மீண்டும் அதே சோதனைக்கு உட்படுத்தினார். சுந்தராவிடமே மறுபடியும் பிட்சைக்கு அனுப்பினார். இரண்டாவது முறையாகத் தன்னிடம் பிட்சை பெறப் பூரன் வந்ததைக் கண்ட சுந்தராவுக்கு, தனது சௌந்தர்யமும் செல்வமும், தான் விரும்பிய பயனைக் கொடுத்து விட்டதாகத் தோன்றியது. சமைத்த உணவைப் பூரன் கோரியது கண்ட சுந்தரா, பல்வகையான உண்டிகளைத் தயாரிக்கச் செய்தாள். அவற்றை எடுத்துப் பணிப் பெண்களையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு கிளம்பினாள் பூரனுடன். தானும் அவனுடைய குருவுக்கு வணக்கம் செலுத்த விரும்புவதாகக் கூறினாள். செல்லும் வழியெல்லாம் சுந்தராவின் பார்வை, பூரனின் இளமை ததும்பும் உருவத்தின் மீதுதான் இருந்தது. ஆனால் பூரனோ, நடக்கும் போதும் சமாதி நிலையில்தான் இருந்தான்.

மலையை அடைந்த சுந்தரா, எல்லா யோகிகளுக்கும் போஜனம் செய்வித்தாள். குறைந்த ஆகாரம், கடுமையான நியதிகள் ஆகியவற்றையே பல வருடங்களாகக் கண்டிருந்த யோகிகளுக்கு இவ்வளவு சத்துள்ள உணவு, அதுவும் திகட்டிப் போகும் அளவுக்குக் கிடைத்தது. ராணியின் சேவையில் மன மகிழ்ந்த குரு கோரக்நாத் அவளிடம் தமது மகிழ்ச்சியை வெளிப்படுத்தி, வரம் ஏதும் விரும்பினால் கேட்கும்படி ஆக்ஞாபித்தார். தனது மனத்துள் வீசிக்கொண்டிருந்த புயலை மறைத்தவாறு சுந்தரா கூறினாள்: "குருஜீ, ஆண்டவன் புண்ணியத்துலே அவன் குடுத்த எல்லாமே இருக்கு. இப்போ, வேறெ எதுக்கும் அவசியமில்லே!" எல்லாம் அறிந்த குரு மறுபடி அவளிடம் கூறினார்: "எல்லாமே கிடைச்சாக் கூட, ஏதேனும் ஒரு ஆசை பாக்கி இருக்கத்தான் செய்யும்; ஏதாவது கேளு!" தனது இதயத்தின் அபிலாஷையைக் கட்டுப்படுத்திக் கொள்வது, ராணிக்கு இம்முறை சிரமமாகத் தான் இருந்தது. ஆனால் தனது பணிப்பெண்களுக்கு எதிரே, தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு கூறினாள்: "மஹராஜ்; நீங்க எல்லாத்தையும் அறிஞ்சவங்க. உங்க கிருபைதான் வேணும்!" சிறிது நேரத்தில், பணிப்பெண்கள் அங்கிருந்து விலகிச் சென்று விட்டனர். குரு கோரக்நாத் சொன்னார்: "சந்தர்ப்பத்தை நழுவ விட்டுட்டா, அப்புறம் கைக்கு ஒண்ணும் கிடைக்காது. மூணாவது தடவையா நான் சொல்றேன், ஏதாவது வேணும்னாக் கேளு!" சுந்தராவின் மனோதிடம் சிதைந்து போயிற்று. ஆனால், வாய் திறந்து எதையும் சொல்ல அவளால் இயலவில்லை. கண்களாலேயே தனது விருப்பத் தைத் தெரிவித்தாள்.

சுந்தராவுடன் செல்லும்படி குரு, பூரனுக்கு உத்தரவிட்டார். நெருப்பைப் போல ஜொலிக்கும் சுந்தராவும், நிழலைப் போன்ற பூரனும் சேர்ந்தாற்போலச் சென்று கொண்டிருந் தனர், நெருப்பும் நீரும் இணைந்தது போல. இருவருக்குமே சோதனைக் காலம். குரு, தன்னை மற்றும் ஒருமுறை நெருப்பில் தள்ளிவிட்டதைப் பூரன் உணர்ந்து கொண்டான். தன்னுடைய தகுதி நிர்ணயிக்கப்படும் காலம் அது, என்பதையும் அவன் புரிந்து கொண்டிருந்தான்.

அரண்மனையை அடைந்த சுந்தரா, பூரனைச் சிம்மாசனத்தில் அமரச் செய்தாள். ஆனால், பூரனுக்கோ அது முள்ளாகக் குத்தியது. அவன் சிம்மாசனத்திலிருந்து எழுந்து நின்று கொண்டான். ராணி அவனைக் கட்டிலில் உட்கார்த்தி வைத்தாள்; ஆனால், உறங்க உபயோகிக்க வேண்டிய அக்கட்டிலில் சமாதி நிலையில் அமர்ந்து விட்டான் பூரன். அவனுடைய மன ஒருமைப்பாடு, ஜோதியாக ஜொலித்த வண்ணம் இருந்தது. இரவு முழுதும் சரீரம் ஜொலிக்கும் அற்புதத்தைப் பார்த்தவாறே ராணியும் விழித்திருந்தாள். பொழுது விடிந்ததும், காலைக் கடன்களைக் கழிப்பதற்காகப் பூரன் மாளிகையை விட்டு வெளியேறினான். சுந்தராவினால் அவனைத் தடுக்க இயலவில்லை. அவள் தனது பணிப் பெண்களை அனுப்பி அவனைப் பின் தொடரச் செய்தாள். காலைக் கடன்கள் முடிந்த பிறகு, மாளிகையை நோக்கித் திரும்பாமல், மலையை நோக்கிக் கிளம்பினான் பூரன். பணிப் பெண்கள் அவனை வழி மறித்து, மாளிகைக்குத் திரும்பும் படி கேட்டுக் கொண்டனர். "யோகியானவன் திரும்பிச் செல்லுதல் கூடாது; எந்த விஷயம் ஒருமுறை தியாகம் செய்யப்படுகிறதோ, அதை மறுபடி ஏற்றுக் கொள்ளுதல் தகாது," என்றான் பூரன்.

"உங்க குருதானே, உங்களை ராணியோட போகும்படி சொன்னாரு?"

"குருவோட உத்தரவுப்படிதான், நான் சுந்தராவோட போயிருந்தேன்?"

"பின்னே, அங்கேயே ஏன் தங்கமாட்டேன்கிறீங்க?"

"கூடப் போகும்படிதான் குரு சொன்னார்; அங்கேயே தங்கும்படி குரு சொல்லலே!"

பணிப் பெண்கள் பூரனிடம் பல முறை சொல்லிப் பார்த்தனர். பிரகாசிக்கும் ஒளிப்பிழம்பைப் போல இருந்த பூரன், அணைந்து போக விரும்பவில்லை. அவனைத் தொடுவதற்கே பயமாக இருந்தது பணிப்பெண்களுக்கு. அவர்கள் மாளிகைக்குத் திரும்பிச் சென்றனர். பணிப் பெண்கள் தனியே திரும்பி வருவதைக் கண்ட ராணி, மனமுடைந்து போனாள். அவள் தனது மாளிகையின் மேல்

மாடத்திற்கு ஏறிச் சென்று பூரன் சென்ற திசையைப் பார்த்த வண்ணம் நின்றாள். ஆனால் அவனது முதுகைத் தவிர அவளால் வேறு எதையும் பார்க்க இயலவில்லை. மடிந்து போன தனது காதலை எண்ணிக் கதறிய சுந்தரா, பைத்தியம் பிடித்தவள்போல, பூரனை அழைக்க ஆரம்பித்தாள். கவி கூறுகிறார்:

"ரே ரங்மஹல் தே சட்$_3$ ரானீ,
ரோ ரோ ஆங்க்தீ பூரனா லுட் கி$_3$யோ
பா$_3$க் வெஷளக் தே$_3$ பக் தையார் ஹோயே,
நேஹ லாயே கே பூரனா புட் கி$_3$யோ
க$_4$டீ பை$_3$ட்$_2$ நா கீத்தியா ரஜ் க$_3$ல்லா,
ஜூ$_4$டீ$_2$ ப்ரீதீ லகா$_3$யே கே உட்$_3$ கி$_3$யோ
காத$_3$ர்யார் மியா ஸஸ்ஸீ வாங்க்$_3$ மைனூ,
தஉலா விச் குர்லாவூந்தீ$_3$ ஸூட் கி$_3$யோ

பூரனின் உருவம் சுந்தராவுக்குத் தென்படாமல் தொலைவில் சென்று மறைந்தவுடன், தனது மாளிகையின் உச்சியிலிருந்து குதித்து உயிரை விட்டாள், சுந்தரா. நகரமே துயரத்தில் ஆழ்ந்தது.

தன் முன்னே வந்து நின்ற பூரனைக் கண்ட குரு, வியப்பில் ஆழ்ந்தார். பூரன் அது வரை தனது தாய்-தந்தையரைப் பற்றியோ, பிறந்த மண்ணைப் பற்றியோ நினைக்கவில்லை. லூணாவைப் பற்றிப் புகாரும் செய்யவில்லை. சுந்தராவிடம் மோகமும் கொள்ளவில்லை. உண்மையில் அவன் பிரம்மஞான நிலையை அடைந்து விட்டிருந்தான். புகழ்ச்சி-இகழ்தல் இவற்றிலிருந்து விலகியவனாகவும், வெறுப்பி லிருந்து விடுதலை பெற்றவனாகவும் இருந்தான். குரு கோரக்நாத், மற்றவர்களுக்குத் தீட்சை அளிக்கும் தகுதி, பூரனுக்கு வந்து விட்டது என்பதைப் புரிந்து கொண்டார். அகில உலகுக்கும் தீட்சை அளிக்குமாறு அவனை ஆக்ஞாபித்த அவர், அந்த நல்ல காரியத்தை அவனுடைய பிறந்த மண்ணிலிருந்தே ஆரம்பிக்குமாறு கூறினார். இத்தகைய சிட்சை மற்றேல்லோரையும் விட, உனது தந்தைக்கும் சிற்றன்னைக்குமே அதிக அளவு அவசியமாக உள்ளது என்று அவர் பூரனிடம் கூறினார்.

குருவின் ஆக்ஞைப்படி, பூரன் தனது நகரத்தை நோக்கிச் சென்றான். தனது நகரை விட்டுப் பிரிந்த காலத்திற்கும், திரும்பிச் செல்லும் இச்சமயத்திற்கும் இடையில் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்து விட்டிருந்தன. ஸல்வானின் நற்செயல்கள் பற்றிய கீர்த்தி மங்க ஆரம்பித்து விட்டிருந்தது. லூணாவுக்கும் தனது இளமை நழுவிச் செல்வது தெரிய ஆரம்பித்தது. அவள் இன்னும் தாயாகவில்லை. தன்னுடைய உடல் ஏதோ, சாபத்துக்கு உள்ளாகியிருப்பதாகத் தோன்றியது. இச்சரா வைப் பொறுத்தவரை, கதறிக் கதறியே அவள் குருடியாகி விட்டிருந்தாள். பூரனுக்கு விரோதமாக, அரசன் அக்காலத்தில் பிறப்பித்த உத்தரவைப் பற்றி, நகர மக்கள் யாருமே பிரஸ்தாபிக்கவில்லை. அரசனுடைய உத்தரவை, மக்கள் ஏற்றுக் கொள்ளவே இல்லை என்றே தோன்றியது. அந்த நகர வாசிகள் ஒவ்வொருவரும் பிரமை பிடித்தவர் போலக் காணப்பட்டனர். பூரன் பிறந்த நாளை ஒட்டி, ஸல்வான், ஒரு பூந்தோட்டம் நிர்மாணித்திருந்தான் அக்காலத்தில். ஆனால், பூரனின் மீது ஏற்பட்டிருந்த வெறுப்பினால், அந்தத் தோட்டத்தைக் கூட அவன் சரிவரப் பராமரிக்கவில்லை. கவனிப்பாரற்று, சிதைந்து போயிருந்த அதே தோட்டத்திற்கு வந்து சேர்ந்தான் பூரன்.

உலகில் எதுவுமே முழுவதுமாகச் சிதைந்து போவதில்லை.

Printed at Pressworks, Delhi